# டால்டா வனஸ்பதி நீங்கள் செலவு செய்யும் பணத்திற்கு முழுப் பிரயோஜனத்தைத் தருகிறது



ஆட்டத்தில் வெற்றிபெற
எனக்குத் தேவையான சக்தியை
**டால்டா** அளிக்கிறது...

ஆட்டங்களில் வெற்றிபெறவேண்டியவர்கள் மட்டுந்தான் உடல் நலத்துடன் இருக்கவேண்டுமென்பதில்லை—நாம் எல்லோரும் ஆரோக்கியத்தையும், சக்தியையும் பெறவேண்டியது முக்கியம். டாக்டர்கள் அவர்களுக்கு தேவையென்று கூறும் சக்தியளிக்கும் கொழுப்பு உங்கள் குடும்பத்தினருக்குக் கிடைக்கின்றதா என்பதை நிச்சயப்படுத்திக்கொள்ளுங்கள். டால்டாவினால் சமையல் செய்யத்தவறாதீர்கள்.

**மாமிசம் சாப்பிடவேண்டியது அவசியமா?**
இலவச ஆலோசனைகளுக்கு இன்றே—அல்லது
என்று வேண்டுமானாலும்—எழுதுங்கள் :
**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**
தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1




# டால்டா

**உங்களை ஆரோக்கியமாக வைத்திருக்கும் சமையல்-கொழுப்பு**

HVM. 186-50 TM

கல்கி

# பொருளடக்கம்

மலர் 12 | இதழ் 27 | 1953 பிப்ரவரி 1 | நந்தன ஞு தை மீ 19உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



சென்னை மோட்டார் வர்த்தகர்கள் சங்கத் தலைவர்

**ஸ்ரீ டி. எஸ். சந்தானம்**

24-1-1953ல் மேற்படி சங்கத்தின் 26வது வருஷ பொதுக் கழகக் கூட்டத்தில் செய்த

## பிரசங்கத்தின் சாரம்

சென்ற வருஷத்துக்கும் இவ்வருஷத்துக்கும் இடைப்பட்ட நாட்களில் நமது நாட்டில் மாபெரும் தேர்தல் நடந்தது. அந்தத்தேர்தலில் நம் நாடு ஜனநாயக ஆட்சி முறைக்குத் தகுதியான நாடுதான் என்று தீர்ப்பாயிற்று. நிலையான மந்திரி சபை மத்திய அரசாங்கத்தில் ஏற்பட்டது. ஸ்ரீ ஸி. ராஜகோபாலாச்சாரியார் அவர்கள் கடமை உணர்ச்சியால் உந்தப்பட்டு, நமது ராஜ்யத்துக்கு முதல் மந்திரி பதவி ஏற்றார். அவருக்கு நமது மனப்பூர்வமான ஒத்துழைப்பை எப்போதும் அளிக்கத்தயாராயிருக்கிறோம்!

நமது சங்கம், மோட்டார் சாமான்களை விற்கும் சங்கமாக மட்டுமின்றி, உபயோகப்படுத்தும் சங்கமாகவும் இருக்கிறது. ஆகவே, நம் முதல் மந்திரி ராஜாஜி, பஸ் போக்கு வரத்தைத் தேசிய மயமாகச் செய்யப் போவதில்லை என்று பிரகடனப் படுத்தியதற்கு நாம் மிகவும் கடமைப் பட்டவர்களாகிறோம்.

நமது சர்க்கார், ரோடுகளில் மோட்டார்கள் போவதற்காக விதிக்கும் வரி மிகவும் அதிகமாக இருந்து வருகிறது. சென்னையில் ஒரு பஸ் மொத்த வருமானத்தில் நாற்பது சத விகிதம் வரியாகக் கொடுக்கிறது. அதாவது கிட்டத்தட்ட வருஷத்துக்கு ரூ. 12,000/- மத்திய சர்க்காருக்கும் சென்னை சர்க்காருக்கும் வரியாகக் கொடுக்கிறது. வேறு எந்தத் தொழில் மீதும் இவ்வளவு வரிச் சுமை இல்லை. வேறு எந்தத் தொழிலிலும் இத்தனை மறைமுக வரி விதிப்பு இல்லை. பெட்ரோல் விற்பனை வரி 4 அணுவிலிருந்து 6 அணு ஆக்கப்பட்டது. இவை போதாதென்று புதிதாக வந்துள்ளது மோட்டார் வரி. அதாவது பிரயாணிகள் மீதும் சாமான்கள் மீதும் விதிக்கப்பட்ட வரி. வருஷத்துக்கு ஒரு பஸ்ஸுக்கு ரூ. 1,500/-ம் லாரிக்கு ரூ. 270/-ம் விதிக்கப் படுகிறது.

இப்படி வரி விதிக்கப்படுவதனால் போக்குவரவு குறையவும் அதனால் வருமானம் குறையவும் ஏதுவுண்டு. சுதந்திரமடைந்த நாளிலிருந்து நமது நாட்டை இரண்டு பிரச்னைகள் ஆட்டி வருகின்றன. ஒன்று, யுத்தம் முடிந்த பின் ஏற்பட்டுள்ள தீமைகளும் கஷ்டங்களும். இரண்டாவது, சுதந்திர நாட்டிலே இதைச் செய்ய முடியவில்லை, அதைச் செய்ய முடியவில்லையே என்ற துடிப்பு.

1952 மார்ச்சு மாதத்திலிருந்து பொதுவாக மார்க்கெட்டில் வியாபார மந்தம் ஏற்படலாயிற்று. மக்களுடைய வாங்கும் சக்தி குறைந்து வந்தது. 1946 லிருந்து வரி விதிப்பு வருஷத்துக்கு வருஷம் அதிகமாகி வந்தது. ஆகவே, தொழில் துறையிலும், வியாபாரத் துறையிலும் மக்களிடத்திலும் பணம் சேமிப்பு வெகுவாகக் குறையத் தொடங்கியது.

ஐந்து வருஷத் திட்டம், 2,000 கோடி ரூபாய் செலவழிக்கப் போவதாகக் கூறுகிறது. அதற்குள் இரண்டு ஆண்டுகள் சென்றுவிட்டன. இந்தத் திட்டத்தில் விவசாயத்துக்கும், மின்சார உற்பத்திக்கும், போக்கு வரவு சாதனங்களுக்கும் மற்றுமுள்ள தேச புனர் நிர்மாண வேலைகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. ரோடு போக்கு வரத்துக்கு இந்த ஐந்து வருஷத் திட்டத்தில் நல்ல முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக நடத்தி வைத்தால் தேசத்தில் செல்வம் பெருகும். விவசாயத் துறையிலும், தொழில் துறையிலும் பெரிதும் முன்னேற வாய்ப்பு அளிக்கும்.

1951-ம் வருஷத்தில் கார்களும் டிரக்குகளும் உற்பத்தி 1856 ஆக இருந்தது. 1952-ல் கொஞ்சம் கொஞ்சமாக 774க்குக் குறைந்துள்ளது. இவ்விதம் உற்பத்திக் குறைவுக்குக் காரணம், குறைவான வியாபாரம்தான். உள்நாட்டுத் தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பதாக இறக்குமதி வரியை உயர்த்தியதனால் கார்களின் விலை உயர்ந்தது. இதை அறிந்தே இறக்குமதி வரி உயர்வை வன்மையாக நமது சங்கம் எதிர்த்தது.

கடைசியாக சென்னை அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்வது யாதெனில் விற்பனை வரி விதிப்புக்கு நிர்ணயமான சட்ட திட்டங்கள், முக்கியமாக மோட்டார் வியாபார சம்பந்தப்பட்ட மட்டிலாவது, வகுத்துக்கொள்ள வேண்டும் என்பதே. மோட்டார் வியாபாரிகள், மோட்டாருக்குத் துணையான சாமான்கள் விற்கும் வியாபாரிகள் யாவரையும் ஒரு மகாநாடு கூட்டுவித்து, பிரச்னைகளை நன்கு ஆலோசித்து சென்னை ராஜ்யம் முழுவதற்கும் ஒரு திட்டம் வகுத்துத் தரும்படி சென்னை சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 27

# வாழ்க நிரந்தரம்! வாழ்க சுதந்திரம்!

சத்தியத்தின் வலிமை, ஆத்ம சக்தியின் பெருமை, அஹிம்சையின் சிறப்பு, முயற்சியின் வெற்றி ஆகியவற்றுக்கு நம் நாளில் ஒப்பற்ற உதாரணமாயிருப்பது பாரத நாடு இன்று சுதந்திர நாடாக இருப்பதாகும்.

இன்றைக்குப் பத்தாண்டுகளுக்கு முன்னால், 1943ம் வருஷம் ஜனவரி மாதத்தில், இந்திய தேசம் இவ்வளவு விரைவில் சுதந்திரம் அடையப் போகிறது என்று நம்மில் லட்சத்தில் ஒருவர்கூட நம்பிக்கை பெற்றிருக்கவில்லை. அத்தகைய நம்பவும் முடியாத பெரும் பேற்றை நம் காலத்தில் நாம் பிறந்த நாடு பெறக் கண்டோம்.

பத்து ஆண்டுகளுக்கு முன்னால் அன்னிய பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அரசியல் அடிமைகளாக இருந்தவர்கள் இன்றைக்கு உலகத்தின் முன்னிலையில் சுதந்திர புருஷர்களாகத் தலைநிமிர்ந்து நிற்கிறோம்.

மற்றும் பல நாடுகளைப் போல் பாரத தேசம் லட்சக் கணக்கான போர் வீரர்களைப் பலி கொடுத்து, நாடு நகரங்கள் அழிந்து, பொருளாதாரம் சின்னாபின்னமாகி, இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடிய பிறகு அரசியல் சுதந்திரம் பெறவில்லை.

காந்தி மகான் காட்டிய பாதையைக் கூடியவரை பின்பற்றி நடந்த காரணத்தினால் மிகக் குறைவான கஷ்ட நஷ்டங்களுடன் தேசத்தின் சுதந்திரப் போர் வெற்றியடைந்து விட்டது. சுதந்திரம் நம்ப முடியாத துரித காலத்தில் வந்து விட்டது. உரித்த வாழைப்பழம் வாயில் விழுவது போன்ற வழுவழுப்பான தோரணையில் அன்னிய ஆட்சி மாறிக் குடியரசு ஏற்பட்டு விட்டது.

இது நம் முன்னோர்கள் செய்த தவத்தின் பயன். தாதாபாய் நௌரோஜி முதல் நேதாஜி சுபாஷ் வரையில் நம் ஒப்பற்ற தலைவர்கள் செய்த தியாகத்தின் பயன். காந்தி மகாத்மாவின் ஆத்ம சக்தியினால் நாம் அடைந்த மகத்தான பாக்கியம்.

ஆயினும் அத்தகைய பெறற்கரும் பாக்கியம் நமக்குக் கிடைத்திருக்கிறது என்பதை நம்மில் பலர் இன்னமும் நன்கு உணராமலே இருந்தோம்.

சென்ற வருஷ ஆரம்பத்தில் நடந்த பொதுத் தேர்தலின்போது தென்னிந்திய மக்கள் ஓரளவு இதை உணர்ந்து கொள்ளுவதற்கு ஏது ஏற்பட்டது.

அந்தத் தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகர்கள் பலர் தோற்றுப் போனார்கள். காங்கிரஸ் மந்திரிகள் பலரும் தோல்வியடைந்தார்கள். இது மிகவும் துரதிருஷ்ட சம்பவந்தான். தேசத்துக்கு விடுதலை வாங்கிக் கொடுத்த மகத்தான காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தென்னிந்திய மக்களில் பலர் இவ்வாறு புறக்கணித்து விட்டார்களே என்று வருந்தினோம்.




ஆயினும் அந்த நிலைமையிலிருந்தும் ஒரு நன்மை விளைந்தது. "இந்த நாடு இப்போது சுதந்திர நாடு; இந்த நாட்டின் மக்கள் சுதந்திர மக்கள்" என்று ஏற்பட்டது. மக்கள் விரும்பினால் ஒருவரை அரசாட்சி பீடத்தில் வைக்கலாம் என்றும், விரும்பாவிட்டால் அவரைக் கீழே இறக்கி விடலாம் என்றும்

நிச்சயமாயிற்று. "ஆமாம்! இந்த நாட்டின் ஆட்சியை நடத்துவோர் நாமேதான்" என்ற நம்பிக்கை பொது மக்களிடையே நிலை பெறுவதற்குக் காரணமாயிற்று.

"நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்ற மகாகவியின் வாக்கு இன்றைய தினம் பலித்துக் காரியத்தில் அமுல் நடந்து வருகிறது என்பதைப் பற்றி இனி யாரும் சந்தேகிப்பதற்கு இடமில்லை.

அத்தகைய பெரும் பாக்கியத்தை அடைந்திருக்கும் நாம் அதற்குரிய பெரும் பொறுப்பையும் வகித்தே தீர வேண்டும்.

நீண்ட நாளாக அடிமைப்பட்டிருந்த தேசம் அரசியல் சுதந்திரம் பெறுவது மகத்தான சாதனைதான். பெற்ற சுதந்திரத்தை நீடித்துக் காப்பாற்றுவது அதைவிடப் பெரிய சாதனையாகும்.

ஜனவரி 26-ம் தேதி திங்கட்கிழமை கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீரம் வரையில் இந்தியக் குடியரசு தினம் கொண்டாடப்பட்டது. பொது மக்களும் பொது மக்களின் பிரதிநிதிகளும், மந்திரிகளும், இராஜ தந்திரிகளும், அரசாங்க அதிகாரிகளும் இராணுவ வீரர்களும், கவர்னர்களும் கவர்னர் மாளிகைச் சிப்பந்திகளும் சேர்ந்து குடியரசுத் திருநாளைக் குதூகலமாகக் கொண்டாடினார்கள்.

இந்தியாவின் சுதந்திரம் சிரந்தரமாயிருக்க வேண்டுமென்று அன்றையதினம் நாடெங்குமுள்ள அறிவாளிகள் பிரார்த்தனை செய்தார்கள்.

சுதந்திரத்தின் விளைவான சுபிட்ச வாழ்வைப் பாரத மக்கள் கூடிய விரைவில் அடைய வேண்டுமென்றும் பிரார்த்தனை செய்தார்கள்.

அந்தப் பிரார்த்தனையில் நாமும் நமது நேயர்களும் கலந்து கொள்கிறோம்.

பாரத நாட்டின் சுதந்திரம் நீடூழி நிலைத்து நிற்க வேண்டுமென்றும், பாரத நாட்டில் நவநிதியும் பல வளமும் செழித்துப் பாரத மக்கள் சகல நலன்களையும் எய்தி வாழ வேண்டுமென்றும் இறைவனைப் பிரார்த்திக்கிறோம்.

# "ஆந்திர ராஜ்யத்துக்கு ஜே!"

ஸ்ரீ நிபதி வாஞ்சு ஆந்திர ராஜ்ய ஸ்தாபனார்த்தமாக ஆரம்பித்த சுற்றுப் பிரயாணத்தை ஏறக்குறைய முடித்து விட்டார். அவர் சென்ற இடங்களிலெல்லாம் ஆந்திர சகோதரர்களின் கூச்சல் போடும் ஆற்றல் இவ்வளவு என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டிருப்பார். ஆனால் ஆந்திர ராஜ்யத்துக்குத் தலைநகரம் எங்கே ஏற்படுத்துவது என்பது பற்றி அவருடைய மூளை ஏறக்குறையக் குழம்பிப் போயிருக்கும். அவ்வளவு வித்தியாசமான அபிப்பிராயங்களை ஆந்திர சகோதரருடைய ஆங்காங்கு தெரிவித்துக் கொண்டார்கள்.

சென்னை நகரத்தின்மீது கொண்ட அஞ்ஞான மோகத்தை இன்னும் விட்டு விடவில்லையென்பதை ஒரு கூட்டத்தார் வற்புறுத்தித் தெரிவித்து வந்தார்கள். இவர்களில் முன்னணியிலிருந்தவர்கள் பிரஜா சோஷலிஸ்டுகள். "சென்னை நகரைக் கமிஷனர் மாகாணமாக்க வேண்டும்" என்ற பல்லவியை ஒவ்வொரு ஊரிலும் பிரஜா-சோஷலிஸ்டுகள் விடாமல் பாடினார்கள். அவர்களுடைய பல்லவிக்கு அநுபல்லவி பாடினார்கள் காங்கிரஸ் வாதிகள்.

சென்னை நகரத்துக்கும் ஆந்திர இராஜ்யத்துக்கும் சம்பந்தமில்லை என்பது தீர்ந்துபோன விஷயமாயிருந்தும் அதைப் பற்றியே எல்லாரும் பேசியது நிபதி வாஞ்சுவுக்கு முதலில் வேடிக்கையாக இருந்தது; பிறகு சலிப்பை அளித்தது.

"சென்னை நகரத்தைப் பற்றிக் கேட்டுக் கேட்டுக் காது புளித்துப் போய்விட்டது; உங்களுக்குச் சம்பந்தமுள்ள மற்ற சமாசாரத்தைச் சொல்லுங்கள்!" என்று நிபதி வாஞ்சு அலறும் அளவுக்குச் சென்னை நகரைப் பற்றி ஆந்திர சகோதரர்கள் சொன்னார்கள். இதிலிருந்து ஆந்திர ராஜ்யத்தைப் பற்றி அவர்களுக்குள்ள அக்கறையைக் காட்டிலும் சென்னை நகரம் தமிழ் நாட்டுக்குப் போகக்கூடாது என்பதில் அக்கறை அதிகம் என்பதைக் காட்டினார்கள்.

"க்ரோதாத் பவதி ஸம்மோஹ:
ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம:
ஸ்ம்ருதிப்ரம்சாத் புத்திநாச:"

என்று பகவத் கீதையில் பகவான் கூறியது எவ்வளவு உண்மையானது என்பது அதிலிருந்து நிதர்சனமாக வெளியாயிற்று.

சென்னை நகரத்தைத் தவிர மற்ற எந்த விஷயத்திலும் ஆந்திர சகோதரர்கள் ஒற்றுமையான அபிப்பிராயம் கொண்டிருப்பதாக வெளியாகவில்லை.

"சென்னையில் ஆந்திரத் தலைநகரம் இருக்க வேண்டும். அப்படியில்லாமற் போனால், எங்கள் ஊரில் தலைநகரம் இருக்க வேண்டும்" என்று திருப்பதி முதல் விசாகப் பட்டினம் வரையில் உள்ள ஒவ்வொரு பட்டணத்தைச் சேர்ந்தவர்களும் சொன்னார்கள். நெல்லூர், குண்டூர், எல்லூர், விஜயவாடா, மசூலிப்பட்டினம், காக்கிநாடா முதலிய ஒவ்வொரு பட்டணத்திலும் "சென்னையில் இல்லாவிட்டால் எங்கள் ஊரில் தலைநகரம் வையுங்கள்" என்றார்கள். அவர்கள் எல்லாருடைய விருப்பத்தையும் நிறைவேற்றுவதாக இருந்தால் தலைநகரம் என்று ஏற்படுத்துவதற்குப் பதிலாக தலையிலுள்ள கண், காது, மூக்கு, பல், புருவம் முதலியவற்றைத் தனித் தனியாகப் பிய்த்து எடுத்து, கண் நகரம், காது நகரம், மூக்கு நகரம், பல் நகரம், என்றெல்லாம் ஏற்படுத்த வேண்டியதாகும். இத்தனை பிரஜா-சோஷலிஸ்டு தலைவர்களும், காங்கிரஸ் தலைவர்களும் கூடி ஆலோசித்து ஒரு தலைநகரத்தைக் குறிப்பிட்டு, அதையே ஆந்திரப் பொது ஜனங்கள் ஒப்புக் கொள்ளும்படி செய்ய அவர்களால் முடியவில்லை!

இவ்வளவு மாறுபட்ட அபிப்பிராயங்களுக்கு மத்தியில் உறுதியுடன் ஒரேவிதமான கருத்தைக் கூறியவர்கள் கம்யூனிஸ்டுகள்தான் என்பதைக் குறிப்பிட்டே தீரவேண்டும்.

சென்னை நகரின் பேரில் கம்யூனிஸ்டுகள் பாத்தியதை கொண்டாடவில்லை. சென்னை நகரத்தைக் கமிஷனர் மாகாணமாக்க வேண்டும் என்றும் கேட்கவில்லை. சென்னையில் தாற்காலிகமாக ஆந்திரத் தலைநகரை அமைப்பதையும் கண்டித்தார்கள். ஆந்திர ராஜ்யத்தின் மத்தியில் உள்ள விஜயவாடாவிலே தான் தலைநகரம் அமையவேண்டும் என்று வற்புறுத்தினார்கள். புதிய தெலுங்கு வருஷப் பிறப்பு தினத்தன்று ஆந்திர ராஜ்யம் ஏற்பட்டுவிட வேண்டும் என்றும் சொன்னார்கள்.

சித்தூர் முதல் விசாகப்பட்டினம் வரையில் உள்ள ஒவ்வொரு ஊரிலும் கம்யூனிஸ்டுகள் இதே அபிப்பிராயத்தைத் தெரிவித்து வற்புறுத்தினார்கள்.

கம்யூனிஸ்டுகளின் கட்சிக் கட்டுப்பாட்டின் உயர்வையும் அவர்கள் இந்தக் காரியத்தில் நேர்மையாக நடந்து கொள்வதையும் பாராட்டியே தீரவேண்டும்.

"ஆந்திர ராஜ்யம் சீக்கிரம் ஏற்பட்டு விட்டால் கம்யூனிஸ்டுகள் அரசாங்கத்தைக் கைப்பற்றிக் கொள்ளலாம்" என்ற ஆசையில் அப்படி அவர்கள் நடந்து கொள்வதாகச் சொல்லப்படுகிறது.

அரசாங்கத்தைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எந்த அரசியல் கட்சிக்கும் இருக்கத்தான் வேண்டும். அந்த ஆர்வம் இல்லாவிடில் அரசியலுக்கே வரவேண்டியதில்லை யல்லவா!

அரசாங்கத்தைக் கைப்பற்றுவதற்கு அரசியல் கட்சிகள் கைப்பற்றும் முறை நேர்மையானதா என்பதைத் தான் கவனிக்க வேண்டும். இப்படிப் பார்க்கும்போது, கம்யூனிஸ்டுகள்தான் இந்த விஷயத்தில் நேர்மை முறையைக் கடைப்பிடிக்கிறார்கள் என்று ஏற்படுகிறது.

"ஆந்திர ராஜ்யக் கிளர்ச்சிக்குப் பிறகு ஆந்திர நாட்டில் கம்யூனிஸ்டுகளின் செல்வாக்கு விழுந்து வருகிறது; காங்கிரஸின் செல்வாக்கு உயர்ந்து வருகிறது!" என்று ஒரு ஆந்திர காங்கிரஸ் தலைவர் ஹைதராபாத் காங்கிரஸின்போது கூறினார். இது நிலைமையை இன்னும் மோசமாகச் செய்கிறது.

சென்னை நகரின் உரிமையை விட்டுவிடத் தயாராயிருப்பதால் ஆந்திர கம்யூனிஸ்டுகளின் செல்வாக்குக் குறைந்து வருகிறது என்று காங்கிரஸ் வாதிகள் கருதுகிறார்கள். இந்த விஷயம் கம்யூனிஸ்டுகளுக்கும் தெரிந்துதானிருக்க வேண்டும். அப்படியிருந்தும் அவர்கள் சென்னை உரிமையைக் கைவிடவும் விஜயவாடாவைத் தலைநகராக்க ஒரு மனதாக வற்புறுத்தவும் முன் வருவது வியப்பான காரிய மல்லவா! மற்றவர்களோடு சேர்ந்து அவர்களும் "மதராஸ் மனதே" என்று கோஷமிட்டுக் கொண்டிருந்து விட்டு, தலை நகரம் தீர்மானமானதும் அரசாங்கத்தைக் கைப்பற்ற முயற்சிக்கலாம் அல்லவா!

* * *

ஆந்திரத் தலைவர்களின் ஒற்றுமையை வேண்டி பொட்டி ஸ்ரீராமுலு பரிதாப மரணம் அடைந்த சமயத்தில், ஆந்திர தேசத்தின் சில இடங்களில் "ஆந்திர ராஜ்யமு காவல!" "அரவவாடு சாவல!" என்ற கோஷங்கள் எழுந்ததாக அறிந்தோம். இதைக் கேட்டபோது தமிழ் மக்களில் பகுத்தறிவுள்ளவர்கள் சிரிக்கத்தான் சிரித்தார்கள். தமிழர்கள் பதினாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகப் பண்பாட்டில் சிறந்தோங்கி வந்திருப்பவர்கள். உலகத்திலேயே மிகப் புராதனமான இனத்தவர்கள். இன்று "அரவவாடு சாவல" என்று கோஷமிடும் ஆந்திரர்கள் தமிழினத்திலிருந்து மிகச் சமீப காலத்தில் பிரிந்து போனவர்கள்தான். இந்தச் சரித்திர பூர்வமான உண்மையை ஆந்திரர்கள் இப்போது மறந்து விட்டாலும் சரித்திரத்திலிருந்து எடுத்துவிட முடியாது.

தமிழினம் இப்படிப்பட்ட சாபங்களுக்கெல்லாம் பயந்து அழிந்து போய் விடாது.

தமிழர்கள் ஆந்திர ராஜ்யம் ஏற்படுவதற்கு எப்போதும் தடையாக நிற்கவில்லை; இப்போதும் குறுக்கே நிற்கவில்லை.

ஆந்திர ராஜ்யம் சீக்கிரம் ஏற்பட வேண்டுமென்பதில் ஆந்திரர்களுக்குள்ள ஆர்வத்தைக் காட்டிலும் தமிழர்களுக்கு உண்மையில் ஆர்வம் அதிகமாயிருக்கிறது. மேலும் மனக் கசப்பு வளர்வதற்கு முன்னால் ஆந்திர ராஜ்யம் பிரிந்து விட வேண்டுமென்றுதான் தமிழர்கள் ஆசைப்படுகிறார்கள்.

தலை நகரம் சம்பந்தமாக ஆந்திர சகோதரர்கள் வெளியிட்டிருக்கும் மாறுபட்ட அபிப்பிராயங்கள் ஆந்திர ராஜ்ய ஸ்தாபனத்துக்குத் தடையாகப் போகின்றனவே என்றுதான் அஞ்சுகிறோம்.

நீதிபதி வாஞ்சு அவர்களின் மூளை அளவுக்கு மீறிக் குழம்பிப் போயிருக்குமோ, அதனால் அவர் ஒரு திட்டமான முடிவைச் சொல்லுதல் தாமதப்படுமோ என்றுதான் கவலைப்படுகிறோம்.

நீதிபதி வாஞ்சு அத்தகைய மனக் குழப்பத்துக்கு இடங் கொடாமல் ஆந்திர ராஜ்ய ஸ்தாபனத்துக்கு ஒரு திட்டமான தேதியைக் குறிப்பிட்டு, ஒரு நிச்சயமான தலை நகரையும் தேர்ந்தெடுத்துச் சொல்ல வேண்டுமென்றுதான் விரும்புகிறோம்.

இந்த இரண்டு காரியங்களும் நிச்சயமாகி விட்டால் புதிய ஆந்திர ராஜ்யத்தை அமைத்துத் தருவதில் தமிழ் மக்கள் எல்லா விதத்திலும் ஒத்துழைக்கத் தயாரா யிருப்பார்கள். "ஆந்திர ராஜ்யத்துக்கு ஜே!" என்று பெருங் கோஷமிட்டு ஆந்திர சகோதரர்களை உற்சாகப் படுத்தவும் முன் வருவார்கள்.

சிறுவந்தாடு கிராமத்தில் ஜனவரி மாதம் 25உ ஒமந்தூரார் ஆஸ்பத்திரியை ராஜாஜி அவர்கள் திறந்து வைத்தார்கள். ★ ★ ★

1. மேளதாள வைபவங்களுடன் தலைவர்களுக்கு வரவேற்பு; 2. விழாவுக்குத் தலைமை வகித்த ஸ்ரீ காமராஜ நாடார்; 3. ராஜாஜிக்கு அருகில் நின்று கொண்டிருக்கும் டாக்டர் அருணாசலம் ஆஸ்பத்திரி ஊழியர்களின் விடுதியைத் திறந்து வைத்தார்; 4. கூட்டத்துக்குத் திரளாக வந்திருந்த பெண்மணிகள்; 5. விழாவுக்கு வெளியூர்களில் இருந்து வந்திருந்த சுமார் இரண்டாயிரம் விருந்தினர்களுக்கும் அறுசுவை விருந்து அளிக்கப்பட்டது; 6. விழாப் பந்தலுக்குள் குழுமியிருந்த ஜனக் கூட்டம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 85

## சக்கரவர்த்தியின் கோபம்

**ம**ந்தாகினியை மற்ற அரண்மனைப் பெண்டிர் சிற்ப மண்டபத்தில் கண்டு பிடித்த சமயத்தில் சக்கரவர்த்திக்கும் முதன் மந்திரிக்கும் கடுமையான வாக்கு வாதம் நடந்து கொண்டிருந்தது.

மலையமான் மகள் அங்கிருந்து சென்றவுடனேயே முதன் மந்திரி அநிருத்தர் "மன்னர் பெரும! பெண்மணிகள் இருக்கும்போது சில விஷயங்கள் சொல்லக் கூடாது என்றிருந்தேன். இப்போது அவற்றைச் சொல்லித் தீர வேண்டியதாயிருக்கிறது. வீர பாண்டியனுடைய ஆபத்துதவிகள் இன்னமும் இந்த நாட்டில் மறைந்து திரிந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கொடுமையான சபதத்தை நிறைவேற்றுவதற்குத் தக்க சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

"இது ஒன்றும் புதிதில்லையே? எனக்குத் தெரிந்த செய்திதானே? பழுவேட்டரையர்கள் அந்தக் காரணத்தைக் கொண்டே எனக்கு இத்தனை பலமான பாதுகாப்பு ஏற்படுத்தியிருக்கிறார்கள் அல்லவா?" என்று சக்கரவர்த்தி ஏளனச் சிரிப்புடன் கூறினார்.

"ஆபத்துதவிகளின் விஷயம் தங்களுக்குத் தெரிந்ததுதான். ஆனால் அந்தச் சதிகாரர்களுக்குச் சோழ ராஜ்யத்தின் பொக்கிஷத்திலிருந்தே பொருள் உதவி கிடைத்து வருகிறது என்பது தங்களுக்குத் தெரிந்திருக்க முடியாது!" என்றார் முதன் மந்திரி.

"ஆகா! இது என்ன கட்டுக் கதை!" என்றார் சுந்தர சோழர்.

"இதைக் காட்டிலும் பிரமிப்பான கட்டுக் கதைகள் சிலவற்றையும் தங்களுக்கு நான் சொல்ல வேண்டியிருக்கிறது. பெரிய பழுவேட்டரையரின் பொக்கிஷ நிலவறையிலிருந்து புதிய பொற்காசுகள் ஆபத்துதவிகள் கூட்டத்தின் மத்தியில் குவியலாகக் கொட்டப்பட்டிருந்தன. கண்ணால் பார்த்தவனாகிய என் சீடன் திருமலை இதோ இருக்கிறான். தாங்கள் பணித்தால் அதைப் பற்றி விவரமாகச் சொல்லுவான்......"

"வேண்டியதில்லை. தலைமுறை தலைமுறையாகச் சோழ குலத்துக்காக உயிரைக் கொடுத்து இரத்தம் சிந்தி வந்தவர்கள் பழுவேட்டரையர்கள். அவர்கள் என்னைக் கொல்லுவதற்காகச் சதி செய்யும் கூட்டத்திற்கு என் பொக்கிஷத்திலிருந்து பொற்காசு கொடுக்கிறார்கள் என்று அரிச்சந்திரனே வந்து சொன்னாலும் நான் நம்ப மாட்டேன்."

"மன்னிக்க வேண்டும். பழுவேட்டரையர்கள் மீது அத்தகைய துரோகக் குற்றத்தை நான் சுமத்தவில்லை. அவர்களுக்குத் தெரியாமலே சதிகாரர்களுக்கு

நம் பொக்கிஷத்திலிருந்து பொற்காசுகள் போகலாம் அல்லவா?"

"அது எப்படி முடியும்? யமன் அறியாமல் உயிர் போகக் கூடுமா, என்ன?"

"யமன் ஒருவேளை கிழப் பருவத்தில் இளமங்கை ஒருத்தியை மணம் செய்து கொண்டிருந்தால் அதுவும் சாத்தியமாகலாம், அரசே!"

"பெரிய பழுவேட்டரையர் இந்தப் பிராயத்தில் கலியாணம் செய்து கொண்டது எனக்கும் பிடிக்கவில்லை தான். அதை அவரிடமே சொல்லியிருக்கிறேன். அதற்காக இம்மாதிரியெல்லாம் அவர்மீது துரோகக் குற்றம் சுமத்துவதை என்னால் சகிக்க முடியாது."

"சக்கரவர்த்தி! பழுவேட்டரையர் மீது நான் துரோகக் குற்றம் சுமத்தவில்லை. அவர் மணந்துகொண்ட இளைய ராணி மீதுதான் சுமத்துகிறேன்."

"ஆண் பிள்ளைகள் மீது குற்றம் சுமத்துவதையாவது பொறுத்துக் கொள்ளலாம். துர்ப்பாக்கியவதியான அபலைப் பெண் ஒருத்தியின்மீது நீர் குற்றம் சுமத்துவது எனக்கு நாராசமாயிருக்கிறது."

"எவ்வளவு நாராசமாக இருந்தாலும் பழுவூர் இளைய ராணியைப் பற்றிய சில உண்மைகளைத் தங்களுக்கு நான் சொல்லியே தீர வேண்டும். ஒரு தடவை தங்களுக்கு நான் ஓர் உண்மையைச் சரியான சமயத்தில் சொல்லாதது பற்றி எவ்வளவோ வருத்தப்பட நேர்ந்தது. சற்று முன் தாங்களும் கோபித்துக் கொண்டீர்கள். ஆகையால் சிறிது பொறுமையாகக் கேட்க வேண்டும்."

முதன் மந்திரியின் இந்த சாமர்த்தியமான வார்த்தைகளைக் கேட்டுச் சக்கரவர்த்தி புன்னகை புரிந்தார். "என் வார்த்தையைக் கொண்டே என்னை மடக்குகிறீர்கள். அது என் சொந்தக் காரியம். அதற்கும் இதற்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. ஆயினும் சொல்லுங்கள், கேட்கிறேன்" என்றார்.

"பழுவூர் பெரிய அரண்மனைக்கு மூன்று வருஷங்களுக்கு முன்னால் இளைய ராணி நந்தினி தேவி வந்து சேர்ந்தாள். அது முதல் பழுவூர் அரண்மனைக்குச் சில மந்திரவாதிகள் அடிக்கடி வந்து போகிறார்கள். இது சின்னப் பழுவேட்டரையருக்கும் தெரியும். அவருக்கும் மந்திரவாதிகள் வருவது பிடிக்கவில்லை. ஆனாலும் தமையனை எதிர்த்துப் பேசத் தைரியமில்லாமல் சும்மா இருந்து வருகிறார்."

"சகோதரர்கள் என்றால், இப்படியல்லவா இருக்க வேண்டும்?"

"சகோதர விசுவாசத்தினால் இராஜ்யத்துக்குக் கேடு வரக் கூடாதல்லவா?"

"இப்போது இராஜ்யத்துக்கு என்ன கேடு வந்து விட்டது? ஒரு பேதைப் பெண் யாரோ மந்திரவாதிகளைக் கூப்பிட்டு மந்திரம் போடச் சொல்வதினால் இராஜ்யம் கெட்டுப் போய்விடுமா? பழுவூர் இளைய ராணி மந்திரம் போட்டுத்தான் எனக்கு நோய் வந்து விட்டதென்று சொல்லுகிறீர்களா?"

"சக்கரவர்த்தி! பழுவூர் இளைய ராணியைப் பார்க்க வருகிறவர்கள் உண்மையில் மந்திரவாதிகள் அல்ல. மந்திரவாதிகள் என்று சொல்லிக் கொண்டு வரும் சதிகாரர்கள் என்று சந்தேகிக்கிறேன். அவர்கள் மூலமாக நம் பொக்கிஷத்திலிருந்து பொருள் போய்க்கொண்டிருக்கிறதென்றும் சந்தேகிக்கிறேன்..."

"எதைப் பற்றி வேணுமானாலும் யாரைப் பற்றி வேணுமானாலும் சந்தேகிக்கலாம். ருசு ஏதேனும் உண்டா?"

"மன்னர் மன்ன! இன்றைய தினம் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையையும் பொக்கிஷ நிலவறையையும் சோதனை போட்டால் ஒருவேளை ருசுக் கிடைக்கலாம்."

"இதைக் காட்டிலும் எனக்குப் பிரியமில்லாத காரியத்தை இதுவரை யாரும் சொன்னது கிடையாது. அநிருத்தரே! நீர் எனக்கு மட்டும் நண்பர். பழுவேட்டரையர் எனக்கு முன் மூன்று தலைமுறையைச் சேர்ந்த சோழ சக்கரவர்த்திகளுக்கு உயிருக்குயிரான நண்பர். சோழ குலத்துக்கு இரும்புக் கவசம் போன்றவர். சோழர்களின் பகைவர்களுக்கு இந்திரனுடைய வஜ்ராயுதம் போன்றவர். அப்படிப்பட்டவருடைய மாளிகையை அவர் இல்லாதபோது சோதனை போடுவதா? பழுவேட்டரையர் தம் அரண்மனையில் சதிகாரர்களுக்கு இடங் கொடுக்கிறார் என்று நம்புவதைக் காட்டிலும், மலையமான் மகள் மருந்து என்று சொல்லி எனக்கு நஞ்சைக் கொடுக்கிறாள் என்று நம்புவேன்......"

"சக்கரவர்த்தி! பழுவேட்டரையருக்குத் தெரிந்து இது நடைபெறவில்லை. மோகத்தினால் கண்ணிழந்திருக்கும் பழுவேட்டரையருக்குத் தம் எதிரில் நடப்பதும் தெரியவில்லை. அவர் அறியாமலே அவருடைய மாளிகை சதிகாரர்களின் தலைமை ஸ்தலமாக இருந்து வருகிறது. பழுவூர் இளைய ராணியே சதிகாரர்களோடு சேர்ந்தவள் என்று நம்புவதற்கு இடமிருக்கிறது."

"அந்தப் பேதைப் பெண்ணைக் குறித்து இன்னும் என்ன அவதூறு சொல்லப் போகிறீர்கள்?"

"சில நாளைக்கு முன்பு திருப்புறம்பயம் காட்டில் பிருதிவீபதியின் பள்ளிப் படைக்கு அருகில் நள்ளிரவு வேளையில் மகுடாபிஷேக வைபவம் ஒன்று நடந்தது. ஒரு ஐந்து வயதுப் பிள்ளையைச் சிங்காதனத்தில் உட்கார வைத்துப் பாண்டிய மன்னன் என்றும் சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி என்றும் பட்டம் சூட்டினார்கள். இந்த மகுடாபிஷேக வைபவத்தில் கலந்து கொண்டவர்கள் சோழ குலத்தை அடியோடு நிர்மூலம் செய்வதாகவும் சபதம் எடுத்துக் கொண்டார்கள்......"

"முதன் மந்திரி! இந்தச் செய்தியைச் சொல்லி என்னைப் பயப்படுத்தலாம் என்று உத்தேசமா? என் கை கால்கள் நடுங்குமென்று எதிர்பார்த்தீரா?"

"இல்லை, சக்கரவர்த்தி, இல்லை! அந்தக் கேலிக் கூத்தை நான் ஒரு பொருட்டாக எண்ணவில்லை. அப்படிச் சபதம் எடுத்துக் கொண்ட சதிகாரர் கூட்டத்தில் பழுவூர் இளைய ராணியும் இருந்தாள் என்பதைத் தங்களிடம் சொல்ல விரும்பினேன்."

"அதையெல்லாம் அருகில் இருந்து பார்த்துவிட்டு வந்து தங்களுக்குத் தெரிவித்த புத்திசாலி ஒற்றன் யார்? அதோ நிற்கிறானே, தங்களுடைய அருமைச் சீடன், அவன்தானே?"

"எல்லாம் நடந்து முடிந்த பிறகு இவன் அங்கே போய்ச் சேர்ந்தான். நேரில் பார்த்தவன் வாணர் குலத்து வந்தியத்தேவன்......"

"இங்கே ஒரு தடவை வந்துவிட்டுத் தப்பி ஓடிப் போனானே, அந்த ஒற்றனையா சொல்லுகிறீர்?"

"அவன் ஒற்றன் அல்ல, பிரபு! தங்கள் திருக்குமாரர் ஆதித்த கரிகாலரின் அந்தரங்கத்துக்குரிய நண்பன்."

"கரிகாலனுக்கு இப்படிப்பட்ட அந்தரங்க நண்பர்கள் எத்தனையோ பேர். ஒருவர் சொன்னதுபோல் இன்னொருவர் சொல்ல மாட்டார்கள். அவன் கூறியது உண்மையாகவே இருக்கட்டும். அதற்காக இப்போது செய்யக் கூடியது ஒன்றுமில்லை. பெரிய பழுவேட்டரையரும் இங்கே இல்லை; அவருடைய இளைய ராணியும் இல்லை. அவர்கள் திரும்பி வந்த பிறகு விசாரித்துக் கொள்ளலாம். முதன் மந்திரி! பழுவூர் இளைய ராணியைப் பற்றி நீங்கள் சொல்லச் சொல்ல, அத்தகைய அதிசயமான பெண்ணைப் பார்க்க வேண்டும் என்று எனக்கே ஆர்வமுண்டாகி விட்டது. பழுவேட்டரையர் கலியாணம் செய்துகொண்டு வந்தபோது எனக்கு ஏற்பட்ட அருவருப்பினால் அந்தப் பெண்ணை என் முன்னால் அழைத்து வர வேண்டாம் என்று சொல்லியிருந்தேன். அதனாலேயே அவளுக்கு ஒருவேளை என் பேரில் கோபம் உண்டாகி விட்டதோ என்னமோ தெரியவில்லை. பெரிய பழுவேட்டரையர் இம்முறை திரும்பி வந்ததும் அவருடைய இளைய ராணியை அழைத்து வரச் செய்து அவளுடைய கோபத்தைத் தீர்க்கப் போகிறேன்......"

"சக்கரவர்த்தி! நான் விரும்புவதும் அதுதான். நந்தினி தேவியின் கோபத்தைத் தணிப்பதற்கு இன்னும் முக்கியமான காரணங்களும் இருக்கின்றன. நந்தினி வந்து சேரும் வரையில் ஈழத்து அரசி நமது அரண்மனையிலே இருப்பதற்கு அநுமதி தர வேண்டும்......"

"ஆகா! அவளை ஈழத்து அரசியாக முடி சூட்டி விட்டீர்கள் அல்லவா? போகட்டும்; அவளுக்கும் பழுவூர் ராணிக்கும் என்ன சம்பந்தம்?"

"அதைத்தான் கண்டு பிடிக்க வேண்டும், பிரபு! இருவரும் நேருக்கு நேர் சந்தித்தால் ஒருவேளை அந்த சம்பந்தம் தெரிய வரலாம். நந்தினிதேவி சோழ குலத்தின்மீது கொண்டிருக்கும் பகையும் ஒருவேளை மாறலாம்......"

"மந்திரி! ஒரு பெண்ணின் பகையைக் குறித்து நீங்கள் இவ்வளவு கவலைப்படுவது ஆச்சரியமாயிருக்கிறது......"

"நந்தினி தேவியின் பகையைக் குறித்துக் கவலைப்படக் காரணம் இருக்கிறது. அதை நான் சொல்வது உசிதமாயிருக்குமா என்று அஞ்சுகிறேன்......"

"தாங்கள் சொல்லத் தயங்குவதை வேறு யார் என்னிடம் சொல்ல முடியும்? மிச்சம் வைக்காமல் சொல்லிவிடுங்கள்" என்றார் சக்கரவர்த்தி.

முதன் மந்திரி சிறிது யோசனை செய்து விட்டுக் கூறினார்:—

"மன்னர் பெருமானே! இப்போது நான் கூறப் போவது மிகச் சிக்கலான விஷயம். தங்களுக்கு அது உகந்ததாயிருக்க முடியாது. ஆயினும் பொறுமையுடன் கேட்க வேண்டும். நந்தினி தேவியையும் மந்தாகினி தேவியையும் பார்த்தவர்கள் அனைவரும் அவர்களுடைய தோற்றத்தின் ஒற்றுமையைக் குறித்து அதிசயிக்கிறார்கள்......"

"உலகத்தில் இப்படி எத்தனையோ அதிசயங்கள் இருக்கின்றன. ஒரு மரத்தைப் போலவே இன்னொரு மரம் இருக்கிறது. ஒரு பைத்தியத்தைப் போல் இன்னொரு பைத்தியம் இருக்கிறது......"

"ஆனால் ஒரு மரம் இன்னொரு மரத்தைப்போல வேஷம் போட்டு நடிப்பதில்லை. ஒரு பைத்தியம் இன்னொரு பைத்தியத்தின் ஆவியைப் போல வந்து சக்கரவர்த்தியை இம்சிப்பதில்லை......"

"என்ன சொல்கிறீர், முதன் மந்திரி?"

"மந்தாகினி தேவியின் ஆவி தங்களை இரவு நேரங்களில் வந்து இம்சிப்பதாக எண்ணித் தாங்கள் வேதனைப் பட்டு வந்தீர்கள்......"

"அவளுடைய ஆவி வரவில்லை, அவளே வந்தாள் என்று சொல்லுகிறீரா?"

"இல்லை, இல்லை. பழுவூர் இளைய ராணி மந்தாகினியின் ஆவியாக நடித்துத் தங்களை இம்சித்திருக்க வேண்டும் என்று சொல்கிறேன்."

சுந்தர சோழர் சிறிது நிமிர்ந்து உட்கார்ந்து, கோபவெறி பொங்க, "நீங்கள் இப்போது சொல்வது மட்டும் உண்மை என்று ஏற்பட்டால், அந்த ராட்சஸியை என் கையினாலேயே கழுத்தை நெரித்து.." என்று கூறுவதற்குள், முதன் மந்திரி குறுக்கிட்டு, "வேண்டாம், சக்கரவர்த்தி! தங்கள் வாயால் அப்படியொன்றும் சபதம் கூற வேண்டாம்!" என்று பரபரப்புடன் சொன்னார்.

"ஏன்? அவள்பேரில் என்ன தங்களுக்கு அவ்வளவு இரக்கம்? என்னை அவ்வளவு தூரம் வேதனைப் படுத்தியவளை என்ன செய்தால்தான் என்ன?" என்று சுந்தர சோழர் பொங்கினார்.

"எவ்வளவுதான் கஷ்டப்படுத்தியிருந்தாலும், கஷ்டப்படுத்தியவர் நெருங்கிய பந்துவாயிருக்கும் பட்சத்தில்.........ஒரு வேளை சொந்தப் புதல்வியா யிருக்கும் பட்சத்தில்......" என்று முதன் மந்திரி கூறித் தயங்கி நின்றார்.

"முதன் மந்திரி! இது என்ன பிதற்றல்?" என்றார் சுந்தர சோழர்.

"சக்கரவர்த்தி! தங்களுடைய பொறுமையை உண்மையில் சோதித்து விட்டேன். அதற்காக எனக்கு உசிதமான தண்டனையைக் கொடுங்கள். ஆனால் நந்தினி தேவியைத் தண்டிப்பது பற்றிப் பேச வேண்டாம். நந்தினிதேவி தனாதிகாரி பழுவேட்டரையரின் இளைய ராணி மட்டும் அல்ல; மூன்று உலகமும் உடைய சுந்தரசோழ சக்கரவர்த்தியின் புதல்வி. அவரை எந்தக் குற்றத்துக்காக யார்தான் தண்டிக்க முடியும்?" என்றார் அநிருத்தப் பிரம்ம ராயர்.

இதைக் கேட்ட சக்கரவர்த்தி சிறிது நேரம் முதன் மந்திரியை அளவிலாத வியப்போடு உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு கலீர் என்று சிரித்தார்.

"சக்கரவர்த்தி! இன்றைக்கு மிகவும் ஸுதினம். இரண்டு தடவை தாங்கள் சிரிக்கக் கேட்டேன்" என்றார் அநிருத்தர்.

"பிரம்மராயரே! இந்த அரண்மனையில் இப்போது ஒரு பெண் பைத்தியந்தான் இருக்கிறது என்று நினைத்தேன். நீர் அவளை விடப் பெரிய பைத்தியம் என்று இப்போது அறிந்தேன். அவள் பேசாத ஊமைப் பைத்தியம்; நீர் பேசிப் பிதற்றும் பைத்தியம்!" என்று கூறிவிட்டுச் சுந்தர சோழர் மறுபடியும் நினைத்து நினைத்துச் சிரித்தார்.

## அத்தியாயம் 36

# பின்னிரவில்

சுந்தர சோழரின் சிரிப்பு ஒலி கேட்டுக் கொண்டிருக்கும் போதே பெண்மணிகள் அங்கு வந்தார்கள். முன்னால் மகாராணியும், அவளுக்குப் பின்னால் குந்தவை ஒரு பக்கமும் வானதி ஒரு பக்கமும் பிடித்து இழுத்துக் கொண்டு வர மந்தாகினியும், அவர்களுக்கும் பின்னால் பூங்குழலியும் ஒரு தாதிப் பெண்ணுமாக ஊர்வலம் போல வந்தார்கள். சுந்தர சோழரின் சிரிப்பு அவர்களுக்கும் சிறிது குதூகலத்தை உண்டு பண்ணியிருந்தது. மந்தாகினி அவரை ஒரு கணம் நிமிர்ந்து பார்ப்பதும் மறு கணம் குனிந்து தரையைப் பார்ப்பதுமா யிருந்தாள். அவளுடைய அலங்காரம் இப்போது பூரணம் அடைந்திருந்தது. குந்தவைப் பிராட்டி அலங்காரக் கலையில் இணையில்லாத தேர்ச்சி பெற்றவள் என்று அந்தக் காலத்தில் புகழ் பெற்றிருந்தாள். அதற்காகவே சிற்றரசர்கள் தங்கள் மகளிரை இளைய பிராட்டியின் தோழியா யிருப்பதற்குப் பழையாறைக்கு அனுப்புவது வழக்கம். குந்தவை தன் முழுத் திறமையையும் ஊமை ராணியை அலங்கரிப்பதில் பயன் படுத்தி யிருந்தாள். அடி உள்ளத்தில் தோன்றிய ஏதோ ஓர் உருத் தெரியாத,



உணர்ச்சியினால் மந்தாகினியின் தலைக் கூந்தலை நந்தினியைப்போல் ஆண்டாள் கட்டுடன் அலங்கரித்திருந்தாள். இந்த அலங்காரம் முடிந்ததும் பெண்கள் எல்லாருக்குமே அவள் தத்ரூபமாக நந்தினியைப் போலிருந்தது தெரிந்து விட்டது. காட்டிலே அலைந்து திரிந்த தேக ஆரோக்கிய முள்ள மாதரசி யாதலால் பிராயத்திலே இருந்த இருபத்தைந்து வருஷ வித்தியாசம் கூடத் தெரியவில்லை.

மற்றப் பெண்மணிகள் மந்தாகினி தேவியைச் சிறிது பெருமையுடனேயே அழைத்துக் கொண்டு வந்தார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு காரணத்தினால் பெருமை கொண்டிருந்தார்கள்.

இந்தச் சரித்திரம் நிகழ்ந்த நாட்களில் தமிழகத்துப் பேரரசர்களும் குறு நில மன்னர்களும் பல மனைவியரை மணப்பது சகஜமாயிருந்தது. ஓயாமல் போர்கள் நடந்த வண்ணமா யிருந்தன. அரசிளங் குமரர்களோ போர் முனையில் எப்போதும் முன்னணியில் இருந்தார்கள். ஆகையால் குலம் நசிக்காமல் பாதுகாப்பதற்காக அரச குலத்தவர் பெண்கள் பலரை மணப்பது வழக்கமாயிருந்தது. பட்ட மகிஷியாயிருப்பவள் மற்ற ராணிகளிடம் அசூயை கொள்ளாமல் அணைத்து ஆதரிப்பது ஒரு சிறந்த நறுங் குணமாகக் கருதப்பட்டது. இந்த முறையிலேயே மலையமான் மகள் உற்சாகமாயிருந்தாள். குந்தவை தன்னுடைய அலங்காரத் திறமையை இவ்வளவு நன்றாகக் காட்ட முடிந்தது பற்றிப் பெருமை கொண்டிருந்தாள். பைத்தியக்காரப் பிச்சியாகத் தோன்றியவளை இணையில்லா

அழகு வாய்ந்த இளம் பெண்ணாகத் தோன்றும்படியல்லவா அவன் செய்து விட்டான்? பூங்குழலிக்கோ தன் அத்தைக்கு அரண்மனையில் இவ்வளவு இராஜோபசாரங்கள் நடப்பது பற்றிக் களிப்பு உண்டாகியிருந்தது. அவள் எதிர் பார்த்ததற்கெல்லாம் மாறாக இங்கேயுள்ள அரண்மனைப் பெண்கள் நடந்து கொண்டிருந்தார்கள் அல்லவா?

இவ்வாறு பெருமிதம் பொங்க அந்த அறையினுள் பிரவேசித்த பெண்களின் ஊர்வலத்தைச் சக்கரவர்த்தி பார்த்தார். அவருடைய சிரிப்பு அந்த க்ஷணமே நின்று விட்டது. மந்தாகினியின் புதிய தோற்றம் அவருக்கே அளவில்லாத பிரமிப்பை அளித்தது. தாம் கண் முன்னால் பார்ப்பது உண்மைதானா என்று சந்தேகிப்பவர்போல் கண்களைக் கையினால் சிறிது மூடிக் கொண்டும் பின்னர் திறந்தும் உற்று உற்றுப் பார்த்தார். சற்று முன்னால் முதன் மந்திரி சொல்லிக்கொண்டிருந்த விவரங்கள் எல்லாம் அவர் மனதில் பதிந்திருந்தன. சிலகாலமாக நள்ளிரவில் தன் எதிரே தோன்றித் தன்னை வருத்திய பெண் உருவத்துக்கும் மந்தாகினியின் உருவத்துக்கும் உள்ள ஒற்றுமை அவருக்கு நன்கு புலனாயிற்று. அதே சமயத்தில் சில வேற்றுமைகள் இருப்பதையும் கவனித்துக் கொண்டார். இதைப் பற்றிய மர்மத்தை முழுதும் ஆராய்ந்து உண்மையை அறிய வேண்டும் என்னும் ஆசை அவர் உள்ளத்திலும் உதயமாயிற்று.

மந்தாகினியின் மீது அவருக்கு முதலில் ஏற்பட்டிருந்த அருவருப்பு அப்படியே மாறாமல் இருந்தது. ஆனால் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமலிருக்கத் தீர்மானித்தார்.

அநிருத்தரிடம் அவர், "முதன் மந்திரி! சற்று முன் உங்களை நான் பைத்தியம் என்றேன். பிரமை, பைத்தியம் எல்லாம் எனக்குத்தான் என்று தோன்றுகிறது. இனிமேல் தினந்தோறும் வைத்தியன் என்னை வந்து பார்ப்பது மட்டும் போதாது. மாந்திரிகனையும் அனுப்பி வைக்க வேண்டியதுதான். பழுவூர் இளைய ராணியைப் பார்க்க வரும் மந்திரவாதியைப் பிடித்து அனுப்பி வைத்தால் கூடப் பாதகமில்லை!" என்று மெல்லிய குரலில் கூறினார்.



அநிருத்தரின் உள்ளத்தில் ஒரு சிறிய துணுக்கம் உண்டாயிற்று. "அந்த மந்திரவாதிகளில் எவனும் சக்கரவர்த்தியை நெருங்காம லிருக்கட்டும்" என்று மனதிற்குள் வேண்டிக் கொண்டார். பிறகு, "மன்னர் பெரும! மந்திரவாதி எதற்கு? வேறு மந்திரந்தான் எதற்கு? ஸ்ரீமந் நாராயணனுடைய திருநாமத்தை விடச் சக்தி யுள்ள மந்திரம் வேறு ஒன்று மில்லை!" என்றார்.

குந்தவைப் பிராட்டி "அப்பா! என்னை அழைத்து வரச் சொன்னீர்களாமே! பழையாறைக்குப் போக வேண்டும் என்றும் கூறினீர்களாமே? நாங்கள் எல்லாருமே போகலாமா?" என்றாள்.

சுந்தர சோழர் அதற்கு மறுமொழி சொல்லாமல் முதன் மந்திரியைப் பார்த்து, "அநிருத்தரே! நான் என் கருத்தை மாற்றிக் கொண்டேன். இந்தப் பெண்கள் எதனாலோ ஒரே உற்சாகமாக இருக்கிறார்கள். வீட்டுக்குப் புதிய மருமகள் வந்ததுபோலக் களிப்படைந்திருக்கிறார்கள். இச்சமயம் இவர்களைப் பிரிக்க எனக்கு விருப்பமில்லை. தாங்கள் சற்று முன் சொன்னதுபோல் இவர்கள் எல்லாரும் சிலநாள் இங்கேயே தங்கி யிருக்கட்டும். செம்பியன் மாதேவி தங்களிடம் மிக்க நம்பிக்கையும் மரியாதையும் உள்ளவர். ஆகையால் தாங்களே நேரில் சென்று அவரை அழைத்துக் கொண்டு வாருங்கள்! தங்கள் சேனை நாகைப்பட்டினத்துக்கு அனுப்புங்கள். பெரிய பழுவேட்டரையரையும் அவருடைய இளைய ராணியையும் உடனே அழைத்து வர ஏற்பாடு செய்யும்படி நானே சின்னப் பழுவேட்டரையருக்குச் சொல்கிறேன்!" என்றார்.

"அப்படியே செய்யலாம், சக்கரவர்த்தி! ஆனால் எல்லாரும் வந்து சேருவதற்குச் சில தினங்கள் பிடிக்கலாம். நேற்று அடித்த புயல் மழை காரணமாக நதிகளில் எல்லாம் பூரணப் பிரவாகம் ஓடிக் கொண்டிருக்கின்றன!" என்றார் முதன் மந்திரி.

"அதனால் பாதகம் இல்லை. இத்தனை நாள் பொறுத்த நாம் இன்னும் சில நாள் பொறுத்திருப்பதில் நஷ்டம் ஒன்றுமில்லை. கரிகாலனையும் அழைத்து வருவதற்கு ஏற்பாடு செய்தால் எல்லா விஷயங்களையும் முடிவு செய்து விடலாம். அவன் இன்னமும் வருவதற்கு மறுத்தால் நானே புறப்பட்டுப் போக வேண்டியது தான். அதைப் பற்றிப் பிறகு பேசிக் கொள்ளலாம். நீங்கள் நாளைக்கே சென்று பெரிய பிராட்டியை எப்படியாவது கையோடு அழைத்து வாருங்கள்! போகும்போது, புயலினால் கஷ்டத்துக்குள்ளான மக்களைப் பற்றியும் கவனியுங்கள். நம்முடைய குடும்ப விவகாரங்களில் கவனம் செலுத்தி அந்த முக்கியமான காரியத்தை மறந்தே விட்டோம்" என்றார் சக்கரவர்த்தி.

"இல்லை, பிரபு! அதை நான் மறக்கவே இல்லை. எல்லாக் காரியங்களும் சரிவர நடைபெறும். தாங்கள் நிம்மதியாயிருக்கலாம்" என்று சொல்லிவிட்டு முதன் மந்திரி விடைபெற்றுச் சென்றார்.

* * *

அன்றிரவு சுந்தர சோழர் உண்மையிலேயே இத்தனை காலமும் அநுபவியாத நிம்மதியை அடைந்திருந்தார். கரையர் குலத்து மந்தாகினி இறக்கவில்லை என்னும் செய்தி மெய்யாகவே அவருடைய நெஞ்சத்தில் வெகு காலமாகக் குடிகொண்டிருந்த ஒரு பெரும் பாரத்தை அகற்றி விட்டது. அருள்மொழிவர்மன் நாகைப் பட்டினத்தில் இருக்கிறான் என்ற செய்தியும் அவருக்கு ஆறுதல் அளித்திருந்தது. சூடாமணி விஹாரம் மிகப் பலமான கட்டிடமாதலால் அதில் உள்ளவர்களுக்கு அபாயம் ஒன்றும் நேருவதற்கு இல்லை என்ற தைரியமும் அவருக்கு இருந்தது. பழுவூர் இளைய ராணி அவருடைய புதல்வியா யிருக்கலாம் என்று அநிருத்தர் குறிப்பிட்டதை நினைக்க நினைக்க அவருக்கு வேடிக்கையா யிருந்தது. இது சக்கரவர்த்தியின் முகத்திலும் அடிக்கடி குறுநகையை உண்டாக்கியது.

மலையமான் மகள் முதலிய பெண்களுடன் அவர் சிறிது நேரம் உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார். குந்தவையின் அலங்காரத் திறமையைப் பற்றிப் பாராட்டினார். "காட்டுமிராண்டி ஜன்மமாகக் காணப்பட்டவளைத் தேவலோகத்து இந்திராணியாக மாற்றி விட்டாயே? ஆனால் அதற்கெல்லாம் இந்தக் கிழவிதானா அகப்பட்டாள்? வானதியைப் போன்ற சிறு பெண்களிடமல்லவா உன் திறமையைக் காட்டவேண்டும்?" என்று பரிகாசமும் செய்தார். பிறகு பூங்குழலியிடம் அருள்மொழிவர்மனைப் பற்றி மேலும் விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

அதன் முடிவில் பூங்குழலி "சுவாமி, நான் கோடிக் கரைக்குத் திரும்பிப் போக அநுமதி கொடுங்கள். நாளைக்கே

நான் புறப்படலாம் அல்லவா? என் அத்தையைப் பற்றிய கவலை இனிமேல் எனக்கு இல்லை!" என்றான்.

"உன் அத்தை மகன் ஒருவன் காய்ச்சல் வந்து கிடக்கிறான் என்றாயே? அவனைப் பற்றிக்கூடக் கவலை இல்லையா? போவதற்கு நீ இவ்வளவு அவசரப்பட வேண்டாம். சிலநாள் இருந்து விட்டுப் போ!" என்றார் சக்கரவர்த்தி. பூங்குழலி மௌனமா யிருந்தாள்.

• • •

அன்றிரவு சுந்தர சோழ சக்கரவர்த்தி நிம்மதியாக உறங்கினார். கனவுகள்கூட அதிகம் காணவில்லை. கண்ட கனவுகளும் துர்ச் சொர்ப்பனங்களாக இல்லை; இன்பமான கனவுகள்.

அவருக்குப் பக்கத்து அறையில் படுத்துறங்கிய அரண்மனைப் பெண்டிர்களும் நிம்மதியாகவே தூங்கினார்கள். அவர்களிலே நிம்மதியில்லாமலும் நன்றாகத் தூங்காமலும் இருந்தவள் மந்தாகினி ஒருத்திதான். இன்று நடந்த நிகழ்ச்சிகள் எல்லாம் அவளுடைய மனதில் பெருங் கிளர்ச்சியை உண்டு பண்ணி யிருந்தன. முக்கியமாக அவளுடைய நினைவு பொக்கிஷ நிலவறைக்கும் சுரங்கப் பாதைக்குமாக ஊசலாடிக் கொண்டிருந்தது. இராவணனுடைய கரங்களை உடைத்து அந்தச் சுரங்கப் பாதையை மூடி விடுவதற்குத் தான் செய்த முயற்சி பலிக்காமற் போனது பற்றி எண்ணி எண்ணி அவள் மனம் நிம்மதி கொள்ளாமல் தவித்தது. தூங்கா விளக்கின் மங்கலான வெளிச்சத்தில் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே யிருந்தாள். முக்கியமாக, மேல் மாடங்களின் சாளரங்களை அடிக்கடி உற்று நோக்கிக் கொண்டிருந்தாள்.

நள்ளிரவு கழிந்தது; பின்னிரவு தொடங்கியது. மூன்றாவது ஜாமம் ஏறக்குறைய முடியும் நேரம் ஆகிவிட்டது. அப்போது மேல் மாடத்தின் சாளரம் ஒன்றில் ஒரு தோற்றம் அவளுக்குத் தென்பட்டது. அகோர பயங்கர முகம் ஒன்று அந்தச் சாளரத்தை ஒட்டினாற் போலிருந்து அந்த அறைக்குள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்ததைக் கண்டாள். அந்த முகம் இன்னாருடைய முகம் என்பதும் ஒருவாறு அவளுக்குத் தெரிந்து விட்டது. தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்து நின்றாள். மறுபடியும் அந்தச் சாளரத்தை உற்றுப் பார்த்தாள். அங்கே அந்த முகத்தைக் காணவில்லை. பக்கத்து அறை வாசற்படி வரையில் மெள்ள நடந்து சென்று எட்டிப் பார்த்தாள். அங்கே சக்கரவர்த்தி நிம்மதியாக உறங்குவதைக் கண்டாள். அந்த அறையில் மேல் மாடச் சாளரங்களையும் உற்றுப் பார்த்தாள். ஒன்றும் தெரியவில்லை.

திரும்பி வந்து சிறிதும் சத்தம் செய்யாமல் பூங்குழலியைக் கையினால் தொட்டு அசைத்து எழுப்பினாள். அசந்து தூங்கிய பூங்குழலி கண் விழித்தாள். ஊமை ராணியின் முகத் தோற்றத்தைக் கண்டு திடுக்கிட்டாள். ஊமை ராணி சமிக்ஞையினால் தன்னைத் தொடர்ந்து வரும்படி அவளிடம் சொன்னாள். அத்தையிடம் அளவிலாத பக்தி விசுவாசம் வைத்திருந்த பூங்குழலியும் சத்தம் செய்யாமல் எழுந்து அவளைப் பின்பற்றிச் சென்றாள்.

ஊமை ராணி சிற்ப மண்டபத்தை நோக்கிச் சென்றாள். போகும்போது நடை பாதையில் எரிந்து கொண்டிருந்த தூங்கா விளக்கு ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு நடந்தாள்.

சிற்ப மண்டபத்தை அடைந்ததும் பூங்குழலிக்குச் சிறிது கவலை உண்டாயிற்று. மறுபடியும் இவள் இராவணச் சிற்பத்தை உடைக்கப் போகிறாளா, என்ன? அப்படியானால், அதனால் ஏற்

## பம்பாயில் கலைவிழா

பம்பாய் மாதுங்கா ஸ்ரீ ஷண்முகானந்தா பைன் ஆர்ட்ஸ் சங்கீத சபா ஆதரவில் ஜனவரி மாதம் 6-உ முதல் 16-உ வரையில் பத்து தினங்கள் சங்கீதக் கலைவிழா அமோகமாக நடைபெற்றது. பம்பாய் பிரதம நீதிபதி எம். ஸி. சாக்ளா விழாவை ஆரம்பித்து வைத்தார். இவ்விழாவில் அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ ஐயங்கார், மகாராஜபுரம் ஸ்ரீ விஸ்வநாத ஐயர், செம்மங்குடி ஸ்ரீ சீனிவாச ஐயர், ஸ்ரீ முசிரி சுப்ரமணிய அய்யர், ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமணியம், ஆலத்தூர் சகோதரர்கள், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி, ஸ்ரீமதி எம். எல். வசந்தகுமாரி முதலியவர்களின் சங்கீதக் கச்சேரிகளும், மைசூர் துரைசாமி ஐயங்காரின் வீணைக் கச்சேரியும், ஜனாப் உஸ்தாத் பிஸ்மில்லா கானின் ஹிந்துஸ்தானி ஷனாய் வாத்திய சங்கீதமும் சிறப்பாக நடந்தேறின. பம்பாய் ரஸிகர்கள் திரளாக வந்து விழாவைச் சிறப்பித்தனர். மேற்படி கலை விழாவின் சில காட்சிகளை இந்த இதழில் வேறு பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

படும் சத்தத்தில் அரண்மனையில் உள்ளவர்கள் அத்தனை பேரும் விழித்துக் கொள்வார்களே? தன் அத்தை பைத்தியக்காரிதான் என்று ஊர்ஜிதமல்லவா ஆகிவிடும்?

அத்தை அந்த முயற்சியில் இறங்கினால் தான் அதைத் தடுத்தேயாக வேண்டும். கத்தியைப் பலவந்தமாகப் பிடுங்கியாவது தடுத்தாக வேண்டும்......இப்படி எண்ணிக் கொண்டே அத்தையைத் தொடர்ந்து சிற்ப மண்டபத்துக்குள் பூங்குழலி பிரவேசித்தாள்.

ஆ! இது என்ன! அந்த இராவணச் சிற்பத்தின் தலை ஒன்று அசைகிறதே? இல்லை, இல்லை! இராவணன் தலை அசையவில்லை. இராவணனுடைய தலைகளுக்கும், மேலேயுள்ள கைலாச மலைக்கும் மத்தியில், வேறொரு மனிதனின் தலை மாதிரி தெரிந்தது! உடனே அது மறைந்து விட்டது. வீண் பிரமை! தூக்கக் கலக்கம்! விளக்கின் ஒளியில் உண்டாக்கும் சிற்பங்களின் நிழல் தோற்றமாயிருக்க வேண்டும்!......

மந்தாகினிக்கும் அந்தத் தோற்றம் புலப்பட்டதோ என்னமோ, தெரியவில்லை. ஆனால் அவள் இராவணன் சிலையை நெருங்கித்தான் சென்றாள். நல்லவேளையாகப் பக்கத்தில் கிடந்த கத்தியின்மீது அவள் கவனம் செல்லவில்லை. இராவணன் தலைகள் - கைகளுக்கும் அவை தாங்கிக் கொண்டிருந்த கைலாசகிரிக்கும் நடுவிலிருந்த இருண்ட பகுதியில் தீபத்தைத் தூக்கிப் பிடித்துக் காட்டினாள். அங்கே ஒரு துவாரம் இருந்தது தெரிந்தது.

பூங்குழலி முன்னமேயே ஊகித்தது சரிதான். அங்கே ஒரு சுரங்கப் பாதையின் வெளித் துவாரம் இருக்கிறது. யாரும் சந்தேகிக்க முடியாதபடி அவ்வளவு சாமர்த்தியமாக அமைக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சுரங்கப் பாதையின் துவாரத்தை மூடி விடுவதற்கே முன்னிரவில் தன் அத்தை பிரயத்தனப்பட்டாள். அதை அறிந்து கொள்ளாமல் மற்றவர்கள் தடுத்து விட்டார்கள்......

இவ்விதம் பூங்குழலி எண்ணிக்கொண்டிருக்கும் போதே ஊமை ராணி தன் மருமகளுக்குத் தன்னைப் பின்பற்றி வரும்படி சமிக்ஞை செய்து விட்டுக் கையில் விளக்குடனே அந்தத் துவாரத்தில் சிரமப்பட்டுப் புகுந்து அதில் இறங்கிச் செல்லத் தொடங்கினாள். சிறிது சிறிதாக அவள் உடம்பு மறைந்து வந்து, தலையும் மறைந்து, கையில் பிடித்திருந்த விளக்கும் மறைந்தது. கொஞ்சம் வெளிச்சம் மட்டும் தெரிந்தது. பிறகு பூங்குழலியும் உடம்பை நெளித்து வளைத்துத் தலையில் மோதிக் கொள்ளாமல் ஜாக்கிரதையாக அந்தச் சுரங்கத் துவாரத்துக்குள் இறங்கினாள். சில கணங்களுக் கெல்லாம் அவளும் மறைந்தாள். பின்னர், விளக்கின் ஒளியும் மறைந்தது. சிற்ப மண்டபத்தில் அந்தகாரம் குடிகொண்டது.

* * *

**கா**லையில் மலையமான் மகளும் குந்தவையும் வானதியும் எழுந்து பார்த்த போது ஊமை ராணியையும் பூங்குழலியையும் அவர்கள் படுத்திருந்த இடத்தில் காணாமல் திடுக்கிட்டார்கள். அரண்மனை முழுதும், தோட்டத்திலும், சிற்ப மண்டபத்திலும் தேடிப் பார்த்தும் அவர்கள் அகப்படவில்லை. அவர்கள் எப்படி மாயமாய் மறைந்தார்கள் என்பதை யாராலும் ஊகிக்க முடியவில்லை. சக்கரவர்த்தியிடம் கூறியபோது முதலில் அவர் சிறிது கவலைப்பட்டார். பின்னர், "அந்தப் பைத்தியங்கள் போய்த் தொலைந்ததே நல்லது! எப்படித் தொலைந்தால் என்ன?" என்றார். எனினும், அவர் உள்ளத்தினுள்ளே இனந் தெரியாத கவலையும் பயமும் குடிகொண்டன.

## அட்டைப்பட விளக்கம்

மூசிவண்டு தேனையுண்டு
வாசமண்டு காவின்மொண்டு
மோகன முகாரி ராகம் பாடுமே—மைய
லாகவே பேடையுடனே நாடுமே.
—காவடிச் சிந்து

அவள் தன் காதலனைத் தேடிக் கொண்டு அந்தப் பூஞ்சோலைக்குள் வந்தாள். அங்கே ஒரு ஆண் வண்டு மோகன முகாரி ராகம் பாடிக் கொண்டு தன் பேடையைத் தேடித் திரிந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்ததும், "இந்த வண்டைப் போலவே, என் காதலனும் என்னையே நினைந்து வேகமாக வந்து கொண்டிருக்கக் கூடும் அல்லவா?" என்று நினைத்தாள். அந்த நினைப்பு அவளுக்குச் சற்று ஆறுதலை அளித்தது.

நமது சித்திரக்காரரும், "அவள் எண்ணம் முற்றும் உண்மையே! அவளுடைய காதலன் போர்க் களத்தில் வெற்றி மாலை சூடி வேகமாக இரண்டு குதிரைகள் பூட்டிய தேரில் வருகிறான்" என்பதைச் சித்திரத்தில் காண்பித்திருக்கிறார்.



## நாடகக் கலைஞர் நீடுழி வாழ்க!

நாடகத் தமிழுக்குப் புத்துயிரும், நாடக மேடைக்குப் புதுவாழ்வும், நாடக நடிகர்களுக்குப் புது கௌரவமும் அளித்தவர் திரு ப. சம்பந்த முதலியார். இந்த இதழ் வெளியாகும் பிப்ரவரி 1௳ யன்று முதலியார் அவர்கள் தமது எண்பதாவது வயதைப் பூர்த்தி செய்கிறார்கள். இந்த எண்பதாண்டுகளில் முதலியார் அவர்கள் வக்கீலாகவும், நீதிபதியாகவும் இருந்திருக்கிறார்கள். எத்தொழிலை நடத்தினாலும் எந்தப் பதவி வகித்தாலும் அவர்கள் மனம், நாடகக் கலை வளர்ச்சியிலேயே லயித்து நின்று வந்திருக்கிறது. அந்த நாட்களில் சுகுண விலாச சபா என்ற நாடக சபையைத் தோற்றி, பல நாடகங்கள் தாமே எழுதி, தாமே நடித்து வந்தார்கள்.

முதலியார் அவர்கள் எல்லாம் வல்ல இறைவன் அருளால் இன்னும் பலகாலம் வாழ்ந்திருந்து, இன்னும் பல நாடகங்களை எழுதி நாடகத் தமிழை வளர்ப்பாராக!

**ஸ்வாத்**

சுத்தி செய்த
நிலக்கடலை எண்ணை




**துஷார்**
**வனஸ்பதி**

இரட்டிப்பாக தெளிவாக்கி
சுத்தி செய்தது மேன்மையான
குணமுடையது.







**நிராளா**

**பார் சோப்**

துணிகளை கெடுக்காது.
வெண்மையாக வெளுக்கும்.

ASP-STN-3

**துங்கபத்ரா இன்டஸ்ட்ரீஸ் லிமிடெட், கர்னூல்**

## தி பாவுஸோ பெனிபிட் சிட் பண்டு லிட்.

(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 - மதராஸ்-5

தந்தி: 'EVERMENS'.... போன்: 85864



**மக்கள் போற்றும் மாதாந்திர சீட்டுகள்**

மாதாமாதம் நூற்றுக்கணக்கான மக்கள் சேர்ந்து சிரமமில்லாமல் சிறுகச் சிறுக சேமித்து சந்தோஷப்படும் எங்கள்

**பிப்ரவரி மாத சீட்டு வரிசை**

(3-வது வெள்ளிக்கிழமை ஏலவரிசை)

சந்தா செலுத்தும் கடைசி தேதி 18-2-53 — முதல் ஏலத் தேதி 20-2-53

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டின் மதிப்பு |
|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- |
| E | ரூ. 20/- | ரூ. 500/- |
| F | ரூ. 15/- | ரூ. 375/- |
| G | ரூ. 10/- | ரூ. 250/- |
| 25 மாதங்கள் | — | 25 மெம்பர்கள் |

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்குகளின் செக் பெற்றுக்கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகைகளை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். வேண்டுவோருக்கு இலவசமாக நிபந்தனைகளும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும். **சீராகச் சேமிப்பதற்கு உங்களுக்குப் பயிற்சி அளிக்கிறோம்.**

ஆபீஸ் நேரம்: காலை: 9-12 மணி. மாலை: 2-5 மணி.

(போர்டார் உத்திரவுப்படி) — எம். வி. சுப்ரமணியம், மானேஜிங் டைரக்டர்

---

## பம்பாயில்
### தமிழ் மாதப் பத்திரிகை

★

**தமிழ் வருடப் பிறப்பன்று வெளிவருகிறது**

★

தனிப் பிரதி நாலணா

வருட சந்தா ரூ. 3

ஏஜண்டுகள் தேவை

★

விவரங்களுக்கு

## விந்தியா

208, ஹிமாலயா ஹவுஸ், பால்டன் ரோடு

பம்பாய்-1

---

## INDISPENSABLE FOR
# S. S. L. C. STUDENTS

1 Agasthiar's Guides to

(a) Social Studies Rs. 2-8-0
(b) General Science Rs. 2-4-0

2 New Model Test Papers with Answers in

(a) Composite Mathematics Rs. 1-2-0
(b) Gl. Mathematics Rs. 0-13-6
(c) General Science Rs. 0-12-0
(d) Social Studies Rs. 0-10-0

3 Agasthiar's Text Examiner on

S.S.L.C. English Text Rs. 1-4-0

(Contains New Type Questions and Answers)

**AGASTHIAR BOOK DEPOT**

TEPPAKULAM POST :: TIRUCHIRAPALLI




## 2. காட்டாற்று வெள்ளம்

பரம ஏழைகளான கந்தனும் அவன் மனைவியும் இவ்வளவு பணத்தை இதற்கு முன் எப்பொழுதுமே பார்த்ததில்லை; பார்த்ததாகக் கனவுகூடக் கண்டதில்லை. ஆனாலும் பணத்துக்காக, பெற்ற குழந்தையை விற்று விடுவதா என்ற எண்ணம் ஒரு பக்கம் தோன்றி அவர்களைக் கொஞ்சம் சஞ்சலத்தில் ஆழ்த்தியது.

"கந்தா, இதில் யோசனை செய்வதற்கு என்ன இருக்கிறது? வலிய வரும் அதிர்ஷ்டத்தை ஏன் உதறித் தள்ளுகிறாய்? குழந்தையை மகாராஜாவிடம் ஒப்புவித்தால் அவன் நிச்சயம் ராஜாவாகி விடுவான். உனக்கும் நிறையப் பவுன் கிடைக்கிறது. உன் குடிசையில் உன்னோடு வைத்துக் கொண்டு குழந்தையின் அதிர்ஷ்டத்தைப் பாழாக்கி விடாதே!" என்று கூறி மந்திரி கந்தனுடைய மனக் குழப்பத்தை மாற்றினான்.

கடைசியில் அந்த ஏழைக் குழந்தை அரசனிடம் ஒப்படைக்கப்பட்டான். அரசன் அவனை வாங்கிக் கொண்டு மந்திரியுடன் புறப்பட்டான். இருவரும் குதிரையில் ஏறிக் கொண்டனர். சேனை வீரர்களெல்லோரையும் மந்திரி முன்னதாக நகரத்துக்கு அனுப்பி விட்டான். அவர்கள் ஒரே கோஷத்துடன் புறப்பட்டுச் சென்றனர்.

அரசனும் மந்திரியும் மறைந்து போகிற வரையில், கந்தனும் அவன் மனைவியும் மற்றும் உள்ள கிராமத்து ஜனங்களும் பார்த்துக் கொண்டே நின்றனர்.

கொஞ்ச நேரத்துக் கெல்லாம் அரசனும் மந்திரியும் வெகு தூரம் சென்றுவிட்டனர்.

குதிரையில் போய்க் கொண்டே அரசன் மந்திரியைப் பார்த்து, "மந்திரி, இந்தக் குழந்தையின் ரூப சௌந்தரியத்தைப் பார்த்தால் அந்தப் பெரியவர் சொன்னது போல் இவன் அரசனாவான் என்று நிச்சயமாய்த் தோன்றுகிறது. என்னுடைய மூத்த ராணிக்குப் பிறக்கப் போகும் பெண்ணை இவன் மணந்து கொண்டு என் தேசத்தை ஆளப் போகிறான் என்று அவர் சொன்னாராம். அந்தமாதிரி நேருமானால் என் அன்புக்கு உரிய இளைய ராணியின் கதி என்னவாகும்? அவளுக்குக் குழந்தை பிறந்தால் அது நடுத்தெருவில் அநாதையாக அல்லவா நிற்க நேரிடும்? இளைய ராணிக்கு மூத்த ராணியைக் கண்டாலே பிடிக்காது. இப்பொழுது இந்தச் சமாசாரம் அவன் காதில் விழுந்தால் அவன் உயிரையே விட்டு விடுவான் என்பதில் சந்தேகம் இல்லை. என் முழு அன்புக்கும் இருப்பிடமாக விளங்கும் அவன் போய் விட்டால் நானும் உயிரை விட்டுவிடவேண்டியதுதான்......!" என்று சோகத்துடன் சொன்னான்.

"மகாராஜா, இது என்ன, தாங்கள் இப்படிப் பேசுகிறீர்கள்? தாங்கள் போய் விட்டால் அப்புறம் ராஜ்யம் ஏது? தர்மம், நியாயம் எல்லாம் என்ன ஆவது? இந்த அதிசய சமாசாரத்தை யாருக்கும் தெரிவிக்க வேண்டாம். தாங்கள் அநாவசியமாக மனசைக் குழப்பிக்கொள்ளக்கூடாது. தைரியமாயிருங்கள். மன்னர் மன்னனாகிய தாங்கள் இருந்து அரசு புரிந்த சிங்காசனத்தில் இந்த ஏழைக் குடியானவனுடைய மகன் உட்கார்ந்து அரசுபுரிவதா? இது ஒரு நாளும் நடக்காது. நடக்கவே நடக்காது, மகாராஜா! சிங்கம் இருந்து கர்ஜனை புரிந்த இடத்தில் நரி உட்கார்ந்து ஊளையிடுவதா? யாரோ பெரியவர் சொன்னார் என்று தாங்கள்

வருந்துவது சரியல்ல!'' என்று மந்திரி பலவீனத்திலும் தைரியம் சொன்னான்.

"மந்திரி, உங்களைப் போல் ராஜ விசுவாசமுள்ள மந்திரி ஒருவர் இருக்கும் போது எனக்கு என்ன கவலை? யாரோ பெரியவர் என்னவோ சொன்னார் என்று நாம் இந்தமாதிரி விஷயங்களில் அலட்சியமா யிருப்பதற்கில்லை. பகை என்று ஏற்பட்டு விட்டால், சின்னது பெரியது என்று நினைப்பது சரியல்ல. நாகப்பாம்பில் சின்னது பெரியது என்று உண்டா? கொடிய விஷமுள்ள ஜந்து எதுவா யிருந்தால் என்ன? அதற்கு உடனே முடிவு தேடுவதுதான் அறிவுடைமைக்கு அழகு!'' என்றான் அரசன்.

"மகாராஜா, மன்னிக்க வேண்டும். இது பற்றி நான் ஏற்கெனவே ஒரு யோசனை செய்து முடிவுகட்டி விட்டேன். தயவு செய்து என்னுடன் வாருங்கள்'' என்று சொல்லிவிட்டு மந்திரி குதிரையை வேகமாகத் தட்டிவிட்டான். அரசனும் தன் குதிரையை வேகமாகச் செலுத்தி மந்திரியைத் தொடர்ந்தான்.

நகரத்து எல்லையைத் தாண்டி வெகு தூரம் சென்று இரண்டு குதிரைகளும் காட்டுப் பிரதேசத்தை அடைந்தன.

அந்தக் காட்டுப் பாதையில் கொஞ்ச தூரம் சென்றதும், ஜில்லென்று குளிர் காற்று வீசியது. உச்சி வேளையா யிருந்தும் வெய்யில் கடுமையாக இல்லாமல் மிகவும் இதமா யிருந்தது. அங்கே குளிர் காற்று வீசியதற்குக் காரணம், சமீபத்தில் பெரிய காட்டாறு பிரவாகமாகப் போய்க் கொண்டிருந்ததுதான்.

மனித சஞ்சாரமே இல்லாத அந்தப் பெரிய வனப் பிரதேசத்தில் ஆற்று வெள்ளம் சலசல வென்னும் ஓசையுடன் அமைதியாகப் போய்க்கொண்டிருந்தது. சமீபத்தில் மழை பெய்திருந்தபடியினால் ஆற்று வெள்ளம் குழம்பிக் கொந்தளித்து, குதித்து, எழும்பி, சுழியிட்டுப் போய்க் கொண்டிருந்தது. பெரிய பெரிய மரங்களெல்லாம் வெள்ளத்தில் அடித்துக் கொண்டு போயின.

ஆற்றங்கரை நெருங்கியதும் முன்னால் சென்ற மந்திரி குதிரையின் லகானைப் பிடித்து நிறுத்தினான். அவன் பின்னாலேயே வந்த அரசன் வீரவர்மனும் தன் குதிரையை நிறுத்தினான்.

குதிரையை விட்டு இறங்கிய மந்திரி நாலாபுறமும் பார்த்துவிட்டுத் தன் குதிரையைத் தட்டிக் கொடுத்தான். குதிரை அவன் அன்புக்குப் பதில் தெரிவிப்பது போல் ஒரு முறை கனைத்தது.

அப்பொழுது அரசாங்கச் சேவகன் ஒருவன் சமீபத்திலிருந்த புதர்ப் பக்கத்திலிருந்து வெளியே வந்தான். அவன்

கையில் ஒரு மரப் பெட்டி இருந்தது. அவன் பணிவோடு மந்திரியினிடம் அந்தப் பெட்டியைக் கொடுத்தான்.

மந்திரி, அதைக் கையில் வாங்கிக் கொண்டு, "மகாராஜா, அந்தக் குழந்தையை இந்தப் பெட்டியில் வைத்து ஆற்று வெள்ளத்தில் விட்டு விடலாம். இதுதான் என்னுடைய உத்தேசம். இல்லையென்றால் இந்தக் குழந்தை உங்களைத் தூங்க விடமாட்டான். மேலும், நாம் குடியானவனிடம் குழந்தை வாங்கியது ஒருவருக்கும் தெரியாது. நம் அரண்மனை வீரர்களிலேயே எல்லோருக்கும் தெரியாது. ஆகையினால் இதைப்பற்றி நாம் வாயைத் திறக்காமல் இருந்து விட்டால் நகரத்து ஜனங்களுக்கு இந்தச் செய்தி எட்டுவதற்கே வழியில்லை!" என்றான்.

அரசனுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "மந்திரி, உங்கள் புத்திசாலித்தனமே புத்திசாலித்தனம். அப்பப்பா! இந்தக் குழந்தையை அவனிடமிருந்து வாங்கிக் கொண்டதிலிருந்து எனக்கு நிம்மதியே இல்லை. இதை என்ன செய்வது, எங்கே கொண்டுபோவது என்றெல்லாம் யோசனை செய்து அலுத்துப் போய் விட்டேன். உங்களுக்கு எப்படி இந்த யோசனை தோன்றியது? எனக்குக்கூடத் தெரியாமல் எப்படி இந்தப் பெட்டியை இந்தக் காட்டுப் பாதையில் கொண்டு வரச் செய்தீர்கள்?" என்று கேள்விக்கு மேல் கேள்வியாகக் கேட்டு ஆச்சரியம் அடங்காமல் தவித்தான்.

"மகாராஜா, தங்கள் மனசுக்குக் கஷ்டம் வரும்படியான நிலைமை ஏற்பட்டால், சும்மா கையைக் கட்டிக்கொண்டு இருக்க முடியுமா? ஆகவே, இந்தக் குழந்தையை அங்கே பார்த்ததும் என் மனம் யோசனையில் இறங்கியது. அப்பொழுதே யாரும் அறியாமல் ஒரு மரப் பெட்டியுடன் காட்டாற்றங் கரையில் காத்துக்கொண்டிருக்கும்படி நமது மெய்காப்பாளனுக்கு உத்தரவிட்டேன். தங்களிடம் இதுபற்றித் தெரிவிக்கச் சாவகாசமோ சந்தர்ப்பமோ கிடைக்கவில்லை!" என்று சொன்னான்.

அரசன், "நல்ல காரியம் செய்தீர்கள்!" என்று, சந்தோஷத்துடன் கூறிவிட்டுக் குழந்தையை மந்திரியின் கையில் கொடுத்தான். மந்திரி குழந்தையை வாங்கி மெதுவாகப் பெட்டியில் விட்டான். குழந்தை அப்பொழுது தூங்கிக் கொண்டிருந்தான்.

மந்திரி பெட்டியை மூடிப் பிறகு அதை ஒரு கயிற்றினால் கட்டி, மெதுவாக ஆற்றங்கரை ஓரமாக இறங்கி, வேகமாகச் செல்லும் வெள்ளத்தில் மிதக்க விட்டான்.

இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக ஆடி அசைந்து கொண்டும், ஆற்றுநீர்ச் சுழியில் வட்டமிட்டுக் கொண்டும் குதித்துக் கொம்மாளம் அடித்துக் கொண்டும் சென்றது அந்த மரப்பெட்டி. (தொடரும்)

# படித்துப் பாருங்கள்!

## SHANKAR'S WEEKLY

### Children's Number—1952.

"நான் ஈரேழு பதினாலு வருஷம் தவம் பண்ணி ஈரேழு பதினாலு உலகங்களையும் சுற்றி வரக்கூடிய சக்தி பெற்று வந்திருக்கிறேன். என்னை விட பாக்கியசாலி யார் இருக்க முடியும்!" என்று ரொம்பவும் பெருமையாகத் தன்னைப் பற்றி ஒருவன் சொல்லிக் கொண்டானாம்!

இதைக் கேட்ட அவனுடைய நண்பன், "பதினைந்தாவது உலகம் ஒன்றிருக்கிறதப்பா, அதில் சஞ்சரிக்கக் கூடிய பாக்கியம்தான் அப்பா, இந்தப் பதினாலு உலகங்களைச் சுற்றிவரக் கூடிய பாக்கியத்தை விட பெரிய பாக்கியம்!" என்றான்.

"அது என்ன உலகம்!" என்று கேட்டான் முதல்வன்.

"அதுதானப்பா! குழந்தைகளின் கற்பனை உலகம்!" என்றான் அவன் நண்பன். இதைக் கேட்டவன் முகம் எப்படி யிருந்திருக்கும்!

உண்மையிலே குழந்தைகளின் கற்பனை உலகில் சஞ்சரிக்கக்கூடிய பாக்கியம் ஒருவன் பெற்று விட்டால் அவனைவிட பாக்கியசாலி வேறு ஒருவன் இருக்க முடியாது.

அந்தகைய பாக்கியத்தைப் பெற ஒரு வாய்ப்பு "சங்கர்ஸ் வீக்லி" காரியாலயத்தார் சென்ற நான்கு ஆண்டுகளாக அகில உலகத்துக்கே அளித்து வருகிறார்கள்.

மூன்று வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகள் முதல் பதினாறு வயதுள்ள குழந்தைகள் வரை எல்லாரும் கலந்து கொள்ளக்கூடிய, சித்திரப் போட்டி ஏற்பாடு செய்து, சுமார் மூன்றூறு பரிசுகள் வழங்கி வருகிறார்கள். சித்திரப் போட்டியுடன் குழந்தைகள் கட்டுரைப் போட்டியும் நடத்துகிறார்கள்.

இந்தப் போட்டிகளில் அகில உலகக் குழந்தைகள் கலந்து கொள்ளலாம். சென்ற வருஷம் சுமார் 35 நாடுகளிலிருந்து 13,000 சித்திரங்கள் வந்தன. அவற்றில் பரிசு பெற்ற சித்திரங்களும், கட்டுரைகளும் பிரசுரித்து, "சங்கர்ஸ் வீக்லி"யைக் குழந்தைகள் மலராக வெளியிட்டிருக்கிறார்கள்.



4 வயதுச் சிறுவன் வரைந்தது

குழந்தைகளின் கொச்சைப் பேச்சுக்களில், மழலை மொழியில் இன்பம் கண்டவர் யாவரும், இம் மழலைச் சித்திரங்களிலும், கட்டுரைகளிலும், கதைகளிலும் பேரின்பம் காணலாம்.

"சங்கர்ஸ் வீக்லி"யாரின் இம் முயற்சி மகத்தானது. குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும், ஏன், அகில உலகத்துக்குமே அருந் தொண்டு செய்திருக்கிறார்கள்! வாழ்க, குழந்தைகள் மலர்!

பிரசுரம்: சங்கர்ஸ் வீக்லி, ஒடியான் பில்டிங், கன்னுட் ப்ளேஸ், புது டில்லி, விலை: ரூ. 3.




# மனிதனும் தெய்வமும்

கி. ரா. கோபாலன்

**கதை பிறந்த கதை**

புயல் அடித்த வேகத்தில் ஒரு பெரிய அரசமரம் விழுந்து ஒரு கோயிலே சின்னா பின்னமாகிவிட்டது. ஆனால் அந்தக்கோயிலிலிருந்த அம்மனின் உலோக விக்கிரகம் மாத்திரம் இடிந்து தரைமட்டமான கோயிலுக்கு வெளியே எவ்வித பழுதுமின்றி அமைதியாக வீற்றிருந்தது. இது பலருக்கு அதிசயமாக இருந்தது. இதை அந்த அம்மனுக்குள்ள தெய்வீக சக்தி என்று பலர் சொல்லிக் கொண்டனர். சிலர் இதை நம்பவே யில்லை. பின் இது எப்படித்தான் நிகழ்ந்தது?

காற்றடித்தது. அப்பொழுது சிறிது மழையும் பெய்து கொண்டிருந்தது. கார்த்திகை மாதத்தில் இது சகஜம். அந்தக் காற்றும் மழையும் அப்பொழுது ஒருவரையும் கலக்கமடையச் செய்து விடவில்லை. அப்பொழுது காற்று மழையோடு கூடி ஏதோ காதல் விளையாட்டு விளையாடுவது போல் தானிருந்தது. ஆனால் சிறிது நேரம் கழித்துத் தான் தெரிந்தது காற்றும் மழையும் காதல் விளையாட்டு விளையாடிக் கொள்ள வரவில்லை, இந்த உலகத்தோடு போராடி, உண்டு இல்லை என்று வஞ்சம் தீர்த்துக் கொள்ளத்தான் வந்திருக்கிறது என்று. மோகினிபோல் அழகாக நடந்து வந்த மங்கை, ராட்சசியாக மாறிக் காட்டுமிராண்டித் தனமாகக் கூத்தாடுவதுபோல இருந்தது அப்பொழுது காற்றடித்த கோலம். காற்றின் கோரக் கூத்தைக் கண்டு மழை ஆரவாரம் செய்து சிரிப்பது போல் தானிருந்தது.

நெடு நாட்களுக்குப் பிறகுதான் காற்றின் கொடிய சக்தி எத்தகையது என்பதை உலகம் உணர்ந்துகொள்ள முடிந்தது. காற்றின் மிருதுவான தழுவலினால் ஆனந்த மடைந்து மெய் சிலிர்த்து நின்ற மரங்களெல்லாம் இன்றுதான் அதன் வெறி பிடித்த தாக்குதலின் தரத்தை உணர்ந்தன. மழையோடு வந்த அந்த மெல்லிய காற்றே சில நிமிஷங்களுக்குள் பெரும் புயலாக மாறி விட்டது. சில மரங்கள் கிளை கிளையாக முறிந்தன. சில மரங்கள் வேரோடு கல்லி எறியப்பட்டது போல் விழுந்தன. செடிகளும் கொடிகளும் சின்ன பின்னமாகப் பிய்த்து எறியப்பட்டன. எவ்வளவோ வீடுகள் இடிந்து தரை மட்டமாயின. எவ்வளவோ வீட்டுக் கூரைகள் காற்றில் பறந்து சிதறின. என்ன கோர தாண்டவம்! இப்படியே இன்னும் இரண்டொரு மணி நேரம் காற்று அடித்தால்! அந்தக் கணத்தில் இதை நினைத்துத் திகிலடையாத ஜீவனே இல்லை. பிரளயம் என்று சொல்லுவார்களே, அதன் முதல் தாக்குதல் படை காற்றாகத் தானிருக்க வேண்டும் என்று தீர்மானமாக முடிவு கட்டவேண்டி யிருந்தது.

உத்திராபதி தனிமையில் குடிசைக்குள் இருந்தான். அவனுடைய மனைவி பிரசவத்திற்காகப் பிறந்த வீடு சென்றிருந்தாள். வெளியே அடிக்கும் காற்றின் தீவிரம் எவ்வளவு உக்கிரமானது என்பதை அவன் குடிசைக்குள் இருந்த வண்ணமே உணர முடிந்தது.

மூடியிருந்த மூங்கில் கதவு காற்றினால் உந்தப் பட்டுத் திறந்து கொண்டது. மழைச் சாரல் உள்ளே அடித்தது. இந்த வேளை அவனுடைய மனைவி பிறந்த வீட்டில் எத்தகைய நிலையில் இருக்கிறாளோ என்ற திகில், அந்த சமயத்தில் அந்தக் காற்றின் தாக்குதலுக்கு அந்தக் குடிசை விழுந்து விடும் நிலையிலிருந்தும் அவன் மனத்துக்குப் பெருங் குழப்பத்தைக் கொடுத்தது. அவன் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள வேறு எங்காவது பாதுகாப்பான இடத்திற்குப் போய் விடலாமா என்று யோசித்தான்.

அவன் மெதுவாக வாசற்படிக்குச் சமீபமாக வந்து வெளியே எட்டிப் பார்த்தான். காற்றின் வேகம் அவன் மனத்தால் நினைத்ததற்கும் மேலான அசுர வேகமாகத்தானிருந்தது. அவன் கண்களில் பட்ட மரங்களெல்லாம் காற்றின் மோதலினால் அல்லலுற்று ஆடிய ஆட்டம் வாழ்வின் கடைசி நேரத்தில் எமனோடு போராடுவது போல் இருந்தது.

அவன் குடிசை ஒரு சிறிய குப்பத்திடையே இருந்தது. அந்தக் குப்பத்திலுள்ள வீடுகளெல்லாம் அவனுடைய குடிசையைப் போன்றதுதான். அந்தச் சமயம் அவனுடைய குடிசைக்கு எத்தகைய அபாயங்களெல்லாம் இருந்ததோ அதைப் போலவே ஒவ்வொரு



குடிசையும் அபாயத்தை எதிர் நோக்கிக் கொண்டிருந்தன. அவன் அங்கிருப்பதினால் எத்தகைய ஆபத்து ஏற்படும் என்று எண்ணி பீதியுற்றானோ அத்தகைய ஆபத்து எங்கே சென்றாலும் ஏற்படும் என்பதைத் தெரிந்து கொண்டான். அந்தக் காற்றிலும் மழையிலும் அவன் நெடுந்தூரம் செல்ல முடியாது. அவன் குடிசைக்கு எதிர்ப்புறமுள்ள குடிசைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த போது ஒரு விஷயம் அவன் மனசைத் திகைக்க வைத்தது.

அவன் குடிசைக்கு நேரே இருபதடி தூரத்தில் ஒரு சிறு மாரியம்மன் கோயில். அந்த மாரியம்மன் கோயிலுக்குத் தென்புறம் ஒரு பெரிய அரசமரம். அவன் பிறந்த நாளிலிருந்து அந்தக் கோயிலையும் அரசமரத்தையும் அவனுக்குத் தெரியும். அந்தக் கோயில் எவ்வளவு புராதனமானதோ அதைவிடப் புராதனமாக இருந்திருக்க வேண்டும் அந்த அரசமரம். அப்பொழுது அடித்த அந்த ஊழிக் காற்று அந்த அரசமரத்தையே வேரோடு அசைத்துக் கொண்டிருப்பது போல் அவன் கண்ணுக்குப் பட்டது. எந்த வினாடியிலும் அந்த அரசமரம் கோயிலின் மீது சாய்ந்து விழலாம். அப்படி விழுந்தால் கோயிலின் கதி என்னவாகும்? அந்தப் பெரிய மரம் விழுந்தால் அந்தச் சிறு கோயிலே பூமிக்குள் அழுந்தினாலும் அழுந்தி விடலாம். உள்ளே இருக்கும் அம்மனின் கதி என்ன? கோயிலோடு சேர்ந்து அழிய வேண்டியது தான். இதை அவன் எப்படிப் பார்த்துக் கொண்டிருக்க முடியும்? கோயிலுக்குள்ளே இருக்கும் அம்மனை எப்படியாவது காப்பாற்றி விடவேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அங்கிருக்கும் செப்பு விக்ரகத்தையாவது இந்த அபாயத்திலிருந்து காப்பாற்றி வெளியே கொண்டு வந்துவிட வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது.

'சக்தியுள்ள வரப்பிரசாதியான மாரியம்மன். அவளுக்கு எவ்வித ஆபத்தும் ஏற்படாது' என்று நினைத்து மனசைச் சமாதானம் செய்து கொள்ளப் பிரயாசைப்பட்டான். ஆனால் அவன் மனம் நிலை கொள்ளவில்லை. அந்தக் கோயிலைப் பார்க்கப் பார்க்க அவனுக்குப் பயங்கரமாகத்தானிருந்தது. அப்பொழுது அடித்த காற்றானது வரப்பிரசாதியான மாரியம்மன்மீது அவன் வைத்திருந்த பெரிய நம்பிக்கையைக் கூட இழக்கும்படி செய்தது. மாரியம்மனின் சக்திக்கு அந்தக் காற்று பயப்படக் கூடியதாக அவனுக்குப் படவில்லை. மாரியம்மனை உயிருக்குத் துணிந்து, தான் போய்க் காப்பாற்ற முடியும் என்று திடமான முடிவுக்குவந்தான். அந்தச் சமயம் அதைச் செய்யாமலிருந்தால் பெரிய பாவம் தன்னைச் சூழ்ந்து கொள்ளும் என்றுகூட அவனுக்குத் தோன்றியது.

'ஆனால் சுவாமியை, பூசாரியைத் தவிர வேறு ஒருவரும் தொடக்கூடாதே......?' என்று சிறிது தயக்கம் ஏற்பட்டது. 'ஆபத்துக்குப் பாவமில்லை' என்று அவன் மனமே பதில் சொல்லியது. சிறிது நேரங்கூட அவன் தாமதித்து நிற்கவில்லை. குடிசையிலிருந்து வெளியே பாய்ந்து காற்றையும் மழையையும் எதிர்த்துக் கொண்டு மாரியம்மன் கோயிலை நோக்கி ஓடினான். கோயிலின் கதவு பூட்டப்பட்டிருந்தது. பூட்டைப் பிடித்து ஆவேசத்தோடு இழுத்தான். பூட்டின் கொக்கி பட்டென்று தெறித்து விழுந்தது. பதை பதைப்போடு கோயிலுக்குள்ளே சென்றான். கோயிலில் விளக்கு அணைந்து எங்கும் இருள் கவிந்திருந்தது. அந்த இருட்டிடையே சன்னிதானத்திற்குள் நுழைந்து கையால் துழாவினான். அம்மனின் உலோக விக்கிரகம் அவன் கையில் தட்டுப்பட்டது. மூச்சைப் பிடித்துக் கொண்டு அதைத் தூக்கினான். இமைப் பொழுதில் விக்கிரகத்தோடு கோயிலுக்கு வெளியே வந்து விட்டான். கோயிலுக்கு இரண்டு மூன்று அடிக்கு அப்பால் அந்த விக்கிரகத்தைத் தரையில் வைத்து விட்டுத் தன் குடிசையை நோக்கி ஓடி வந்தான்.

அவன் குடிசைக்குச் சமீபமாக வந்த பொழுது ஏதோ மலையே புரண்டு விழுவது போல் ஒரு பயங்கர சத்தம் கேட்டது. உத்ராபதி குடல் நடுங்கத் திரும்பிப் பார்த்தான். அம்மன் கோயிலுக்குத் தென்புறம் இருந்த அரசமரம் தன்னுடைய பிரம்மாண்டமான கிளைகளுடன் வேரோடு சாய்ந்து அம்மன் கோயிலுக்குக் குறுக்கே விழுந்து விட்டது. அச் சிறு கோயில் அந்த அரச மரத்துக்கு அடியில் சின்னா பின்னமாகிக் கிடந்தது.

உத்ராபதி குடிசைக்குள் வந்து உட்கார்ந்து தன் மனப் பதட்டத்தை அடக்கிக் கொள்ள முயற்சி செய்தான். காற்று அடித்துக் கொண்டுதானிருந்தது. அவனுடைய குடிசையும் அந்தக் காற்றில் கலகலத்து விழுந்து விடும் போல்தானிருந்தது.

மாரியம்மனை ஒரு பெரிய ஆபத்திலிருந்து காப்பாற்றிவிட்டோம் என்ற மன ஆறுதலும் கர்வமும் அவனுக்கு ஏற்பட்டிருந்தாலும்

அந்தச் சமயம் தன் குடிசையையும் தன்னையும் அந்தக் காற்றின் வெறிக் கூத்திலிருந்து எப்படிக் காப்பாற்றிக் கொள்வது என்று தான் தெரியவில்லை. அவன் எதையும் லட்சியம் செய்யாமல் நடப்பது நடக்கட்டுமென்று காலோடு தலை போர்வையால் இழுத்துப் போர்த்திக் கொண்டு படுத்து விட்டான். அவனுக்குத் தூக்கம் மாத்திரம் வரவில்லை. அந்தப் பெரிய அரச மரம் கோயில் மீது விழுந்த பயங்கரமான காட்சி அவன் மனக் கண் முன் நின்று கொண்டுதானிருந்தது.

★

பொழுது விடிந்தது. மழையும் புயலும் ஓய்ந்து எங்கும் அமைதி சூழ்ந்திருந்தது. போராட்டம் நடந்த யுத்தகளத்தில் எத்தகைய அமைதி இருக்குமோ அத்தகைய பயங்கர அமைதிதான் நிலவி இருந்தது. முதல் நாள் முழுவதும் கோர தாண்டவம் ஆடிய சூறாவளிக் காற்று அப்பொழுது இல்லை; மழையும் இல்லை. ஆனால் அந்தக் காற்றும் மழையும் இரக்கமில்லாமல் எத்தகைய கொடுமைகளைச் செய்துவிட்டுச் சென்றன என்பதற்கு வேண்டிய அடையாளங்கள் நிறைய இருந்தன. அந்தக் காற்று ஆயிரக் கணக்கான மரங்களையும் வீடுகளையும் வீழ்த்தியதினால் களைப்படைந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அதற்குக் கொஞ்சம் கருணையும் தயவும் இருந்திருக்க வேண்டும். எப்படியோ உத்திராபதியும் அவனுடைய குடிசையும் காற்றின் ஆவேசக் கூத்துக்கு இலக்காகவில்லை. அந்தக் குப்பத்திலிருந்த பதினைந்து வீடுகளில் நான்கைந்து அடியோடு இடிந்து விழுந்து விட்டன. ஐந்தாறு வீடுகளுக்குப் பெருஞ் சேதம். ஊரில் பல மூலைகளிலிருந்து பலருடைய உயிர் பலியாகி இருக்க வேண்டுமென்று தோன்றியது.

உத்திராபதிக்கு அவனுடைய மனைவியைப் பற்றிய ஞாபகமே அதிகமாக இருந்ததால் அவன் வேறு எதைப் பற்றியுமே கவலைப்படவில்லை. மேல் துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டு துடி துடிப்புடன் பக்கத்துக் கிராமமாகிய கருஞ்சேவல் பட்டிக்குச் சென்றான். அவன் தன் மாமனார் வீட்டுக்குப் போய்த் தன் மனைவி சௌக்கியமாய் இருக்கிறாள் என்பதைத் தெரிந்து கொண்ட பிறகு தான் அவன் மனம் நிம்மதி யடைந்தது.

அவன் அன்று சாயந்திரம் ஊருக்குத் திரும்பிய போது ஊரிலுள்ள ஜனங்களெல்லாம் குப்பத்தில் வந்து கூடியிருப்பதைக் கண்டான். ஜனங்களெல்லாம் அரச மரம் விழுந்ததினால் நாசமாகிக் கிடக்கும் கோயிலைச் சுற்றித்தான் நின்று கொண்டிருந்தனர். அரச மரம் கோயிலைச் சின்ன பின்னமாக்கி இருந்தது. ஆனால் கோயிலிலிருந்த உலோக விக்கிரகம் மாத்தி





"இப்பத்தான் உங்களை நினைந்தேன்! நீங்களே வந்து விட்டீர்கள்!"

"நான் வருவேன் என்று நினைந்தீர்?"

"இல்லை! நீங்கள் வந்துவிடப் போகிறீர்களே என்று நினைந்தேன்......!"

"ஏன்......?"

"இருக்கிற அசோகாவை நீங்கள் வாயில் போட்டுக் கொண்டு போய் விடுவீர்களே என்றுதான்!"

ரம் எவ்விதப் பழுதுமின்றிக் கோயிலுக்கு இரண்டடி தள்ளி அமைதியாக எழுந்தருளியிருந்தது. இது ஒரு அதிசயமல்லவா? தெய்விக சக்தி தான்! ஊரிலுள்ள பாமர மக்களெல்லாம் இதில் வியப்படைந்திருந்தால் அதிசயமென்ன?

"சாமி இல்லே, பூதமில்லேன்னு சொல்லுறாங்களே. அப்படியிருந்தால் இப்படி நடக்குமா? ஏதோ ஒரு சக்தி இருக்கத்தான் இருக்கிறது. அது மாத்திரம் உண்மை..." என்றான் ஒரு கிழவன்.

'அதிலே என்ன சந்தேகம்? இது அதிசயம் தான். மாரியாத்தா மகிமையைச் சொல்ல முடியுமா? இந்தக்காத்து இவ்வளவு பெரிய அரச மரத்தையே அடியோடு தள்ளிக் கோயிலையே நாசமாக்கிடுத்தே, அம்மன் கிட்டே வர முடிந்ததா? ராத்திரி அடிச்ச காத்து என்ன? எவ்வளவு மரம் போச்சு! எவ்வளவு வீடு போச்சு! எவ்வளவு உயிரைப் பலி வாங்கிவிட்டது! அடடா! அது இந்தச் சாமியை நெருங்க முடிந்ததா? தெய்வமில்லேன்னு சொல்லுறவங்க எல்லாம் இதை வந்து பார்க்கட்டும்..." என்று பெருமிதத்துடன் சொன்னான் வேறொரு வயதான மனிதன்.

ஒவ்வொருவரும் இப்படித் தான் பேசிக் கொண்டிருந்தனர். இவைகளெல்லாம் உத்திராபதியின் காதுகளிலும் விழுந்தன. அவனுக்கு அல்லவா தெரியும் உண்மை? கணப்பொழுதில் ஊரில் எந்த மனிதர்களிடமெல்லாம் இவன் மதிப்பு வைத்திருந்தானோ அவர்களை எல்லாம் அறிவிலிகளாக நினைக்கத் தொடங்கினான். முதல்நாள் இரவு நடந்தவைகளெல்லாம் சொப்பனமாகி விடுமா? எல்லாம் அவன் நினைவுக்கு வந்தன. மாரியம்மன் தெய்வீகத் தன்மையால் கோயிலை விட்டுத் தானாகவே வெளி வந்திருக்கிறது என்பதை அவன் மனம் அறிய எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? அந்த மாரியம்மனைக் காப்பாற்றித் தூக்கிக் கொண்டு வந்து வைத்தது அவனல்லவா? இந்த உண்மையைக் கூடியிருந்த ஜனங்களிடம் சொல்லி விடலாமா என்று அவன் எண்ணினான். அவன் மனம் துடித்தது. ஆனால் அவன் வார்த்தையை அங்கு கூடியிருக்கும் ஜனங்கள் சுலபமாக ஒப்புக் கொள்ள வேண்டாமா? அப்பொழுது ஏதாவது சொன்னால் அவன் பாடு ஆபத்தாகத்தான் முடியும் என்பதையும் உணர்ந்தான். ஜனங்களின் பேச்சு அவன் மனசுக்கு எரிச்சலை உண்டாக்கியது. முதல்நாள் இரவு உயிருக்குத் துணிந்து காற்றிலும் மழையிலும் ஓடிக் கோயிலில் இருந்த விக்கிரகத்தைக் காப்பாற்றிய பெருமை அவனைச் சேர்ந்ததல்லவா? அந்தப் பெருமையை ஒரு தெய்வமே அடைவதாக இருந்தாலும் அவன் அதை விட்டுக் கொடுக்கத் தயாராய் இல்லை. அவன்தான் அம்மனை வெளியே கொண்டு வந்து வைத்தான் என்ற உண்மையைச் சொல்ல அஞ்சினாலும் ஜனங்களின் மனசை வேறு விதமாகவாவது திருப்பலாமென்று யோசித்தான். "அது இருக்கட்டும். ஏன் யாராவது ஒருத்தன் அந்தச் சாமியை வெளியே கொண்டு வந்து வைத்திருக்கக் கூடாது...?" என்றான் கூட்டத்திடையே புகுந்து, எதிர்பாராத வண்ணம் ஒரு குண்டைத் தூக்கிப் போட்டது போல.

ஒரு கிழவனுக்கு இதைக் கேட்டதும் அசாத்தியக் கோபம் வந்து விட்டது. "தம்பி, நீ மூளை இருந்து பேசறியா?" என்று சீறினான்.

"மாமா! விடுங்க, சிறு பையன் தானே? தெரியாமல் பேசுகிறான். இந்தக் காலத்துப் பிள்ளைங்களே அப்படித்தான். உலகத்திலே எதிலேயும் நம்பிக்கை வைக்காமே நாசமாய்ப் போறாங்க" என்றான் வேறொருவன்.

"அதிருக்கட்டும்! நேற்று ராத்திரி அடிச்ச காற்றும் மழையும் சாதாரணமா? அதிலே எவனாவது வீட்டை விட்டு வெளியே தலை நீட்ட முடிந்ததா? அப்படி இருக்கும்போது இந்தச் சாமியை எவனோ ஒருத்தன் கோயிலை விட்டு வெளியே தூக்கிக் கொண்டு வந்து வைத்திருப்பான்னு எவனாவது நம்புவானா? இது மாரியம்மனே அவளுக்காகச் செய்து கொண்ட காரியமாத்தான் இருக்கும்!" என்றான் வேறொருவன்.

'நான்தான் அந்தப் புயலுக்கும் மழைக்கும் அஞ்சாமல் இந்தக் கோயிலுக்கு வந்து அம்மனைத் தூக்கி வெளியே வைத்தேன்' என்று உண்மையைச் சொல்லி எல்லோரையும் திகைப்படைய வைத்து விடலாம் உத்திராபதி. ஆனால் அப்பொழுது இருந்த நிலையில் எல்லோரும் அவன் வார்த்தையைக் கேட்டு

அவனைப் பைத்தியக்காரன் என்று நினைப்பார்களே தவிர உண்மையை உணர மாட்டார்கள். மீறிப் பேசினால் கூடி அடிக்க வருவார்கள். ஆகவே உத்திராபதி எதுவும் பேசவில்லை. அவனுக்கு அங்கு நிற்கவே பிடிக்கவில்லை. அந்த இடத்தில் நிற்காமல் வீட்டுக்கு வந்து விட்டான். முதல் நாள் இரவு மழையிலும் புயலிலும் உலகம் எப்படி அகப்பட்டுத் தவித்ததோ அப்படித்தான் அவன் மனமும் தவித்தது.

அவனுக்கு மாரியம்மன்மீது ஒரு பொறாமையும் கோபமும் ஏற்பட்டது. உலகத்திலுள்ள மனிதர்கள்தான் பிறர் செய்த காரியத்தைத் தாங்கள் செய்ததாகப் போலிப் பெருமை பாராட்டிக் கொண்டு திரிகிறார்களென்றால் தெய்வமும் அப்படி இருக்குமா? தர்ம நியாயமாக நடக்கும் தெய்வமாக இருந்தால் உடனே பிரத்தியக்ஷமாகி 'என்னை நான் காப்பாற்றிக் கொள்ளவில்லை. என்னைக் காப்பாற்றியவன் உத்திராபதிதான்' என்று சொல்லி இருக்காதா? போகட்டும். அதுவே நேரில் வந்து சொல்லா விட்டாலும் அடிக்கடி பூசாரி மூலம் ஆவேசமாக வந்து ஏதாவது சொல்லுமே அப்படியாவது சொல்லக் கூடாதா? இப்படி எல்லாம் நினைந்து அவன் பொருமினான். எப்படியாவதுஅந்த மாரியம்மனுக்கு ஏற்பட்ட பொய்ப் பெருமையைக் குலைத்துவிட வேண்டுமென்று அவன் தீர்மானித்துக் கொண்டான்.

மாரியம்மனின் பெருமை அந்தக் கிராமத்தில் மாத்திரமில்லை, பக்கத்துக் கிராமமெங்கும் பரவிவிட்டது. கூட்டம் கூட்டமாக ஜனங்கள் வந்து பார்த்து விட்டுப் போயினர். கோயில் திருப்பணிக்காகப் பணம் வந்து குவியத் தொடங்கியது.

மூன்று மாத காலத்திற்குள் முன்பு இருந்ததைவிட அழகாகவும் பெரிதாகவும் ஒரு கோயில் கட்டப்பட்டு வெகு ஆடம்பரத்துடன் மாரியம்மனைப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகமும் செய்யப்பட்டது.

இதெல்லாம் உத்திராபதிக்குப் பிடிக்கவேயில்லை. இந்த விசேஷங்களிலெல்லாம் அவன் ஊர் ஜனங்களோடு கலந்து கொள்ளவேயில்லை. ஊர் ஜனங்களுக்கு உண்மையை உணர்த்த முடியாது என்பதை அவன் உணர்ந்து கொண்டான். ஜனங்களுடைய நடத்தை அவனுக்குப் பைத்தியக்காரத்தனமாகப் பட்டது. கோயிலில் நடக்கும் காரியங்களெல்லாம் அவனுக்குக் கேலிக் கூத்தாகப் பட்டது. இத்தனை மகிமையும் மாரியம்மனுக்கு எப்படி ஏற்பட்டது? தன்னால் தானே...? அந்த அரசமரம் விழுந்து கோயிலும் அம்மனும் எப்படியாவது போயிருக்கட்டும் என்று அவன் விட்டிருந்தால்...? அவன் மனத்தில் பளிச்சென்று ஒரு எண்ணம் தோன்றியது. 'இன்று இரவு நடுநிசிக்கு அந்த அம்மன் கோயிலுக்குச் சென்று அந்த அம்மன் விக்கிரகத்தை எடுத்துக் குளத்தில் விட்டெறிந்து விட்டால்...? அப்பொழுது அந்த அம்மனும் ஊர் ஜனங்களும் என்ன செய்கிறார்கள் பார்ப்போம்...?' இப்படிப் பட்ட ஒரு எண்ணம் எழுந்த பிறகு, அப்படிச் செய்தால்தான் அவன் மனசுக்கு ஆறுதல் உண்டாகும் போலிருந்தது.

நடுநிசி; உத்திராபதி தன் குடிசையிலிருந்து வெளியே எட்டிப் பார்த்தான். எங்கும் காரிருள் கவிந்திருந்தது. மழைத் தவளைகளில் 'கரகர' சப்தமும் கவர்க் கோழிகளின் 'ஙொய்' என்ற சப்தமும்தான் சிறிது இரவின் அமைதியைக் குலைத்துக் கொண்டிருந்தது. அந்த இருளிடையே கோயிலுக்குள்ளே எரிந்து கொண்டிருந்த தீபத்தின் ஒளி மினுக்கு மினுக்கென்று தெரிந்தது.

உத்திராபதி நெஞ்சில் துணிவை ஏற்படுத்திக் கொண்டு குடிசையை விட்டு வெளியே வந்து கோயிலை நோக்கி நடந்தான். அவனுடைய இருதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. இன்று அவன் செய்யப்போகிற காரியம் துணிகரமான காரியம் மாத்திரமல்ல, மிகவும் குற்றமான காரியம் என்பதையும் உணர்ந்திருந்தான். புயல் அடித்த அன்று எத்தகைய உத்வேகத்தோடு அவன் கோயிலை

## அது என்ன?













நோக்கி ஓடினானே அத்தகைய உத்வேகம் இப்பொழுது அவனுக்கு இல்லை. திருடனைப் போல் சுற்றிலும் பார்த்துக் கொண்டு தயக்கத்தோடும் உதறலோடும் நடந்தான். எப்படியோ அவன் கோயிலுக்கு வந்துவிட்டான். ஆனால் அவன் அங்கு கண்ட காட்சி அவனைத் திகைப்படைந்து நிற்க வைத்து விட்டது. கோயில் வெளிக் கதவு பூட்டப்படாமல் திறந்து கிடந்தது. என்ன ஆச்சரியம்! அவன் தயக்கத்தோடும் பயத்தோடும் கோயிலுக்குள் நுழைந்தான். சன்னதியில் அவன் கண்ட காட்சி மேலும் அவனைத் திகைப்படைய வைத்து விட்டது. சன்னிதானத்தில் வேறு யாரோ முகமறியாத மனிதன் நின்று கொண்டிருந்தான். அந்த மனிதன் கையில் அம்மனுடைய மஞ்சள் பட்டுப் பாவாடையில் சுற்றி முடியப் பட்டிருந்த சிறு மூட்டை இருந்தது. அவன் விழித்த விழியிலிருந்து அவன் ஒரு திருடன் என்பதை உத்திராபதி எளிதில் உணர்ந்து கொண்டான். அவனுடைய கையிலிருந்த மூட்டையில் அம்மனுடைய ஆபரணங்களை எல்லாம் சுற்றி மூட்டை கட்டி வைத்திருக்கிறான் என்பதையும் உத்திராபதி தெரிந்து கொண்டான். "ஏய்! யாருடா நீ? நடு நிசி வேளையிலே கோயில்லே வந்து என்னடா செய்யறே...!" என்று கூச்சலிட்டான் உத்திராபதி.

"ஏய்! வீணாகக் கூச்சல் போடாதே. ஏதாவது கூச்சல் போட்டே, குத்திக் கொன்று விடுவேன்" என்று உறுமினான் மற்றவன்.

உத்திராபதி அவனுக்கு எவ்வித பதிலும் சொல்லவில்லை. திடீரென்று புலிபோல் அவன்மீது பாய்ந்து அவனைக் கெட்டியாகக் கட்டிப் பிடித்துக் கொண்டு, "திருடன்! திருடன்!" என்று பெரிதாகக் கூச்சல் போடத் தொடங்கினான். உத்திராபதியின் இரும்புப் பிடியில் சிக்கி யிருந்த அந்த மனிதன், மூண்டி முரண்டு கொண்டு தன் இடையில் செருகி இருந்த கூரிய கத்தியை எடுத்தான். இதையறிந்த உத்திராபதி பளிச் சென்று அவன் கையைப் பிடித்து முறுக்கினான். திருடன் அவன் பிடியிலிருந்து விலக எவ்வளவோ சிரமப்பட்டான். உத்திராபதியா விடுவான்? 'திருடன், திருடன்' என்று கூச்சலிட்ட வண்ணமே அவன் கையை முறுக்கிக் கொண்டிருந்தான்.

சில நிமிஷ நேரத்தில் அங்கு பெருங் கூட்டம் கூடிவிட்டது. ஆத்திர மிகுதியால் ஒவ்வொருவரும் அடித்த அடியில் திருடன் பிழைப்பதே அரிதாகி விட்டது. அவன் கையிலிருந்த நகை மூட்டையை ஒருவன் பிடித்துக் கொண்டான். அவனைத் தூணோடு தாம்புக் கயிற்றால் பிணைத்துக் கட்டினர்.

"உத்திராபதி, இந்தச் சமயத்திலே நீ இங்கே எப்படி வந்தே?" என்றான் ஒருவன்.

"நான் சும்மா வீட்டு வாசலிலே வந்து நின்றேன். அப்போது கோவில் கதவு திறந்து

கிடப்பது போலே பட்டது. என்னவென்று பார்க்கலாம் என்று வந்தேன். இந்தத் திருடன் நகையை யெல்லாம் அள்ளி மூட்டைக் கட்டிக்கிட்டிருந்தான்!" என்றான். உத்திராபதி உண்மையைச் சொல்ல முடியாதவனாய்த் தட்டுத் தடுமாறினான்.

"ஓஹோ! அப்படியா! நல்ல சமயத்திலே தான் அப்பா, மாரியத்தா உன்னை இங்கே கொண்டுவந்து சேர்த்தாள். நல்ல வேளை. அவன் உன்னைக் கத்தியாலே குத்திக் கொல்லாமல் இருந்ததும் அவள் கருணைதான். அவள் மகிமையை வாயாலே சொல்லவே சாத்திய மில்லையப்பா..." என்று சொல்லி விட்டுச் சென்றான் அந்த மனிதன்.

★

உத்திராபதி வீட்டுக்கு வந்து படுக்கையில் சாய்ந்தான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை. எப்படி வரும்? அவனுக்கு ஒவ்வொன்றும் ஆச்சரியமாகவும் அதிசயமாகவும் தானிருந்தது. அவன் எந்தக் காரியத்தைச் செய்யும் துணிவோடு அந்த நிசி வேளையில் கோயிலுக்குப் போனான்? அவனுக்கு முன்னால் அங்கொரு திருடன் வந்திருந்து எதிர்பாராத வண்ணம் ஏன் அவன் கையில் சிக்கிக் கொள்ள வேண்டும்? எல்லாம் தெய்வச் செயலாகத் தான் அவனுக்குப் பட்டது. 'நல்ல சமயத்திலேதான் அப்பா மாரியாத்தா உன்னை இந்த இடத்திலே கொண்டு வந்து சேர்த்தா. நல்ல வேளையாக அவன் உன்னைக் கத்தியால் குத்திக் கொல்லாமல் இருந்ததும் அவள் கருணைதான்!' என்று யாரோ ஒருவன் சொல்லி விட்டுப் போனது அவன் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது. இன்று அவன் திருடனைப் பிடிக்கும்போது ஏற்பட்ட உத்வேக உணர்ச்சியும் பலமும், அன்று புயலடித்தபோது உயிருக்குத் துணிந்து கோயிலில் நுழைந்து அம்மனை வெளியே தூக்கிக் கொண்டு வந்து வைத்த உத்வேகமும் துணிச்சலும் இயற்கையாகவே அவனிடம் அமைந்ததா, அல்லது ஒரு தெய்வீக சக்தியினால் ஏற்பட்டதா என்றே அவனுக்குப் புரியவில்லை. இன்று திருடன் கையில் வைத்திருந்த கத்தி உத்திராபதியின் நெஞ்சில் பாய்ந்திருந்தால்...............? அன்று புயல் அடித்தபோது அவன் கோயிலுக்குள் நுழைந்த அந்தக் கணத்தில் அரசமரம் விழுந்திருந்தால் அவன் கதி என்னவாகி யிருக்கும். அந்தச் சமயத்தில் அவனைக் கோயிலுக்கு வரச் செய்ததும், பெரிய அபாயத்திலிருந்து உயிர் தப்ப வைத்ததும் ஏதோ ஒரு தெய்வ சக்தி முன்னின்றுதான் செய்திருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. அப்பொழுதுதான் அவனுடைய சிற்றறிவும், தான் செய்த காரியத்தில் வீண் கர்வமும், படாடோபமும் பாராட்டி அறியும் மனிதத் தன்மையும், அறிவுக்குப் புலனாகாத தெய்வத் தன்மைக்குத் தலை குனிந்து அடிமையாயின.



# நீங்கள் இன்று உங்கள் பற்களை

# மக்ளீன் செய்தீர்களா?

"சாப்பாட்டுக்குப்பிறகு நான் வழக்கமாக மக்ளீன்ஸ் சென்ற பத்து வருஷ காலமாக உபயோகித்து வருகிறேன். இப்படித்தவறாமல் உங்கள் பற்பசையை நான் உபயோகித்து வந்ததால் என்பற்களைப் பற்றிப் பெருமைப்படும் பேறு கிடைத்திருக்கிறது என்பது உண்மை!"



அவளது வெற்றிப்புன்னகையைப் பார்க்கும்போது அவள் மக்ளீன் செய்திருக்கிறாள் என்பதை உணர்ந்துகொள்ளலாம். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை பற்களின் தேய்மைத்தடுத்து, வாயில் ஊறும் அபாயகரமான உமிழ் நீர்களை அழிப்பதோடல்லாமல், ஈறுகளை பலப்படுத்தி சுவாசத்தை நறுமணமுள்ளதாக்கி, பற்களை வெண்மையாக இருக்கச் செய்கிறது என்பதை அவள் அறிவாள்—இவ்வளவும் ஒரே சமயத்தில் நடைபெறுகிறது.

நீங்கள் கூட மக்ளீன் பெராக்ஸைட் பற்பசையை பிரதி தினமும் இருமுறை உபயோகிப்பதால் அத்தகைய மனோகரப் புன்னகையைப்பெறமுடியும்.

இப்போது பெரிய அளவிலும், சிக்கனமான மாபெரும் அளவிலும் கிடைக்கிறது.




**பற்களை அதிக வெண்மையாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு:-

ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிட்.,
தபால் பெட்டி 6527, பம்பாய் 26, தபால் பெட்டி 387, கல்கத்தா
தபால் பெட்டி 1370, மதராஸ்.

HTY-23-TAM

# புயல் தணிந்தது

ரோமாஸ்



## உஷா சொல்கிறாள்

சில நாட்களாக உமாபதி என்னைக் கண்களாலேயே விழுங்கி விடுகிறவர் மாதிரி பார்க்கிறாரே! நான் ஊரிலிருந்து வந்து ஒரு வாரத்துக்கு மேல் ஆகியும் என் பக்கம் திரும்பிக் கூடப் பார்க்காமல் இருந்தவருக்கு இவ்வளவு துணிச்சல் திடீரென்று இப்பொழுது எங்கிருந்து வந்தது?

இங்கு வந்து சில நாட்கள் வரையில் எனக்கு உமாபதியைப் பார்க்கும் போதெல்லாம் ஆச்சரியமாயிருந்தது. 'அழகான பெண்களை நிமிர்ந்து பார்க்காத ஆண் பிள்ளைகள் கூட உண்டா?' என்று என் மனசுக்குள் நினைத்து வியந்த வண்ணம் இருந்தேன். உமாபதியின் போக்கு எனக்கு விளங்காத புதிராய்த் தான் இருந்தது. சதா காலமும் சித்ராவுடனேயே சுற்றி வந்து கொண்டிருந்த என்னை அவர் திரும்பிக் கூடப் பாராமல் இருந்தது மிகவும் சிரமமான காரியம் என்றே சொல்ல வேண்டும். நான், சித்ரா, அவள் கணவன் உமாபதி ஆகிய மூன்றே பேர்களைக் கொண்ட குடும்பத்தில் என்னை மாத்திரம் அவர் பொருட்படுத்தாமலிருந்தது எனக்கு விசித்திரமாகத் தோன்றிய தோடல்லாமல் விபரீதமாகவும் பட்டது. நான் என்ன அவ்வளவு மோசமாக இருக்கிறேனா? நான் நல்ல அழகு என்று என் தோழிகளும் மற்றவர்களும் சொல்லப் பல முறை கேட்டிருக்கிறேன். உமாபதி என்னிடம் காட்டிய அலட்சியம் என் பெண்மைக்கே சவால் விடுவதுபோல் இருந்தது.

ஆனால் இதெல்லாம் இரண்டு வாரங்கள் வரையில்தான். இப்பொழுது உமாபதி ரசிய சிருங்காராக மாறிவிட்டார்.

உண்மையிலேயே நான் அழகாகத்தான் இருக்கிறேன் என்னும் எண்ணம் என் மனசில் வேர் விட ஆரம்பித்தது.

'உஷா இருக்கிற அழகுக்கு, அவளுக்கு ஒரு நகையும் வேண்டாம். செதுக்கி எடுத்த மாதிரி மூக்கும், உருக்கி வார்த்த தங்கச் சிலையைப் போல் மேனியும் அவள் அழகு யாருக்கும் வராது!' என்று பக்கத்து வீட்டு மாமி வாய்க்கு வாய் சொல்லுவாளே! அது உண்மைதான் போலிருக்கிறது.

என் சுருண்ட கூந்தலிலும் தனிக் கவர்ச்சியிருக்கிறதாமே! உமாபதி இதைச் சித்ராவிடம் சொல்லப் போகத்தான் அவள் முகத்தைத் தூக்கிக் கொண்டு விட்டாள்.

ஆனால் உமாபதி செய்ததும் தப்புதான். கட்டின மனைவியிடமே இன்னொரு பெண்ணைப் பற்றி அப்படிப் புகழ்ந்து பேசினால் அவளுக்குக் கஷ்டமாகத்தானே யிருக்கும்?

நான் சித்ராவுடன் அவள் புக்ககத்துக்கு வந்தது தவறு. புது மணத் தம்பதிகள் எத்தனையோ விதமாகத் திட்டம் போட்டுத் தங்கள் புதுவாழ்வை அணு அணுவாகச் சுவைத்து அனுபவிப்பார்கள். அவர்கள் இன்ப வாழ்வில் இடைஞ்சலாக நான் இருப்பது சரியல்ல. சித்ரா அவ்வளவு தூரம் வற்புறுத்தியதன் மேல்தான் நான் அவளுடன் புறப்பட்டு வந்தேன்.

மேலும் சித்ராவின் விருப்பத்தைப் பூர்த்தி செய்விப்பது என் கடமையாகி விட்டது. குழந்தைப் பருவத்திலேயே தந்தையை இழந்து தாயின் ஆதரவிலே வளர்ந்து வரும் பரம ஏழைப் பெண்ணாகிய எனக்குச் சித்ராவின் தகப்பனார் தானே ஆதரவு அளித்து வருகிறார்! என் தாயார் அவர்கள் வீட்டுச் சமையலறையில் கிடந்து நாள் முழுவதும் உழைத்து ஓடாய்ப் போகிறாள். அவர்களுடைய உதவியில் கொஞ்சம் படிக்க முடிந்தது. சம்பளம் இல்லாமல் பள்ளிக்கூடத்தில் இடம் கிடைத்ததன் காரணமாக நான் மிகவும் சிரமப்பட்டுப் படித்து, வீட்டு வேலைகளையும் கவனித்துக் கொண்டு எஸ்.எஸ்.எல்.ஸி. பரீக்ஷையில் தேறிவிட்டேன்.

சமையற்காரியின் பெண்ணுக்குப் படிப்பு வேறு கேடா என்று கேட்டு என்னை அலட்சியம் பண்ணி விடாமல் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்தது பற்றிச் சித்ராவின் பெற்றோருக்கு நான் என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறேன்.

சித்ராவுக்கு உலகத்தைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். முதல் முதல் புருஷன் வீட்டுக்குப் போகும் ஒரு பெண் நாகரிகம் மிகுந்த இந்தக் காலத்தில், யாரையாவது துணைக்கு அழைத்துக் கொண்டு போவாளா? நான் என்ன சொல்லியும் அவள் அதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை.

"உஷா, நீ இல்லாமல் அவரிடம் போவதற்கு எனக்கு என்னவோபோல் இருக்கிறதடி! அவர் காலையில் ஆபீஸுக்குப் போய் விட்டால் சாயங்காலம் ஆறு மணிக்கு மேல் தான் வருகிறாராம். நான் அதுவரையில் என்னடி செய்வேன்! தனியாகக் 'கொட்டுக் கொட்'டென்று எப்படியடி உட்கார்ந்திருப்பேன்! நீ என்னோடு வந்துவிட்டால் எனக்கு எப்படியும் பொழுது போய்விடும்!" என்று இன்று சித்ரா வற்புறுத்தி அழைத்ததினால் தான் நான் இங்கு வரவேண்டி வந்தது.



என் பக்கமே திரும்பிக் கூடப் பார்க்காமல் இருந்த உமாபதியை, என்னைப் பார்க்கும் படி செய்தவள் சித்ராதான்.

"இதோ பாருங்கள், உஷாவுக்கு என்னுடைய ஜார்ஜெட் புடவை எவ்வளவு அழகாயிருக்கிறது!" என்று கூறி ஒரு நாள் என்னை அலங்காரம் செய்து அவர் முன் நிறுத்துவாள். "என்னுடைய 'ஸாட்டின் ஜாக்கெட்'டும், மாங்காய் மாலையும் உஷாவுக்கு எவ்வளவு பொருத்தமாயிருக்கின்றன பார்த்தீர்களா?" என்பாள் இன்னொரு நாள்.

சித்ரா என்னைப் பற்றிச் சொல்லும் போதெல்லாம் உமாபதியின் முகம் போகும் போக்கைப் பார்க்க வேண்டுமே! என்னை ஏறெடுத்தும் பாராமல், "சரிதான், சரிதான்! நன்றாயிருக்கிறது!" என்று சுவாரஸ்யம் இல்லாமல் சொல்லுவார். அப்பொழுது எனக்கு மிகவும் வேதனையாயிருக்கும். சித்ராவும் கணவனுடைய போக்கைக் கண்டு வேதனைப்படுவாள். ஆனால் வாயைத் திறந்து ஒன்றும் பேசமாட்டாள்.

நான் இங்கே வந்திருப்பது உமாபதிக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை போலிருக்கிறது. சித்ராவோ என்னை ஊருக்குப் போக அநுமதிக்க மாட்டேன் என்கிறாள். இந்தத் தர்ம சங்கடத்துக்கு என்ன செய்வது! இளந் தம்பதிகளின் இன்ப வாழ்க்கையில் ஒரு இடைஞ்சலாக நான் வந்து சேர்ந்தேனே என்று என் மனசுக்குக் கஷ்டமாயிருக்கிறது.

அன்று உமாபதி காமிரா ஒன்று வாங்கிக் கொண்டு வந்தார்.

"சித்ரா, உன்னைப் போட்டோ பிடிக்கப் போகிறேன். அப்புறம் நீ என்னைப் படம் பிடிக்க வேண்டும், என்ன!" என்று ஆசையோடு சொல்லிக் கொண்டே வந்தார்.

அந்தக் காமிரா, சித்ராவுக்கும் எனக்கும் இடையில் இவ்வளவு பெரிய பிளவை உண்டாக்கி, எல்லோருடைய மனத்திலும் கடும் புயலை எழுப்பி வீசச் செய்யப் போகிறது என்று நான் துளிக்கூட நினைக்கவில்லை.

சித்ராவைத்தான் அவள் கணவன் படம் எடுக்கக் கூப்பிட்டாரே யொழிய என்னைப் பற்றி அவர் வாய் திறக்கவில்லை. அவர்களுடைய வீட்டில் நான் ஒருத்தி இருப்பதையே அவர் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

சித்ரா, பாவம்! வெள்ளை மனம் படைத்தவள். தன்னை மட்டும் அலங்காரம் செய்து கொண்டு போய்ப் படம் எடுத்துக் கொள்ளக் கூடாதா? இப்பொழுது அதை நினைத்து என்ன பிரயோஜனம்!

"உஷா, இந்தப் பாக்குக் கலர்ப் புடவையை நீ கட்டிக் கொள். போட்டோவில் ரொம்ப நன்றாய் விழும்!" என்றாள் சித்ரா.

எனக்கு அப்பொழுது என்ன செய்வது என்றே புரியவில்லை.

"சித்ரா, நான் சொல்லுவதைக் கேள்! நீ மட்டும் போய்ப் போட்டோ எடுத்துக் கொள்!" என்றேன். எனக்கு அதற்கு மேல் அவளிடம் என்ன சொல்வதென்று தெரியவில்லை.

"ராணிக்கு இன்றைக்கு என்ன வந்து விட்டது? ஏன் படம் எடுத்துக் கொள்ள வரமாட்டேன் என்கிறாய்? என்னோடு பட்டணத்துக்கு வந்திருந்ததற்கு அடையாளமாக நீ என்னுடன் ஒரு போட்டோ எடுத்துக் கொள்ள வேண்டாமா?" என்று கேட்டாள் சித்ரா.

"நான் சொன்னால் கேள். வேண்டாம். நீ போய்ப் படம் எடுத்துக் கொள்!" என்றேன் மறுபடியும்.

"ஏன் நீ வரமாட்டேன் என்கிறாய்? நீ அதை என்னிடம் சொன்னால்தான் நான் படம் எடுத்துக் கொள்ளப் போவேன்!" என்று குழந்தை மாதிரி சித்ரா பிடிவாதம் பிடிக்க ஆரம்பித்து விட்டாள்.

என் நிலைமை சிரமமாகப் போய் விட்டது.

"சித்ரா, இன்னும் நீ குழந்தையாகவே இருக்கிறாயே! உன் கணவர் ஆசையோடு

உன்னைப் படம் எடுக்கக் கூப்பிட்டால் நீ மட்டும் அல்லவா போக வேண்டும்? அதை விட்டு விட்டு என்னையும் அழைக்கிறாயே! உனக்குக் கொஞ்சங்கூட நாகரிகமே தெரிய வில்லையே!'' என்றேன்.

"ஓகோ, இப்பொழுது தெரிந்தது. உஷா தேவியைப் பிரத்தியேகமாக அழைக்கவில்லை யென்று கோபமா? அவர் சார்பில் நான் அழைக்கிறேன், வா! நீ, நான் சொன்னபடி பாக்குக் கலர்ப் புடவையைக் கட்டிக்கொண்டு



போட்டோ எடுத்துக் கொள்ள வரவில்லை யென்றால், நானும் போக மாட்டேன்!'' என்று அடம் பிடித்தாள் சித்ரா.

கடைசியில் வேறு வழி யில்லாமல் சித்ரா வின் விருப்பப்படி அலங்காரம் செய்து கொண்டு அவளைத் தொடர்ந்தேன். இல்லை! அப்படிச் சொல்லுவது தவறு. சித்ரா என் கரங்களைப் பிடித்து உமாபதியினிடம் அழைத்துக் கொண்டு போனாள்.



## உமாபதி சொல்கிறான்:

உஷா இத்தனை அழகு என்று இத்தனை நாட்களாக எனக்குத் தெரியாது. எத்தகைய முட்டாள் நான்! என் வீட்டிலேயே ஸ்வர்ண விக்கிரகம் மாதிரி வளைய வந்து கொண்டிருக்கும் உஷாவை இத்தனை நாட்களாக ஏறெடுத்தும் பார்க்காமல் இருந்திருக்கிறேனே!

முதல் முதலில், சித்ராவோடு அவளும் வந்திருக்கிறாள் என்பதை அறிந்ததும் என்னால் அதைச் சகிக்க முடியவில்லை. நானும் சித்ராவும் நடத்தப்போகும் இன்ப வாழ்க்கையில் இடையூறாகக் குறுக்கிட்டு விட்டாள் உஷா என்று நினைத்து அந்தப் பேதைப் பெண்ணை முழு மனதுடன் வெறுக்கலானேன். இதன் காரணமாக அவள் முகத்தைக்கூட நான் ஏறிட்டுப் பார்க்கவில்லை. ஆனால் நான் மட்டும்......அவளுடைய சந்திர வதனத்தை ஒரு தடவை பார்த்திருந்தால் என் அபிப்பிராயம் முற்றிலும் மாறிப் போயிருக்கும்!

சித்ராவுக்கு உஷாவினிடம் அத்யந்தப் பிரேமை. அடிக்கடி அவளைப் பற்றிப் பேசுவாள். அவள் அழகைப் புகழ்ந்து கொள்ளுவாள். எனக்கு அது கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. என் மனத்தில் உஷாவைப்பற்றித் தவறாகவே நினைத்துக் கொண்டிருந்ததனால், சித்ரா என்ன சொல்லியும் என் மனம் மாறவில்லை.

சித்ராவும் அழகிதான். அதில் சந்தேகம் இல்லை. அவளுடைய பேசும் விழிகளைக் கண்டுதான் நான் அவளை மணந்து கொள்ளச் சம்மதித்தேன்.

ஆனால் உஷாவைப் பார்த்த பின்பு, சித்ராவின் அழகு அவ்வளவு அசாதாரணமாகத் தோன்றவில்லை. அவள் அழகு ஒரு தனிப் பட்ட ரகத்தைச் சேர்ந்ததா யிருக்கிறது. அப்பப்பா! அவள் விழிகளுக்குத்தான் என்ன சக்தி! அன்றைய தினம் போட்டோ பிடிக்கும்போதுதான் அவளது விசாலமான நயனங்களைச் சந்தித்தேன். அந்த அழகிய கண்களை இத்தனை நாட்களாகப் பார்க்காமல் இருந்து விட்டது எவ்வளவு பெரிய தவறு என்று எண்ணி ஏங்கினேன்.

முதலில் சித்ரா, "உஷாவோடு சேர்ந்து தான் போட்டோ எடுத்துக் கொள்வேன். பாவம், இன்னும் அவள் கொஞ்ச நாட்களில் ஊருக்குப் போய் விடுவாள். அப்புறம் அவள் இங்கே ஏன் வரப்போகிறாள்? ஒரு நிமிஷம் பொறுத்துக் கொள்ளுங்கள். அவளுக்கும் டிரஸ் பண்ணி அழைத்துக் கொண்டு வந்து விடுகிறேன்!'' என்று சொன்னதும் எனக்குப் பிரமாதமான கோபம் வந்து விட்டது.

"சுத்த அசடா யிருக்கிறாயே, சித்ரா! எதற்கெடுத்தாலும் உஷாதானா உனக்குக் கிடைத்தாள்! சினிமா, பார்க்கு, பொருட்காட்சி, கடற்கரை, நாடகம், சங்கீதக் கச்சேரி — எங்கே போனாலும் நீ அவளை அழைத்துக் கொண்டு வந்து விடுகிறாய். இந்தப் போட்டோவில் மட்டும் உன் அருமைத் தோழி இல்லாமல் இருப்பானேன்! அழைத்துக் கொண்டு வா!'' என்றேன். இதை நான் மிகவும் கசந்து கொண்டுதான் சொன்னேன்.

"இப்படியெல்லாம் வாய்க்கு வந்தபடி பேசாதீர்கள். உஷாவின் காதில் விழுந்தால் என்னவாகும்? அம்மாவினிடமிருந்து கடிதம் வந்து விட்டது, அவளை உடனே அனுப்பச் சொல்லி. நான்தான் அவளை அடுத்த மாதம் அனுப்பலாம் என்று இருக்கிறேன்!'' என்றாள் சித்ரா. அவள் கண்களில் நீர் தளும்பியது.

"சரி, சரி! நீ அவளையும் அழைத்துக் கொண்டு சீக்கிரம் வா!" என்றேன்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் சித்ரா உஷாவை அழைத்துக் கொண்டு வந்தாள்.

"நாங்கள் தயார்!" என்றாள் சித்ரா, காமிராவின் முன்பு நின்று கொண்டு.

உடனே நான் காமிராவைச் சரிசெய்து கொண்டேன்.

"சித்ரா, வா, வந்து இப்படி நில்லு!" என்று அவளை மட்டும் பார்த்துக் கொண்டு உஷாவைப் பாராமல் சொன்னேன்.

சித்ரா உஷாவின் கைகளைப் பிடித்துக் கொண்டு பலவந்தப் படுத்தி அழைத்துக் கொண்டு வந்தாள். நான் அப்பொழுதும் அவளைக் கவனிக்கவில்லை. இரண்டு பேரும் எதிரே வந்து நின்றதும் காமிராவைச் சரிப்படுத்தினேன்.

"சித்ரா, இன்னும் கொஞ்சம் நெருங்கி நில். சிரித்த மாதிரி நிற்க வேண்டும்!" என்று சொல்லி விட்டு, காமிராவின் மேல் இருந்த என் பார்வையை அவள்மேல் திருப்பினேன்.

என் கண்கள் உஷாவின் கண்களைச் சந்தித்தன. அடடா! என்ன அழகு! என் வீண் பிடிவாதத்தின் காரணமாக அவளைப் பார்க்காமலே இருந்து விட்டேனே! 'ஸாட்டின் ஜாக்கெட்' அவளுக்கு எவ்வளவு பாந்தமாயிருந்தது! அவள் உடுத்தியதனால் ஜார்ஜெட் புடவைக்கே அலாதி அழகு வந்து விட்டதே!

"என்ன இது! படம் எடுப்பதாகச் சொல்லி விட்டு இப்படிப் பிரமை பிடித்தாற் போல் நிற்கிறீர்களே!" என்று சித்ராவின் குரல் கணீர் என்று காதில் விழுந்த பிறகு தான் எனக்கு என் சுயநினைவு வந்தது.

நான் ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "சித்ரா, உன் தோழியைக் கொஞ்சம் தலையைச் சாய்த்தமாதிரி 'ஸ்டைலாக' நிற்கச் சொல்லு. காமிராவைப் பார்த்துக் கொஞ்சமாகச் சிரிக்கச் சொல்லு!" என்றேன் — உஷாவைப் பார்த்துக் கொண்டுதான் இதைச் சொன்னேன். அடுத்த நிமிஷம் 'க்ளிக்' என்று காமிராப் பொத்தானைத் தட்டினேன்.

அன்று மிதமிஞ்சிய உற்சாகத்தில் ஏழெட்டுப் படங்கள் எடுத்தேன். அவற்றுள் இரண்டு மூன்று படங்கள் உஷாவை மட்டும் தனியாக எடுத்தேன். அன்று மாலையே ஸ்டுடியோவுக்குச் சென்று 'பிலிமை'க் கொடுத்து விட்டு வந்தேன்.

மறு நாளைக்கே, நான் எடுத்த போட்டோ படங்கள் என் கைக்கு வந்து விட்டன. படங்கள் பிரமாதமாயிருந்தன. அவைகளை எடுத்துக் கொண்டு சித்ராவிடம் ஓடினேன். அங்கே உஷாவும் ஏதோ அவளுக்கு வீட்டு வேலைகளில் ஒத்தாசை செய்து கொண்டிருந்தாள்.

"சித்ரா, உன் தோழி உஷா பிரைஸ் அடித்து விட்டாள்! போட்டோவில் மிகவும் அருமையாக விழுந்திருக்கிறாள்!" என்று சொல்லிக்கொண்டே அவள் கையில் படங்களைக் கொடுத்தேன். என் கண்கள் மட்டும் உஷாவினிடமே லயித்து விட்டன.

சித்ராவைப் புண்படுத்தும் நோக்கத்துடன், நான் இந்த வார்த்தைகளைச் சொல்லவில்லை. ஆனால் நான் ஒருதடவை சொன்னதோடு நிறுத்தியிருந்தால் சித்ராவுக்குக் கோபம் வந்திருக்காது. நான் ஐந்தாறு தடவை அதையே திருப்பித் திருப்பிச் சொல்லி விடவே அவள் முகம் என்னவோ மாதிரியாகி விட்டது.

இந்தப் பெண்களே விசித்திரமான சுபாவமுள்ளவர்கள். ஒரு பெண்ணுக்கு எதிரில் இன்னொரு பெண்ணைப் புகழ்ந்து பேசி விட்டால் அவ்வளவுதான். பிரளயமே வந்து விடும். சித்ரா மாத்திரம் இந்தச் சுபாவத்துக்கு எப்படி மாறாயிருப்பாள்? அவளும் பெண்தானே!

அந்தச் சம்பவத்துக்குப் பிறகு, சித்ரா என்னிடம் உஷாவைப் பற்றிப் பேசுவதையே அடியோடு நிறுத்தி விட்டாள். அவளை விரைவில் ஊருக்கு அனுப்பி விட வேண்டும் என்று துடித்தாள்.



"என் ஐயா, இந்த ஊரில் யாரும் பெரிய மனிதர்களே பிறந்ததில்லையா?"
"......இல்லையே! இங்கே எல்லோரும் குழந்தைகளாகத்தான் பிறக்கிறார்கள்!"



## சித்ரா சொல்கிறாள்:

இந்த ஆண்களைப்போல் கெட்டவர்கள் உலகத்திலேயே கிடையாது. பிற பெண்களைப் பார்ப்பதில், அவர்களைப் புகழ்வதில் அவர்கள் கொஞ்சங்கூடக் கூசுவதில்லை.

அடேயப்பா! முதலில் இவர் எவ்வளவு பதவிசா யிருந்தார்! ஆனால் தவறு என்னுடையதுதான். பிறந்தகத்தை விட்டுப் புறப்படும்போதே அம்மா சொன்னாள், உஷாவை அழைத்துக் கொண்டு போக வேண்டாம் என்று.

"கல்யாணத்துக்கு நிற்கிற பெண்ணை உன்னோடு புக்ககத்துக்கு அழைத்துக் கொண்டு போகவாவது! இது சுத்த அசட்டுத்தனம்!" என்று அம்மா படித்துப் படித்துச் சொன்னாள். அப்பொழுது அம்மாவிடம் கோபம் வந்தது. அம்மா சொன்னது எவ்வளவு நியாயம் என்பது இப்பொழுது தெரிகிறது.

நானும் உஷாவும் ரயிலை விட்டு இறங்கினதும் அவரைக் கவனித்துப் பார்த்தேன். அவர் முகம் மலர்ந்து தான் இருந்தது. என் பின்னாலேயே உஷா என்னைத் தொடர்ந்து நடந்து வந்தாள்.

"சித்ரா, இது யார்?" என்று அவர் கேட்டார்.

"இவள் என் தோழி உஷா. குழந்தைப் பருவத்திலிருந்து என்னோடு ஒன்றாய்ப் பழகி விளையாடியவள். இங்கே நீங்கள் ஆபீஸுக்குப் போன பிறகு பேச்சுத் துணையாக இருக்கட்டும் என்று இவளையும் அழைத்துக் கொண்டு வந்தேன். இவள் அம்மா சின்ன வயசிலிருந்தே எங்கள் குடும்பத்து மனுஷி மாதிரி பழகி விட்டாள்!" என்று சொன்னேன். அவர் அலட்சியமாகச் 'சுள்' கொட்டி விட்டு, நேரே டாக்ஸியைக் கூப்பிடப் போய் விட்டார். அவர் முகத்தில் முதலில் இருந்த உற்சாகம் எங்கே போய்விட்டது? ஏன் இப்படித் திடீரென்று மாறிப் போய்விட்டார்!

உஷா வந்து இரண்டு வாரங்களுக்கு மேல் ஆகியும் அவர் அவள் இருக்கும் பக்கமே திரும்பிப் பார்க்கவில்லை. எனக்கு ரொம்ப ஆச்சரியமா யிருந்தது.

சினிமா, பாட்டுக் கச்சேரி, பொருட்காட்சி என்று எங்கெல்லாமோ அவளை அழைத்துக் கொண்டு போனேன். அவளுக்கு விதம் விதமாக அலங்காரம் செய்து என்னோடு அழைத்துக் கொண்டு போவதில் எனக்கு அளவு கடந்த திருப்தி.

ஏழைப் பெண்ணான உஷாவுக்கு இறைவன் நல்ல அழகைக் கொடுத்திருந்தான். பதினெட்டு வயதுப் பெண்ணான உஷாவைப் புது மணம் கமழும் என் இன்ப வாழ்க்கையில் பங்கெடுத்துக் கொள்ளச் செய்தது தவறு என்று எனக்கு ஒரு போதும் தோன்றவில்லை. சின்னஞ்சிறு வயதிலிருந்து இணை பிரியாமல் பழகி விட்டதனால், பருவம் அவள் மீது அள்ளித் தெளித்திருந்த அழகை என்னால் பூரணமாக உணர முடியவில்லை. என்னைப் பொறுத்த வரையில் உஷாவின் மேனியில் பொங்கிப் பொலிந்த கவர்ச்சி ஒரு பருவம் அடைந்த பெண்ணின் கவர்ச்சியாகவே தோன்றவில்லை. சிறு வயதிலிருந்து என் மனசில் பதிந்து போயிருந்த குழந்தை உஷாவின் கவர்ச்சியாகவே தோன்றியது.

இந்தக் களங்கமற்ற என் அசட்டுச் சுபாவத்தினால் தான் உஷாவைப் பற்றி அவரிடம் இடைவிடாமல் புகழ்ந்து பேசினேன். அந்தப் பேச்சை என் கணவர் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை என்பதையறிந்து என் மனம் புழுங்கினேன்.

அன்றைய தினம் என் கணவர் எங்கள் இருவரையும் போட்டோ எடுத்த போது தான் உஷாவைக் கவனித்துப் பார்த்தார். பிறகு அவர் ஓயாமல் உஷாவையும் அவள் அழகையும் புகழ ஆரம்பித்து விட்டார்.

நல்ல வேளை. உஷாவுக்கு விவாகம் நிச்சயமாகி விட்டதாம். ஒரு பணக்கார வாலிபன் அவள் போட்டோவைப் பார்த்துச் சம்மதம் தெரிவித்து விட்டானாம். நேரில் உஷாவைப் பார்த்து விட்டால் அவன் அயர்ந்து போய் விடுவான் என்பதில் சந்தேகம் இல்லை. உஷா நாளைக்கு ஊருக்குப் போகிறாள். நல்ல துணையும் கிடைத்திருக்கிறது. அவளை ஊருக்கு அனுப்பி விட்டுத்தான் மறுகாரியம் பார்க்க வேண்டும்.

அப்பாவிடமிருந்து உஷாவை உடனே அனுப்பி வைக்கும்படி கடிதம் வந்ததைப் பார்த்ததும் எனக்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. உஷாவுக்கு விவாகம் ஆகி அவள் ஆசைக் கணவனுடன் சௌக்கியமாக வாழட்டும். இதுவே என் பிரார்த்தனை.



குழந்தை :—உங்களுக்குப் பிடிக்குமே என்று அசோகா பாக்குத் தூள் கொண்டு கொடுத்திருக்கிறேன்...

வாத்தியார் அம்மா:—சபாஷ்! போட்டுக் கொண்டு விட்டேன். அசோகர் கலிங்கத்தின் மீது எப்பொழுது படை எடுத்தார், தெரியுமா?

குழந்தை :—இப்பதான் உங்களுக்கு அசோகா கொண்டு கொடுத்தேன். என்னையே கேள்வி கேட்கிறீர்களே!

# பொல்லாதவர்

கிருஷ்ணா

"அம்மா! சாவித்திரி! இப்படி வந்து நமஸ்காரம் பண்ணம்மா!" என்று தம் மகளை அன்புடன் அழைத்தார் ராமகிருஷ்ணன்.

தந்தையின் குரலை கேட்டதும், சாவித்திரியின் உடல் ஒருமுறை 'குப்'பென்று வியர்த்து விட்டது. அவள் கள்ளமற்ற நெஞ்சம் படபடத்தது. கால்கள் தடுமாறின.

தாயார் ஒருபுறம் உருட்டி விழிக்க, இளைய சகோதரி சாந்தா கூடத்தை நோக்கிக் கையைக் கரகரவெனப் பிடித்து இழுக்க, ஒருவாறு சம்பந்திகள் முன்பு வந்து எல்லோருக்கும் வணக்கம் செய்தாள் சாவித்திரி.

சாந்தா மெதுவாக, "அக்கா! இவர்தான் மாப்பிள்ளை. நன்றாகப் பார்த்துக் கொள்!" என்று சாவித்திரியின் காதில் சொன்னாள். நாணமும் பயமும் மேலிட, தன் விழிகளை ஒருமுறை அந்த வாலிபனை நோக்கிச் சுழற்றினாள். அவ்வளவுதான்! இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு உணர்ச்சி அவள் இதயமெங்கும் வியாபிக்க, முகம் கோவைப் பழம் போல் சிவந்து விட்டது.

தம் பெண்ணின் நிலையை உணர்ந்த ராமகிருஷ்ணன், "சாவித்திரி! அப்படி உட்கார்ந்து பாடம்மா!" என்றார். உடனே, அங்கு தயாராக வைக்கப்பட்டிருந்த வீணையினருகில் சென்று அமர்ந்து, வீணையின் இனிய நாதத்துடன் தன் தேனிசையையும் கலந்து பொழிந்தாள் சாவித்திரி.

சம்பந்திமார்களுக்கு, அதிலும் முக்கியமாக மாப்பிள்ளை சுந்தரேசனுக்கு, சாவித்திரியை



மிகவும் பிடித்து விட்டதென்று அவன் முக பாவத்திலிருந்தே தெரிந்தது. இருந்தாலும் கௌரவத்தை விட்டுக் கொடுக்காமல், ஊருக்குப் போய் கடிதம் எழுதுவதாகக் கூறி விட்டுச் சம்பந்திகள் ஊர்போய் சேர்ந்தனர்.

★

சாவித்திரி தன் அறையில் அமர்ந்து நீண்ட நேரமாக யோசித்தாள். அவள் மனம் அலைகடல் துரும்பென அலை பாய்ந்தது. சுந்தரேசனின் மன்மத வடிவைச் சிந்திக்கும் தோறும், அவள் உள்ளத்தில் பயமும் பச்சாதாபமும் ஏற்பட்டன.

முன்பு நடந்ததுபோல, இந்த வாலிபனுக்கும் ஏதாவது நேர்ந்து விட்டால்?......என்று எண்ணும்பொழுதே அவள் உள்ளம் பீதியினால் உறைந்தது.

இனியும் அதுமாதிரி நடக்க விடக்கூடாது. என் தலையெழுத்தை இரு முறைகள் பரீட்சை செய்தது போதும். இனியும் இந்த விஷப் பரீட்சைக்கு நான் ஒப்பமாட்டேன்! இதற்கு ஏதாவது ஒரு வழி செய்து தானாகவேண்டும் என்று உறுதிகொண்டது அவள் மனம்.

★

சாவித்திரி நல்ல அழகிதான். குற்றம் குறை எதுவும் கூற முடியாமல், கடைந்தெடுத்த தங்கப் பதுமைபோல் இருப்பாள். அவள் வீணை வாசித்துக்கொண்டு பாடினால் இன்றெல்லாம் கேட்டுக் கொண்டிருக்கலாம். படிப்பிலும் அவள் சோடையில்லை. வீட்டு வேலைகளிலும் கெட்டிக்காரி. ராமகிருஷ்ணனோ தம் அருமைப் பெண்ணுக்காக, பணத்தை பணம் என்று பார்க்காமல் வாரியிறைக்கக் காத்திருந்தார். இப்பேர்ப்பட்ட பெண்ணுக்கு வரனா கிடைக்காது போய் விடும் என்று நினைத்துக் கொண்டிருந்தார்.

ராஜாவைப் போல் இருந்த ஒருவன் சாவித்திரியைத் தன் மனைவியாக்கிக் கொள்ள முன் வந்தான். புடவை, வேஷ்டி, வெள்ளிச் சாமான்கள், எல்லாம் தயாராகி, நிச்சய தாம்பூலமும் ஆகிவிட்டது. இந்த நிலையில், திடீரென்று மூன்றே நாட்கள் விஷ ஜுரத்தில் அந்த பையன் மாண்டு விட்டதாகத் தந்தி வந்தது. இவ்வாறு சாவித்திரியின் முதல் கல்யாணம் தடைப்பட்டு விட்டது.

சாவித்திரியின் குடும்பத்தவர்களுடைய வருத்தத்துக்குக் கேட்க வேண்டுமா? இதே காரணமாக, சாவித்திரியின் யோகத்தைக் கண்கூடாகக் கண்ட அந்த ஊரில் வேறு எந்தப் பையனும் சாவித்திரியைத் தன் மனைவியாக்கிக் கொள்ளத் துணியவில்லை.

ராமகிருஷ்ணன் தம் குடும்பத்தை, வேறு ஊருக்கு மாற்றிக் கொண்டார். சாவித்திரிக்கு இரண்டாவது முறையாகக் கல்யாணம் நிச்சயமாயிற்று. இந்தத் தடவையும் விதி அவரைச் சதி செய்து விட்டது.

கல்யாணத்துக்கு முதல் நாள், விளையாட்டாகச் சிநேகிதர்களுடன், ஓடும் ஆற்று வெள்ளத்தில் இறங்கிய மாப்பிள்ளைப் பையன் திரும்பி வரவேயில்லை. அவன் உயிரற்ற உடல் இரண்டு தினங்களுக்குப் பிறகு பத்து மைல்களுக்கு அப்பால் கிடைத்தது.

இரண்டாம் முறையும் இந்தத் துக்க சம்பவம் நடந்தபின் சாவித்திரியைக் கண்டாலே, பையன்கள் நடுங்கி, ஒதுங்க ஆரம்பித்து விட்டனர். ராமகிருஷ்ணன் இனித் தம் பெண்ணுக்கு கல்யாணமே ஆகாதோ? என்று மிகவும் கவலைப்பட ஆரம்பித்து விட்டார்.

சாவித்திரி! பாவம்! என்ன செய்வாள்? அவள் உள்ளத்தின் வேதனை அவளுக்கல்லவா தெரியும்? அவள் எங்கே போனாலும் ஊர் வம்புக்காரிகள் அவளுடைய துப்புக்கெட்ட அதிர்ஷ்டத்தைப் பற்றி அவள் காது கேட்கவே வம்பு பேசுவார்கள்! இதற்குப் பயந்து அவள் கோவிலுக்குப் போவதைக் கூட நிறுத்திக் கொண்டுவிட்டாள்.

பெண்ணுக்கு வயது ஏறிக்கொண்டே போவதை உணர்ந்த ராமகிருஷ்ணன், மீண்டும் விஷயம் அறியாத வேற்றூருக்குத் தம் குடும்பத்தை மாற்றிக்கொண்டு, அங்கேயே வரன் வேட்டையாடி, எப்படியோ, சுந்தரேசனைப் பிடித்து விட்டார்.

பெண் பார்க்கும் படலம் முடிந்து ஊருக்குப் போன சம்பந்திகளிடமிருந்து, "பெண் பிடித்து விட்டது" என்று கடிதம் வந்து விடவே, ராமகிருஷ்ணன், சாவித்திரியின் விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளை அவசரம் அவசரமாகச் செய்வதில் முனைந்தார்.

★

இனியும் தாமதித்தால், ஆபத்து என்பதை உணர்ந்து கொண்ட சாவித்திரி, தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, நேராக தனக்குக் கணவனாக வரப் போகும் மாப்பிள்ளை சுந்தரேசனுக்கே, ஒரு கடிதம் எழுதினாள்.

ஸ்ரீ சுந்தரேசன் அவர்களுக்கு,

விவாகம் ஆவதற்கு முன்பு நான் தங்களுக்குக் கடிதம் எழுதுவது தங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். ஆனால் என்னைப் பொறுத்த வரையில் அது மிகவும் அவசியம்.

என் அப்பா தங்களிடம் கூறாமல் மறைத்து விட்ட ஒரு விஷயத்தைக் கூறி விட விரும்புகிறேன். இதற்கு முன் இரு முறை என்னை விவாகம் செய்து கொள்ள முன் வந்த இரண்டு பிள்ளைகளுக்கும் எதிர்பாராமல் துர்மரணம் சம்பவித்து விட்டது. விவாகத்திற்குச் சகலமும் தயாரித்தபின், ஒருவர் விஷ ஜுரத்தினாலும், மற்றவர் ஆற்று வெள்ளத்தோடும் போய், மாண்டு விட்டார்கள். இதற்குக் காரணம் என் ஜாதக விசேஷம் என்றே சொல்லுகிறார்கள். தாங்கள் தங்கள் பெற்றோர்களுக்கு ஒரே மகன். இந்தத் துர்பாக்கியவதியை மணக்க முயல வேண்டாம்.

சாவித்திரி

என்றெழுதி, அதைச் சுந்தரேசனின் காரியாலய விலாசத்துக்குத் தனியாகப் போஸ்ட் செய்து விட்டாள். 'இனிமேல் துணிந்து நம்மைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டார். அந்தச் சுந்தர ரூபனை மரணத்தினின்றும் காப்பாற்றி விட்டோம்!' என்று எண்ணிச் சாவித்திரி பெரு மூச்சு விட்டாள்.

அவள் கடிதம் எழுதிய நான்காவது நாள் அவள் பெயருக்கு ஒரு கடிதம் வந்து சேர்ந்தது. அது ஆண்பிள்ளையின் கையெழுத்தாக இருக்கவே, சாவித்திரி மிகவும் ஆச்சரியமடைந்து, தன் அறைக்குள் சென்று பரபரப்புடன் அதைப் பிரித்துப் படிக்கலானாள்!

அன்புமிக்க சாவித்திரிக்கு,

உன் கடிதம் கிடைத்தது. உண்மையை ஒளிக்காமல் கூறிய உன் நேர்மையான குணத்தை நான் மெச்சுகிறேன். உன்னைப் பற்றி அறிந்த பின், இப்பொழுது நானும் என் ரகசியத்தை வெளியிடுகிறேன். உன்னைப் போலதான் எனக்கும் இரு முறை கல்யாணம் நிச்சயமாகி, பந்தல்கூட போட்ட பின்பு, எனக்காகப் பார்க்கப்பட்டிருந்த இரண்டு பெண்களும், விஷம் குடித்து ஒருத்தியும், பாம்பு கடித்து மற்றொருத்தியும் இறந்து விட்டார்கள். பெண்டாட்டி பாக்கியமில்லாதவன் என்று என்னை எல்லோரும் தள்ளி வைத்திருந்தனர். இந்த விவரம் அறிந்தால் நீங்கள் பெண்ணைக் கொடுக்க மாட்டீர்களெனப் பயந்து என் பெற்றோர்களும் இந்த விஷயத்தை மறைத்து விட்டனர். ஒரு விதத்தில் இதையும் ஒரு அதிர்ஷ்டமென்றுதான் நான் கருதுகிறேன். ஆகவே உன்னையே என் மனைவியாக ஏற்கத் துணிந்து விட்டேன். நம் எண்ணத்தையும் மீறி, நம் இருவர் ஜாதகத்திலுள்ள தோஷமும் நம்மை அடித்தால்



இருவரும் சேர்ந்தே இறந்து விடுவோம்! வாழ்ந்தாலும் இருவருமே சேர்ந்து வாழலாம். என் முடிவு இது தான். இதற்கு நீயும் சம்மதிப்பாய் என்றே நம்புகிறேன். சுந்தரேசன்

கடிதத்தைப் படித்து முடித்ததும் சாவித்திரிக்கு ஒரே திகைப்பாய் இருந்தது. ஒன்றுமே தோன்றவில்லை. "சரி. எல்லாம் நன்மைக்குத்தான்" என்று மனத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டாள்.

குறிப்பிட்ட முகூர்த்தத்தில் ஒரு விதக் குறையுமின்றி சாவித்திரிக்கும் சுந்தரேசனுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தேறியது. கல்யாணம் முடிந்து இரண்டு மூன்று வாரத்திற்குள்ளேயே, சாவித்திரியுடன் சென்னையில் தனிக் குடித்தனம் நடத்தத் தொடங்கி விட்டான் சுந்தரேசன்.

★

"என்ன! கடைசியில் கடவுள் எல்லாவற்றையும் நன்மையாகவே முடித்து விட்டாரல்லவா?" என்று ஒரு நாள் சுந்தரேசன் சாவகாசமாக அமர்ந்திருக்கும் சமயம் பார்த்துக் கேட்டாள் சாவித்திரி.

"எதை பற்றி சொல்லுகிறாய் சாவித்திரி?"

"நம் விவாகத்தைப் பற்றித்தான்."

இதை கேட்டதும் சுந்தரேசன் சிரித்தான்!

"ஏன்? எதற்காக சிரிக்கிறீர்கள்?"

"சாவித்திரி! ஜாதகமாவது! தோஷமாவது! எல்லாம் உன் மனப் பிரமைதான். ஊரார் ஏச்சுப் பேச்சைக் கேட்டுக் கேட்டு நீயே உன்னைப் பற்றித் தப்பு அபிப்பிராயம் கொண்டு விட்டாய்! உன் மனம் கெட்டுவிட்டது. உண்மையில் அதெல்லாம் ஒன்று மில்லை."

"அப்படியானால்..."

"அப்படியானால்...உன்னை மணக்க வந்த பையன்கள் இறந்தது காகம் உட்காரப் பனம் பழம் விழுந்த கதைதான். அதற்கும் உனக்கும் சம்பந்தமேயில்லை. கல்யாணமான பின் அந்தச் சம்பவம் நேரிட்டாலும், அதற்கு உன் ஜாதகத்தைப் பொறுப்பாக்கலாம். அதற்கு முன்னால் அவர்களுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? மேலும் இந்த ரூபவதி சாவித்திரி என் மனைவியாக வேண்டுமென்றிருக்கும் பொழுது அவர்கள் எப்படி அடைய முடியும்?" என்றான் சுந்தரேசன் சிரித்துக் கொண்டே.

நாணம் கொண்ட அவள் மெதுவாக, "நீங்கள் எழுதிய கடிதம்......?" என்றாள்.

"அதுவா? அது வெறும் பொய்! உன் மனப் பிரமையை அகற்றுவதற்காக அப்படி எழுதினேன். இல்லாவிட்டால் உன் ஜாதகத்தினால் எனக்கு ஏதாவது ஆபத்து வந்து விடுமென்று அஞ்சி, என்னை மணந்து கொள்ளவே நீ மறுத்திருப்பாய் அல்லவா?" என்று தன் இரு கைகளினாலும் சாவித்திரியின் முகத்தை நிமிர்த்தினான் அவன்.

"நீங்கள் ரொம்பவும் பொல்லாதவர்!" என்றாள் சாவித்திரி, தலையைக் குனிந்த படியே. அவள் முகம் மலர்ந்திருந்தது!

# அவன் கண்ட அதிசயம்!

**ப**ள்ளிக்கூடத்தில் சோமு ரொம்பவும் விஷமக்காரப் பையன் என்ற பெயர் எடுத்திருந்தான்.

பையன்களுடைய புஸ்தகத்தை ஒளித்து வைத்து விடுவான்; இடை வேளையில் சாப்பிட மற்ற மாணவர்கள் டிபன் கொண்டு வந்திருந்தால் அதை இவன் ரகசியமாகச் சாப்பிட்டு விட்டு, காலி டிபன் பாக்ஸை வைத்து விட்டுப் போய்விடுவான். பையன்கள் உடம்பில் சிறு ஊசியைக் குத்தி விட்டு, பரம சாதுவாக உட்கார்ந்திருப்பான்!

இப்படிப்பட்ட சோமு கொஞ்ச நாளாக இத்தகைய விஷமங்கள் எதிலும் ஈடு படாமல் இருந்தான். அது மட்டுமல்ல. ஒழிந்த நேரங்களில் பள்ளிக்கூடப் புத்தகாலயத்தில் புத்தகம் பார்க்கத் தொடங்கி விட்டான்.

புத்தகாலயத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த உபாத்தியாயர் சோமுவிடம் ஒரு அதிசயத்தைக் கண்டார். அதாவது அவன் தினம் ஒரே புஸ்தகத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டு போவான். பின்னர் அங்கே போட்டிருக்கும் மேஜை நாற்காலியில் உட்கார்ந்து, அந்தப் புஸ்தகத்தைத் திறந்து ஏதோ ஒரு பக்கத்தை வைத்துக் கொண்டு சிரிப்பான். இப்படி ஒரு நாள், இரண்டு நாளல்ல; ஒரு மாசம் நிகழ்ந்தது. புத்தகாலய நிர்வாக உபாத்தியாயர் 'எதைக் கண்டு தினம் இப்படி விழுந்து விழுந்து சிரிக்கிறான்' என்று அதிசயத்தோடு எண்ணலானார். கடைசியில். அவனுக்குத் தெரியாமல் அவன் பின்னால் நின்று அவன் எதைப் பார்த்துச் சிரிக்கிறான் என்று உற்றுக் கவனித்தார் — அந்தப் பக்கத்தில் ஏதோ ஒரு படம் இருந்தது. இந்தப் படத்தைப் பார்த்து அப்படிச் சிரிப்பதற்கு விஷயம் ஒன்று இருப்பதாகத் தெரியவில்லையே என்று எண்ணினார். எதற்கும் சோமுவையே கேட்டு விடுவது என்று கேட்டார்:

"சோமு, இந்தப் படத்தைப் பார்த்து ஏன் அப்பா விழுந்து விழுந்து சிரிக்கிறாய்? இதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறது?"

சோமு படத்தைக் காட்டி, "பாருங்கள் ஸார்! இந்தப் பையனைப் பிடிக்க இந்த உபாத்தியாயர் ஒரு மாசமாக 'ஓடு' 'ஓடு' என்று ஓடுகிறார். நானும் தினம் பார்க்கிறேன். இன்னும் அவரால் அவனைப் பிடிக்க முடியவில்லை!" என்று கூறி மறுபடியும் விழுந்து விழுந்து சிரித்தான்.

இதைக் கேட்ட அந்த உபாத்தியாரும் சிரிக்கத் தொடங்கினார். —ஸ்ரீ நா.



# மல்லிகா




பரிசுக் கதை: ஏ. எப். பெர்னாண்டோ (இலங்கை)

மொழிபெயர்ப்பு: வாஞ்சி

## வார்டர் சொல்லுகிறான்:

இதோ இந்தப் பைத்தியக்காரனைப் பாருங்கள்! இவன் எங்கள் ஆஸ்பத்திரியில் (பைத்தியக்கார ஆஸ்பத்திரி) சில மாதங்களாகச் சிகிச்சை பெற்று வருகிறான்.

சித்தம் சரியான நிலைமையில் இருக்கும் சிற்சில சமயங்களில் இவன் மிகவும் அமைதியாக இருப்பான். நாம் கூறுவதைப் பொறுமையுடன் கேட்பான். அத்தகைய சந்தர்ப்பங்களில் மிகவும் அழகாகப் பேசுவான். உயர்ந்த படிப்புப் படித்தவன் அல்லவா? அப்போது இவனிடமிருந்து நான் பல அரிய விஷயங்களைத் தெரிந்து கொள்வேன்.

ஆனால் சித்தம் சுவாதீனமற்ற சமயங்களில் இவனைப் பார்க்க வேண்டுமே! பிசாசாகவே மாறி விடுவான். தலைமயிரைப் பிய்த்துக் கொள்வான். 'மல்லிகா,' 'மல்லிகா' என்று அலறுவான்; சுவரில் மோதிக் கொள்வான்; தேம்பித் தேம்பி அழுவான். அத்தகைய சந்தர்ப்பங்களில் அவன் அருகில் செல்வதற்குக் கூட நான் நடுங்குவேன்.

இப்போது அவன் சுமுகமாகவும் அமைதியாகவும் இருக்கிறான். ஏதோ கதை எழுதுகிறானும். என்ன எழுதுகிறான், பார்க்கலாம்!

## பைத்தியக்காரன் எழுதுகிறான்:

என் மனம் குழம்பிக் கிடக்கிறது. அடிக்கடி ஞாபக மறதி ஏற்பட்டு விடுகிறது. மல்லிகா! இது உன்னைப் பற்றிய கதை. என்னுடைய கதையும் இதுதான். எனவே, இந்தக் கதையை நான் உன் ஞாபகார்த்தமாகவும் என் ஞாபகார்த்தமாகவும் அர்ப்பணம் செய்கிறேன்.

நான் மல்லிகாவைக் காதலித்தேன். ஹிருதய பூர்வமாகக் காதலித்தேன். மல்லிகாவுக்காக நான் எவ்விதத் தியாகமும் செய்யத் தயாராக இருந்தேன்.

குழந்தைப் பருவத்திலிருந்து நானும் மல்லிகாவும் ஆருயிர் நண்பர்களாக இருந்து வந்தோம்... இது உண்மை அல்லவா, மல்லிகா?... குழந்தைப் பருவம் தாண்டி எங்களுக்கு விவரம் தெரிந்ததிலிருந்து, இருவரும் பரஸ்பரம் காதல் கொண்டோம்.

நான் கிருமிகள் ஆராய்ச்சி நிபுணன் ஆவதற்காக வாசித்துக் கொண்டிருந்தேன். ஏன், என்று கேட்கிறீர்களோ? அதுதான் மல்லிகாவின் விருப்பம். நான் கிருமிகள் ஆராய்ச்சியில் தேர்ச்சிபெற்ற பிரபல டாக்டராக விளங்க வேண்டும் என்பது அவள் ஆசை.

மல்லிகாவை முதல்தர அழகி என்று சொல்ல வேண்டும். அவளது முகம் மலர்ந்த ரோஜா புஷ்பம் போன்றிருந்தது. தோற்றத்தில் மாத்திரமல்ல, மணத்திலும் கூட! அவளுடைய கூந்தலின் அழகைப்பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. எனவே அவளைப் பல ஆண் வண்டுகள் மொய்க்கத் தொடங்கியதில் ஆச்சரியமில்லை.

கட்டழகியான அவள் பலருடைய ஹிருதயத்தைக் கவர்ந்தாள். அது அவள் குற்றமல்ல என்று என் மனத்தைச் சமாதானம் செய்துகொள்ள எவ்வளவோ முயற்சித்தேன். எனினும் பொறுமையையும் குரோதத்தையும் அவ்வளவு எளிதில் வெற்றி கொண்டுவிட முடியுமா?

என் ஆராய்ச்சி பூர்த்தியாகும் வரையில் காத்திருப்பதாக மல்லிகா எனக்கு வாக்களித்தாள். அதன் பிறகு கல்யாணம் செய்து கொள்ள நிச்சயித்திருந்தோம். அப்போது

நான் கல்லூரியில் கடைசி வருஷப் பரீட்சைக்கு வாசித்துக் கொண்டிருந்தேன்.

பலவித விஷக் கிருமிகளை உற்பத்தி செய்வது மிகவும் ஆபத்தான காரியம். அவ்விதம் உற்பத்தி செய்வதற்குப் பேராசிரியர் யாரையும் எளிதில் அனுமதிப்பதில்லை. எனினும் தயக்கத்துடன் எனக்கு மாத்திரம் அவ்வாறு என் இஷ்டப்படி செய்வதற்கு அவர் அனுமதி கொடுத்திருந்தார். என் திறமையில் அவருக்கு அவ்வளவு நம்பிக்கை!

மல்லிகா, உனக்கு ஞாபகம் இருக்கிறதா? சந்தடி நிறைந்த இந்த நகர வாழ்க்கை பிடிக்காமல் ஒருநாள் நாம் இருவரும் அருகில் உள்ள கிராமத்துக்குச் சென்று ஆனந்தமாகப் பொழுது போக்கினோம். அங்குள்ள ஓர் ஓடையருகில் உட்கார்ந்து உல்லாசமாக வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

* * *

"மல்லிகா! நாளைக்கு என் ஆராய்ச்சி அலுவல்களைத் தீவிரமாக ஆரம்பிக்கப் போகிறேன். நான் வெற்றியடையப் பிரார்த்தனை செய்" என்றேன் உன்னிடம்.

உடனே நீ உன் செவ்விதழ்களால் என் கன்னத்தில் முத்தமிட்டு என் அருகில் நெருங்கி உட்கார்ந்தாய். அப்போது நான் அடைந்த இன்பத்துக்கு ஈடு இணை உண்டா?

நான் விஷக் கிருமிகளை உற்பத்தி செய்யத் தொடங்கியபோது, 'ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள்' என்று நீ கலக்கத்துடன் அடிக்கடி என்னை எச்சரித்து வந்தாய். உனக்கு என்மீது அவ்வளவு அன்பு!

எனினும் நான் சிறிதும் தவறின்றி ஜாக்கிரதையாக நடந்து கொள்வேன்; என்னை யாரும் ஏமாற்ற முடியாது என்பது உனக்குத் தெரியாது அல்லவா?

"இப்போது எந்தக் கிருமிகளை ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறாய்?" என்று பேராசிரியர் என்னைக் கேட்டார்.

"டைபி கிருமிகளை ஆராய்ச்சி செய்து வருகிறேன்" என்று அவருக்குப் பணிச் சென்று பதில் அளித்தேன்.

டைபி கிருமிகள்தான் கொடிய டைபாய்ட் ஜுரத்துக்குக் காரணமானவை என்பது எல்லோருக்கும் தெரிந்ததுதான்.

"மல்லிகா! இதோ இந்த வார்டர் உள்பட எல்லாரும் என்னைப் பைத்தியக்காரன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். பைத்தியக்காரன் தவறு எதுவுமின்றிக் கொடிய கிருமிகளை ஆராய்ச்சி செய்ய முடியுமா? உன்னை ஹிருதய பூர்வமாகக் காதலித்த நான் பைத்தியக்காரனாக இருக்க முடியுமா? இதற்கு நீயே பதில் சொல்லு, கண்ணே!

பிப்ரவரி மாதம் நெருங்கிக் கொண்டிருந்தது. அப்போது நீயும் என்னை நெருங்கிக் கொண்டிருப்பதாக நீயே என்னிடம் சொன்னாய் அல்லவா? அது எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. "நான் அவ்விதம் சொல்லவில்லை" என்று இப்போது என்னிடம் மறுக்க முயற்சிக்காதே.

நாம் இருவரும் நூரேலியாவுக்கு மோட்டாரில் ஆனந்தமாகப் பிரயாணம் செய்யத் திட்டம் போட்டிருந்தோம். கண்டி வழியாகச் செல்லுவதென்றும் ஏகோபித்துத் தீர்மானித்திருந்தோம்.

கடைசியில் நீ வந்து என்ன சொன்னாய், ஞாபகமிருக்கிறதா? "தயவுசெய்து மன்னித்துக் கொள்ளுங்கள். நான் ஒரு தோழியைப் பார்ப்பதற்காக ஹட்டனுக்குச் செல்ல வேண்டும். பிறகு ஒருநாள்......" என்று கூறி ஏமாற்றி விட்டாய்.

கடைசியில் பிப்ரவரி மாதம் கடந்து விட்டது. நீ உன்னுடைய வாக்கை நிறைவேற்றவில்லை...நமது கல்யாணத்தை ஒத்தி வைப்பதா? எவ்வளவு காலத்துக்கு? அதை என்னால் நினைக்கவும் முடியவில்லை.

என் ஹிருதயத்துடன் பின்னிக் கொண்டிருக்கும் உன்னை நான் எவ்வளவு காலம் இவ்விதம் பிரிந்திருப்பது?

* * *

ஜூன் மாதம் பதினேழாம் தேதி நான் கிருமிகளின் உற்பத்தியைத் தொடங்கினேன். அந்தத் தேதி எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. மல்லிகாவின் பிறந்த தினத்துக்கு மறு நாள்தான் பதினேழாம் தேதி.

மல்லிகா! நீ உன் பிறந்த தினத்தன்று உடுத்திக் கொண்டிருந்த சிவப்பு வர்ணப் புடவை உன் அழகைப் பன்மடங்கு அதிகப்படுத்தியது. அது என் மூளையையே குழப்பத் தொடங்கியது. இப்போது என் மூளையே சிவப்பு வர்ணமாக இருப்பதுபோல் எனக்குத் தோன்றுகிறது.

மல்லிகா! அன்று நான் உனக்கு அழகான ஒரு புடவை 'க்ளிப்' கொடுத்தேனே, ஞாபகம் இருக்கிறதா? என் தாயார் அதைப்போலவே ஒரு 'க்ளிப்' போட்டுக் கொண்டிருந்தாள். அதனால்தான் உனக்கும் அதைப்போல ஒன்று வாங்கிக் கொடுத்தேன். உன்னைப்பற்றி என் தாயாரிடம் நான் பிரஸ்தாபித்ததே இல்லை. ஆகையால் நம்முடைய இந்தக் கதை அவள் கண்ணில் படக் கூடாது.

எனது ஆராய்ச்சியைப் பற்றி நான் உன்னிடம் கூறியபோது, விசித்திரமான விஞ்ஞான வார்த்தைகளைக் கேட்டு உனக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. அந்தச் சிரிப்பு இன்னும் என் மனத்தை விட்டு அகலவில்லை. அது இனிய சங்கீதத்தைப்போல் என் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

உன் பிறந்த தினத்தன்று மாலை நான் உன் கையைப் பிடித்துக் கொண்டு விடை பெற்றுக் கொண்டேன் அல்லவா? அப்போது உன் கை ஏன் அப்படி நடுங்கியதோ, தெரியவில்லை.

ஒரு நாள் விஷக் கிருமிகளை நான் உனக்குக் காட்டியபோது நீ நடுநடுங்கி விட்டாய். "இவைகளை ஜாக்கிரதையாகக் கையாளுங்கள்!" என்று என்னை நீ எச்சரித்தாய்.

நான் ஜாக்கிரதையாகத்தான் நடந்து கொண்டேன். ஆனால் நீதான் ஜாக்கிரதை



ாக நடந்து கொள்ளவில்லை. ஆகஸ்டு மாதம் ிகழ்ந்த சம்பவங்களிலிருந்து நான் அதைத் தெரிந்து கொண்டேன்.

* * *

அந்த மாதத்தில்தான் ஒரு மோசமான செய்தி என் காதுக்கு எட்டியது. உனக்கும் ஸ்ரீக்கும் உள்ள நட்பைப் பற்றி நான் கேள்விப் பட்டேன். பிறகு ஷிஹாலும் உன் நண்பன் என்ற செய்தி என் காதுக்கு எட்டியது. மல்லிகா! நீ ஒரு பெரும் துரோகி.

இவ்விதம் ஒவ்வொருவரிடமும் சிநேகமாக இருப்பது போல் பாசாங்கு செய்து, கடைசியில் அவர்களை ஏமாற்றுவதுதான் உன் தொழில் என்பதைத் தெரிந்து கொண்டேன்.

ஆனால் நான் உன்னிடம் கொண்டிருந்த காதல் நீர்க்குமிழி போல் தோன்றி மறையும் தன்மை வாய்ந்ததல்ல. உன்னைப் பற்றிய வரலாறுகளைக் கேட்ட பிறகு கூட, உன்னை மறந்துவிட என்னால் முடியவில்லை.

உனது போக்கை மாற்றிக் கொள்ளும்படி உன்னை நான் கண்டித்தேன்; பிறகு கெஞ்சிக் கேட்டுக் கொண்டேன். அப்போதாவது உன்னை நீ திருத்திக் கொண்டிருக்கலாம். அவ்விதம் செய்திருந்தால் நான் உன்னை மனப் பூர்வமாக மன்னித்திருப்பேன்.

ஆனால், நீ என்னை அலட்சியம் செய்து உன் இஷ்டப்படியே நடந்து கொண்டிருந்தாய்.

ஒரு நாள் உன்னைச் சந்தித்தபோது எனக்குக் கோபம் தாங்க முடியவில்லை. உன்னைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தினேன்.

அப்போது கூட நீ உன் தவறை உணர்ந்து கொள்ளவில்லை. அதற்கு மாறாக நீயும் ஆத்திரத்துடன் கோபித்துக் கொண்டாய். "நீங்கள் என்னைக் கொன்றால், கொலைக் குற்றத்துக்காக நீங்கள் தூக்குமரத்துக்குப் பலியாக நேரும்" என்று எதிர்த்துக் கூறினாய்.

கொலைக் குற்றமா? என்னை நீ அவ்வளவு மடையன் என்று நினைத்துக் கொண்டு விட்டாய்? அதி புத்திசாலி என்று பேராசிரியர்களின் பாராட்டுதலைப் பெற்ற நான், ஒருவருக்கும் தெரியாமல் கொலை செய்ய முடியும் என்பதை நீ உணரவில்லை.

மல்லிகா! நீ அவ்வளவு தூரம் கோபித்துக் கொண்டும் கூட உன்மீது எனக்கு இருந்த அன்பு குறையவில்லை. நீ இல்லாமல் இந்த உலகில் நான் எவ்விதம் உயிருடன் வாழ முடியும் என்று ஏங்கினேன். மல்லிகா இராத வாழ்க்கை வறண்ட வாழ்க்கையாகவே எனக்குத் தோன்றியது.

* * *

செப்டம்பர் மாதம் பிறந்து விட்டது. மல்லிகா! இன்னும் உன் மனம் மாறவில்லையா? இன்னும் என்னிடம் திரும்பி வர நீ ஏன் மறுக்கிறாய்? ஸ்ரீ, ஷிஹால் எல்லோரையும் நான் மறந்துவிடுகிறேன். இப்போதாவது நீ திரும்பி என்னிடம் வந்து என் வாழ்வை மலரும்படி செய்.

உன்னை நான் மறக்க முடியாது. உன்னை நான் மறக்க முயல்வது என்னையே நான் மறக்க முயல்வதாக முடியும்.

இதோ நான் மரணத்துக்கு வெகு சமீபத்தில் இருக்கிறேன். எனக்கும் மரணத்துக்கும் இடையே ஓர் அங்குல தூரம் கூட இல்லை!

நான் என் கையில் வைத்துக் கொண்டிருக்கும் கண்ணாடிப் புட்டியில் உள்ள டைபாய்ட் கிருமிகளை யார் என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? அவர்கள் எனது அருமை நண்பர்கள்தான். உன் பிரிவால் என் மனத்தில் ஏற்பட்டுள்ள சகிக்க முடியாத வேதனையை கொடிப் பொழுதில் தீர்த்து எனக்கு நிரந்தரமான நிம்மதியைக் கொடுக்கும் சக்தி அந்தக் கிருமிகளுக்கு இருக்கிறது.

இந்தக் கிருமிகள் அடங்கிய கண்ணாடிப் புட்டியை நான் கையில் அலட்சியமாகப் பிடித்துக் கொண்டிருப்பதைப் பார்த்த பேராசிரியர் பதறி விட்டார்.

"ஜாக்கிரதையாக இரு, அப்பா. பரீட்சை நெருங்கி விட்டது. இந்தச் சமயத்தில் அசட்டுத் தனமாக நடந்து ஆபத்தில் சிக்கிக் கொள்ளாதே" என்று அவர் என்னைக் கண்டித்தார்.

ஒருவழியாக நவம்பர் மாதத்தில் என் பரீட்சை முடிவடைந்தது.

"உனக்கு என்ன கேடு வந்து விட்டது? நீ இன்னும் நன்றாக எழுதி யிருக்கலாமே" என்று கடிந்து கொண்டார் பேராசிரியர்.

நான் இன்னும் நன்றாக எழுதியிருக்கலாம் என்பது உண்மையே. ஆனால், பேராசிரியர் அவர்களே! மல்லிகாவை நீங்கள் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா? பார்த்திருந்தால் இப்படிச் சொல்ல மாட்டீர்கள். நீங்கள் அவசியம் அவளைப் பார்க்கவேண்டும்.

மல்லிகா அழகின் வடிவம்! தித்திக்கும் தேன்! அற்புத மணம் வீசும் மிருதுவான மலர்! காதல் தெய்வத்தின் காணிக்கை!

* * *

**வி**ஷக் கிருமிகளே! நீங்களும் நானும் பிரிய வேண்டிய காலம் வந்து விட்டது. எனக்குப் பரீட்சை முடிந்து விட்டது அல்லவா? நீங்கள் எனக்கு எவ்வளவோ பாடம் கற்றுக் கொடுத்தீர்கள். எனவே, உங்களுக்கு என் நன்றியைத் தெரிவிப்பதற்காக இன்னும் சில நாட்கள் உங்களை உயிரோடு வைத்திருக்க விரும்புகிறேன். பிறகு உங்களை அழித்து விடுவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

இருந்தாலும் மல்லிகாவைப்போல் நீங்கள் கொடியவர்கள் அல்ல. அவள் என் மன வேதனையை அதிகப் படுத்தி, என்னைத் துடிக்கும்படி செய்வதற்காக என் கண் எதிரில் அவனது புதிய நண்பனுடன் செல்லுகிறாள்.

மல்லிகா! நீ அவ்விதம் செய்வது அக்கிரமம் அல்லவா? நீ என் ஆருயிர்க் காதலியாக இருந்ததை அதற்குள் எப்படி மறந்தாய்? நீ என்னிடம் கொடுமையாக நடந்து கொண்டாலும், நான் உன்னிடம் கொடுமையாக நடந்து கொள்ள முடியவில்லையே!

ஓஹோ, அப்படியா? நான் கோழையல்ல. உன்னிடம் கொடுமையாக நடந்து கொள்ளத் தெரியும்......உன்னைக் கொன்று விடுவேன். ஜாக்கிரதை!

விஷக் கிருமிகளே! உங்களுக்கு வந்தனம். உங்களிடமிருந்து நான் ஒரு பெரிய உதவியை நாடுகிறேன்.

எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. டிசம்பர் மாதம் பதினெட்டாம் தேதி மல்லிகா என்னைப் பார்க்க வந்தாள். அன்று என் பிறந்த தினம் ஆதலால், அவளுக்கு அழைப்பு அனுப்பி யிருந்தேன்.

மல்லிகா! அந்த அழைப்பை நீ இலட்சியம் செய்யாமல் இருந்திருக்கக் கூடாதா?

அன்று காலை பத்து மணிக்கு நீ எனக்குப் பிறந்த தின வாழ்த்துக் கூறுவதற்காக வந்தாய். நீ வந்ததில் என் வேதனையும் மனக் கொதிப்பும் நூறு மடங்கு அதிகமாகப் பெருகிவிட்டன.

நாம் இருவருமாக வழக்கமாகச் செல்லும் கிராமப் பிரதேசத்துக்கு மோட்டாரில் சென்றோம். அங்குள்ள ஓடைக்கு அருகில் நாம் சாப்பிட்டோம். பிறகு மாலை சுமார் நாலு மணிக்கு அங்கிருந்து புறப்பட்டோம்.

அப்போது தனக்கு மிகவும் தாகமாக இருக்கிறது என்று மல்லிகா கூறினாள். உடனே நான் என்னுடன் கொண்டு வந்திருந்த ஆரஞ்சு ரசத்தை அவளுக்குக் கொடுத்து விட்டேன்.

* * *

**வி**ஷக் கிருமிகளே! உங்கள் வேலை முடிந்து விட்டது. எனவே இனி நாம் பிரிய வேண்டியதுதான். கொலைகாரர்களான உங்களை என்னிடம் வைத்துக் கொள்ள நான் சிறிதும் விரும்பவில்லை.

டிசம்பர் இருபத்திநாலாம் தேதி மல்லிகா இறந்தாள். நாலு ஐந்து நாள் ஜுரம் அவளை உருக்குலைத்து விட்டது.

மல்லிகா டைபாய்ட் ஜுரத்தினால் மாண்டாள் என்று டாக்டர்கள் கூறிவிட்டார்கள்.

மல்லிகா! நீ நான் கொடுத்த அந்தக் கொடிய ஆரஞ்சு ரசத்தைச் சாப்பிடாமல் இருந்திருக்கக் கூடாதா? அதில் டைபாய்ட் விஷக் கிருமிகளைக் கலந்தவன் நான்தான், மல்லிகா!

உன் மீது எனக்குள்ள எல்லையற்ற காதலே என்னை அவ்விதம் செய்யும்படி தூண்டி விட்டது. எனக்குச் சொந்தமான நீ, என் காதலியான நீ, என் கண்ணெதிரில் ஸ்ரீபுடனும் நீ ஹாருடனும் உல்லாசமாகச் செல்லுவதை நான் எப்படிச் சகித்துக் கொண்டிருக்க முடியும்? பாவம், மல்லிகா!

## வார்டர் சொல்லுகிறான்:

**அ**வன் கதையை எழுதி முடிக்கும் வரையில் அமைதியாக இருந்தான். ஆனால் பிறகு சுவரில் தலையை மோதிக்கொண்டு கூக்குரலிடத் தொடங்கி விட்டான்.

சிற்சில சமயங்களில் அவனது அட்டகாசங்கள் எங்கள் ஆஸ்பத்திரி முழுவதையும் கிடுகிடுக்கும்படி செய்து விடுகின்றன.

# பிரதிபலன்




சென்னையை நோக்கிச் சென்று கொண்டிருந்த திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் அன்று மதுரையை அடைந்தபோது அதிலிருந்த கடைசிப் பெட்டியில் அவ்வளவாகக் கூட்டமில்லை. தீர்த்தயாத்திரை செய்யும் நாலைந்து பைராகிகள் மாத்திரம் அந்தப் பெட்டியில் நிரவி உட்கார்ந்து கொண்டிருந்தனர். ரயில் புறப்பட ஐந்து நிமிஷங்கள் இருந்தன. அந்தப் பெட்டியை நோக்கிக் கைலாசம், அவர் மனைவி மங்களம், அவர்கள் பெண் கௌசல்யா இம் மூவரும் விரைந்து வந்து அவசரம் அவசரமாக ஏறிக் கொண்டனர். வண்டியில் அமர்ந்ததும் மங்களம் கணவரைப் பார்த்து, "நமக்கு இருக்கும் அதிர்ஷ்டத்தில் ரயிலும் தவறிப்போய் விடுமோ என்று நினைத்தேன். நல்லவேளை! அப்படி யொன்றும் நடக்கவில்லை" என்றாள் ஒரு நீண்ட மூச்சு விட்டுக் கொண்டே.

"எதற்கெடுத்தாலும் அளவுக்கு மீறிக் கவலைப்படுவதும், அதிர்ஷ்டமில்லை என்று சொல்வதும் உனக்கு வழக்கமாய்ப் போய்விட்டது" என்றார் கைலாசம் மிகுந்த அலுப்புடன்.

"பின்னே நீங்களே சொல்லுங்கள். அந்தப் பையன் சுவாமிநாதனின் வார்த்தையில் நம்பிக்கை வைத்துக் கொண்டு பணத்தைச் செலவழித்துப் பட்டணத்திலிருந்து மதுரைக்கு வந்தும் காரியம் கை கூடாமல் திரும்பிப் போகிறோமே, இது துரதிர்ஷ்டமில்லாமல் வேறு என்னவாம்!" என்று எதிர்க் கேள்வி கேட்டாள் மங்களம்.

"சுவாமிநாதனின் மேல் எனக்கு எள்ளளவும் அவநம்பிக்கை கிடையாது. அவன் இருக்கும் நிலைமையில் உடனே முடிவு சொல்வது கஷ்டம் தான். அவனுடைய அத்தையும் அத்திம்பேரும் கூடப் பார்ப்பதற்கு நல்ல மனிதர்களாகத்தான் தோன்றுகிறார்கள். அவர்களையும் குற்றம் சொல்லுவதற்கில்லை. பையனுடைய ஒன்றுவிட்ட மாமா திடீரென்று சற்றும் எதிர்பாராத விதத்தில் சுவாமிநாதனின் கல்யாணத்தை இன்னும் கொஞ்ச நாட்கள் வரை ஒத்திப் போடும்படி எழுதியிருக்கும்போது அவர்களால் என்ன செய்ய முடியும்! மறுபடியும் பையனுடைய ஒன்றுவிட்ட மாமாவுக்குக் கடிதம் எழுதுவதாக அவர்கள் நமக்கு வாக்களித்திருக்கிறார்கள். இவ்வளவும் தெரிந்திருந்தும் நமக்கு அதிர்ஷ்டமில்லை என்று நாம் அவசரப்பட்டு முடிவுக்கு வரக்கூடாது" என்றார் கைலாசம்.

* * *

கைலாசத்தின் கடைசிப் பெண் கௌசல்யா கல்யாணத்திற்கு நின்று கொண்டிருந்தாள். எவ்வளவோ முயன்றும் இரண்டு வருஷ காலமாக ஒரு வரனாவது குதிரவில்லை. கடைசியாகப் பங்களூரில் வேலையாயிருந்த சுவாமிநாதனின் ஜாதகம் கைலாசத்தின் கைக்கு எட்டிற்று. கௌசல்யாவின் ஜாதகத்தோடு பொருத்தம் பார்த்ததில் சுவாமிநாதனின் ஜாதகம் சிலாக்யமாகப் பொருந்தியிருக்கவே, கைலாசம் பங்களூருக்குச் சென்று சுவாமிநாதனைக் கண்டு பேசினார். 'சுவாமிநாதனுடைய யோக்யதாம்சங்கள், உத்தியோகம், சம்பளம் எல்லாவற்றிற்கும் மேலாக அவனுடைய குணம், ஆகியவை கைலாசத்தின் மனத்தைக் கவர்ந்து விட்டன. தம் பெண் கௌசல்யாவை நேரில் வந்து பார்த்து அபிப்பிராயம் தெரிவிக்குமாறு சுவாமிநாதனைக் கேட்டுக் கொண்டார் கைலாசம். அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி, ஆனால் ஒரு நிபந்தனையின் பேரில், அவருடைய பெண்ணை வந்து பார்ப்பதாக ஒப்புக் கொண்டான் சுவாமிநாதன். அதாவது, அவன் பெண்ணைப் பார்த்து அபிப்பிராயம் தெரிவித்தபின், அவனுக்குப் பெற்றோர்கள் ஸ்தானத்தில் மதுரையில் வசித்து வரும் அத்தைக்கும் அத்திம்பேருக்கும் கௌசல்யாவைக் கூட்டிக் கொண்டு போய்க் காட்டி அவர்களுடைய சம்மதத்தையும் பெற்று விடவேண்டுமென்பது தான் சுவாமிநாதன் விதித்த நிபந்தனை. அதைக் கைலாசம் ஆமோதித்தார். சுவாமிநாதன் பங்களூரிலிருந்து சென்னைக்கு வந்து கௌஸல்யாவைப் பார்த்து விட்டுத் தன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு முன்பாகக் கைலாசத்தை மதுரைக்குப் போய் வரும்படி கூறினான். அதைத் தொடர்ந்து கைலாசமும் அவர் மனைவி மங்கள



டெலிபோனில் பேசுபவர்:—என்னது? முத்தே, பவழமே, மாணிக்கமே, வைடூர்யமே என்கிறீர்! இது என்ன நகைக் கடையா...?

பெண் :—அடடாடா, என் கணவர் என்னைக் கூப்பிடுகிறார் போலிருக்கிறது. போனை வைத்து விடாதீர்கள்.

றும் பெண் கௌசல்யாவும் மதுரைக்குப் பிரயாணமானார்கள். சுவாமிநாதனின் அத்தைக்கும் அவன் கணவருக்கும் கௌசல்யாவைப் பிடித்திருந்தது. ஆனாலும் அவர்களால் உடனே சம்மதத்தைத் தெரிவிக்கத் தடையாயிருந்தது, சுவாமிநாதனின் ஒன்று விட்ட மாமாவிடமிருந்து திடீரென்று வந்த கடிதம்தான். அதில் அவர் சுவாமிநாதனின் விவாகத்தைப் பற்றிக் குறிப்பிட்டு அது விஷயத்தில் அவசரமாக ஒரு முடிவுக்கும் வர வேண்டாமென்றும் தாம் ரங்கூனிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பி வரப் போவதாயும், வந்தபின் அதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளலா மென்றும் சூசகமாகத் தெரிவித்திருந்தார்.

*   *   *

ரயில் புறப்படுவதற்கு முதல் மணி அடித்து விட்டது. அப்போது கைலாசத்தின் குடும்பத்தினர் இருந்த வண்டியை நோக்கிக் கிழவர் ஒருவர் கையில் ஆறேழு வயது மதிக்கத் தகுந்த பையனுடன் ஓடி வந்தார். வண்டியின் கதவருகில் நின்று கொண்டிருந்த கைலாசத்தைப் பார்த்து, "நீங்கள் எது வரைக்கும் போகிறீர்கள்?" என்று பரபரப்புடன் கேட்டார். "பட்டணம் வரை" என்று பதிலளித்தார் கைலாசம். கிழவரின் முகத்தில் சற்றுமுன் தோன்றியிருந்த பரபரப்பு நீங்கி நிதானம் நிலவியது. கையில் பிடித்துக் கொண்டிருந்த அச்சிறுவனை வண்டிக்குள் ஏற்றிவிட்டு, "இவன் என்னுடைய பெண் வழியில் வந்த பேரன். எழும்பூரில் வந்து இந்தப் பையன் ரகுபதியை அழைத்துக் கொண்டு போகும்படி நான் என் மாப்பிள்ளைக்குக் கடிதம் போட்டிருக்கிறேன். குழந்தை ரகுபதிக்கு நீங்கள் தகுந்த துணையாகக் கிடைத்து விட்டீர்கள். குழந்தையைப் பார்த்துக் கொள்ளுங்கள்" என்றார். பிறகு ரகுபதியின் கையில் செலவுக்குக் கொஞ்சம் சில்லறையைக் கொடுத்து விட்டு, அவனுடைய சிறிய பெட்டியையும் அவன் பக்கத்தில் வைத்தார். அடுத்த சில கணங்களுக்கெல்லாம் ரயில் புறப்பட்டது.

ரயில் திருச்சியைத் தாண்டியதும் கைலாசமய்யரின் குடும்பமும் ரகுபதியும் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அவரவர் இருந்த இடத்தில் சாய்ந்தவண்ணம் தூங்க ஆரம்பித்தனர். ரயில் விழுப்புரத்தை அடைந்ததும் அவர்கள் தூக்கம் கலைந்தது. காரணம், அவர்களுடைய டிக்கட்டுகளைப் பரிசோதிப்பதற்காக டிக்கட்டுப் பரிசோதகர் அவர்கள் இருந்த பெட்டியில் ஏறினதுதான். தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்ட கைலாசம் தம்மிடமிருந்த மூன்று டிக்கட்டுகளைப் பரிசோதகரிடம் காண்பித்தார். அதைப் பார்வையிட்ட பின் அரைத் தூக்கத்திலிருந்த ரகுபதியைத் தட்டி எழுப்பி அவனுடைய டிக்கட்டைக் காண்பிக்குமாறு கேட்டார் பரிசோதகர். ரகுபதி அவன் அணிந்திருந்த சட்டை நிஜார் பைகளில் கையை விட்டுத் துழாவினான். பிறகு தன்னுடைய கைப் பெட்டியைத் திறந்து மும்மரமாக டிக்கட்டைத் தேட ஆரம்பித்தான். டிக்கட்டைக் காணவில்லை. கடைசியாகக் கைலாசத்தைப் பார்த்து ரகுபதி, "மாமா! டிக்கட்டைக் காணவில்லை!" என்றான். கைலாசத்திடம் டிக்கட்டுப் பரிசோதகர், "இந்தப் பையனை உங்களுக்குத் தெரியுமா?" என்றார். ரகுபதியை அவனுடைய தாத்தா மதுரையில் அந்தப் பெட்டியில் ஏற்றிவிட்டதைத் தெரிவித்து விட்டுக் கைலாசம், "பையனைக் கூட்டிக் கொண்டு போவதற்காக அவனுடைய தகப்பனார் எழும்பூருக்கு வருவார் என்று அந்தப் பெரியவர் என்னிடம் கூறினார். அவரிடமிருந்து நீங்கள் எழும்பூர் வந்ததும் இந்தப் பையனுக்குரிய கட்டணத்தை வசூலித்து விடலாம்" என்றார். அதற்கு டிக்கட்டுப் பரிசோதகர், "நீங்கள் உங்களிடம் பணம் இருந்தால் இந்தப் பையனுக்கு உள்ள ரயில் சார்ஜைக் கொடுத்து ரசீது வாங்கிக் கொள்ளுங்கள். ரயில் எழும்பூருக்குப் போனதும் நீங்கள் இவனுடைய தகப்பனாரிடமிருந்து அதற்குள்ள தொகையை வாங்கிக் கொள்ளலாம். ஏனென்றால் நான் அடுத்த ஸ்டேஷனிலேயே இறங்க வேண்டியவன்" என்றார்.

வேறு வழியின்றிக் கைலாசம் 'சரி' என்று கூறிவிட்டுப் பணத்தை எடுத்துக் கொடுத்துப் பரிசோதகரிடமிருந்து ரசீது பெற்றுக் கொண்டார். அதன் பின்பு ரகுபதியின் தகப்பனாரின் பெயர், உத்தியோகம், சென்னையில் அவர் தங்கியிருக்கும் விலாசம் எல்லாவற்றையும் கேட்டுத் தெரிந்து கொண்டார் கைலாசம். இவ்வளவையும் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருந்த மங்களம், "இதுவும் ஒரு தண்டச் செலவு. இந்தக்காலத்தில் யாரையும் நம்புவதற்கில்லை. அந்தக் கிழவர் டிக்கட்டு வாங்கினாரோ இல்லையோ, யார் கண்டது! எழும்பூரில் இந்தப் பையனைக் கூட்டிக் கொண்டு போவதற்கு அவருடைய மாப்பிள்ளை வருவார் என்று கிழவர் சொன்னதைக் கூட என்னால் நம்ப முடியவில்லை" என்று கைலாசத்தின் காதுக்கு மட்டும் கேட்கும்படி முணுமுணுத்து விட்டு மறுபடியும் நித்திரையில் ஆழ்ந்தாள்.

மங்களம் கடைசியாகக் கூறிய வார்த்தைகள் உண்மையிலேயே பலித்து விட்டன. அடுத்த நாள் காலை ரயில் சென்னையை அடைந்ததும் ரகுபதியை அழைத்துக் கொண்டு போவதற்கு அங்கே ஒருவரும் வரவில்லை. கைலாசத்தின் குடும்பமும் ரகுபதியும் வெகுநேரம் வரை பிளாட்பாரத்தில் காத்துக் கொண்டிருந்தும் பயனில்லை.

ரகுபதியின் கண்கள் கலங்கின. கைலாசம் அவனைச் சமாதானப்படுத்தி, "நீ பயப்படாதே! நான் உன்னை உன்னுடைய வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய் விட்டு விடுகிறேன்" என்றார்.

பிறகு ஒரு டாக்ஸியை அமர்த்தி அதில் தம் குடும்பத்தை ஏற்றிச் சிந்தாதிரிப் பேட்டையிலிருந்த தம் ஜாகைக்கு அனுப்பினார். அப்புறம் ரகுபதியும் அவரும் பஸ்ஸில் ஏறி மாம்பலத்தை அடைந்தனர். ரகுபதி தெரிவித்த விலாசத்தை ஒருவாறாகக் கண்டுபிடித்து விட்டார் கைலாசம். ரகுபதியை அவனுடைய தகப்பனாரிடம் சேர்த்து விட்டு அவனுக்காகத் தாம் செலவழித்த பணத்தை வாங்கிக் கொண்டு வந்துவிடலாமென்று நினைத்துக் கொண்டிருந்த கைலாசத்திற்கு அங்கே ஒரு ஆச்சரியம் காத்திருந்தது! கைலாசம் அந்த வீட்டிற்குள் நுழைந்ததும் அவரை எதிர்கொண்டு அழைத்தார் ரகுநாதன். ரகுநாதனைக் கண்டவுடன் ரகுபதி கைலாசத்திடமிருந்து ஒரே எட்டில் தாவி ரகுநாதனை "தாத்தா!" என்று அழைத்த வண்ணம் அவர் கால்களைக் கட்டிக் கொண்டான்.

**ப**ல வருஷங்களுக்கு முன் ரகுநாதனும் கைலாசமும் ஒரே கல்லூரியில் பல வருஷங்கள் சேர்ந்து படித்துப் பழகிய அத்தியந்த நண்பர்கள். படிப்பு முடிந்து இருவரும் உத்தியோகத்தில் அமர்ந்ததும் அவர்களுக்குள் இருந்த தொடர்பு விட்டுப் போயிருந்தது. பழைய சிநேகிதனைப் பார்த்ததும் கைலாசம் ரகுநாதனின் கைகளைப் பற்றிய வண்ணம், "ரகுநாதா, உன்னைப் பார்த்து யுகக் கணக்காக ஆகிவிட்டது. ஆமாம், இப்போது எங்கே இருக்கிறாய்! என்ன செய்து கொண்டிருக்கிறாய்!" என்று கேட்டார்.

"நான் ரங்கூனில் வேலையாயிருக்கிறேன். என்னுடைய பையனுக்கும் அங்கேதான் உத்தியோகம். அவன் இரண்டு மாத லீவில் இங்கே வந்திருந்தான். இது அவனுடைய மாமா வீடு. இந்த வாரம் திரும்பிப் போகவேண்டியவன். ஆபீஸிலிருந்து அவசரமாக வரச்சொல்லி அவனுக்குக் கடிதம் வரவே போனவாரமே ரங்கூனுக்குப் போய் விட்டான். நான் ரங்கூனிலிருந்து இரண்டு நாளைக்கு முன்புதான் வந்தேன். இங்கே அநேகமாக ஒரு மாதத்திற்கு மேல் தங்குவேன். அதிருக்கட்டும், என் பேரன் ரகுபதியை நீ எப்படி மதுரையிலிருந்து அழைத்து வந்தாய்!" என்று கேட்டார் ரகுநாதன்.

'மதுரைக்கு ஒரு காரியமாகப் போயிருந்தேன். திரும்பி வரும்போது நான் இருந்த வண்டியில் ரகுபதியின் தாத்தா அவனை ஏற்றி அனுப்பி விட்டு என்னிடம் எழும்பூரில் உன்னுடைய பையன் வந்து இவனை அழைத்துக்கொண்டு போவான் என்று தெரிவித்திருந்தார். எழும்பூரிலிருந்து ரகுபதியைக் கூட்டிக் கொண்டு போக ஒருவரும் வரவில்லை. ரகுபதி ரங்கூனில் பிறந்து வளர்ந்ததாகவும் இந்த ஊருக்குப் புதியவன் என்றும் என்னிடம் ஏற்கெனவே கூறியிருந்ததால் நானே இவனைக் கூட்டிக் கொண்டு வந்து விட்டேன். ஒரு விதத்தில் அதுவும் நல்லதாகப் போயிற்று.



இல்லாவிட்டால் நான் உன்னை எங்கே பார்த்திருக்க முடியும்!" என்றார் கைலாசம்.

"அதிருக்கட்டும், கைலாசம்! உன்னைப்பற்றிய தகவல்கள் ஒன்றையுமே சொல்லவில்லையே!" என்றார் ரகுநாதன்.

இந்தச் சமயத்தில் சுவரிலிருந்த கடிகாரத்தில் மணி ஒன்பது அடிக்கவே, கைலாசம் 'ரகுநாதா, நான் ஒன்பதரை மணிக்கு ஆபீஸில் இருக்க வேண்டும். நான் சிந்தாதிரிப் பேட்டையில்தான் குடி இருக்கிறேன். சௌகரியப்பட்டபோது ஒரு நாள் அந்தப் பக்கம் வா' என்று கூறித் தம்முடைய விலாசத்தை ஒரு சீட்டில் எழுதிக் கொடுத்து விட்டு வெளியேறினார் கைலாசம்.

* * *

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை. அன்று பொழுது விடிந்த வுடனேயே ரகுநாதன் கைலாசத்தைத் தேடிக்கொண்டு அவருடைய வீட்டிற்கு வந்து விட்டார். கைலாசத்தைப் பார்த்ததும் ரகுநாதன், "என்ன கைலாசம், என்னுடைய பேரன் ரகுபதிக்கு நீ டிக்கட்டு வாங்கிக் கொடுத்தாயாமே! இதை நீ என்னிடம் தெரிவிக்கவேயில்லையே! நீ போய்க் கொஞ்ச நேரம் கழித்துத் தான் அவன் என்னிடம் சொன்னான். அதோடு கூட நேற்று ராத்திரி என் சம்பந்தி ரகுபதிக்கு வாங்கிய டிக்கட்டு தம்மிடம் தங்கி விட்டதால் ரகுபதி வந்து சேர்ந்தானா என்று கேட்டுத் தந்தி வேறு அடித்திருக்கிறார். ரகுபதி வந்து சேர்ந்த விவரத்திற்குப் பதில் தந்தி கொடுத்து விட்டு அப்படியே உன்னையும் பார்த்து விட்டுப் போகலாமென்று கிளம்பி வந்தேன்" என்றார். "ஆமாம். மதுரைக்கு உன் ஆபீஸ் விஷயமாகவா போயிருந்தாய்!" என்று தொடர்ந்து கேட்டார் ரகுநாதன்.

"என் கடைசிப் பெண் கௌசல்யாவின் கல்யாண விஷயமாகப் போயிருந்தேன்" என்றார் கைலாசம்.

"போன காரியம் என்ன ஆயிற்று! ஏதாவது திருப்திகரமாக முடிந்ததா!"

"அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்! மூன்று வருஷ காலமாக வரனுக்காக நான் அலையாத இடமில்லை. கடைசியாகப் போன மாதம் பங்களூரிலிருக்கும் ஒரு வரனைப் பற்றிய தகவல் வந்தது. அவன் ஜாதகமும் கிடைத்துப் பொருத்தமும் சரியாக இருந்தது. பையனுக்குத் தாயார் தகப்பனார் இருவரும் உயிரோடில்லை. மதுரையிலிருக்கும் அவனுடைய அத்தையும் அத்திம்பேரும் தான் அவனை எடுத்து வளர்த்தார்களாம். பையன் அவர்கள்தான் பெண்ணைப் பார்த்துச் சம்மதம் தெரிவிக்க வேண்டுமென்று விரும்பினான். அதற்காகப் பெண்ணை அழைத்துக் கொண்டு நானும் என் அகத்துக்காரியும் மதுரைக்குப் போயிருந்தோம். போன இடத்தில் ஒரு எதிர்பாராத தடங்கல் ஏற்பட்டது. பையனுடைய அத்திம்பேரைப் பார்த்துப் பேசிய போது அவர் பையனுடைய ஒன்றுவிட்ட மாமா, பையனுடைய கல்யாணத்தை அவசரப்பட்டுத் தீர்மானித்து விட வேண்டாமென்று கடிதம் எழுதியிருப்பதாகத் தெரிவித்தார். இப்படி ஒரு மகானுபாவர் இந்தக் கல்யாணத்துக்குக் குறுக்கே நிற்கும் போது என்ன செய்வது!" என்றார் கைலாசம்.



"அப்பா, வாத்தியார் வந்து, 'வீட்டுக் கணக்கை இனிமேல் தப்பாகப் போட்டுக் கொடுக்கிறதில்லை' என்று 100 தடவை எழுதி வாங்கிக்கொண்டு வரச்சொன்னார்."

"பையனின் பெயர் சுவாமிநாதனோ!" என்று கேட்டார் ரகுநாதன்.

"ஆமாம்."

"அப்படியானால் அந்தப் பையன் என்னுடைய ஒன்றுவிட்ட மருமான்தான். இந்தச் சம்பந்தத்திற்கு ஒரு மகானுபாவர் குறுக்கே நிற்பதாகத் தெரிவித்தாயே. அது நான்தான்! பெண்ணினுடைய தகப்பனாரின் பெயர் விவரம், இதைப் பற்றி ஒன்றுமே எனக்குத் தெரிவிக்காமல் சுவாமிநாதனுக்குக் கல்யாணம் நிச்சயமாகவிருக்கிறது என்று மட்டும் எழுதியிருந்தார். அவன் அத்திம்பேர். பையனுக்கு ஆதரவுள்ள இடமாகப் பார்த்து விவாகம் செய்து வைக்க வேண்டுமென்று எண்ணி நான் ரங்கூனிலிருந்து வந்த பிறகு கல்யாணத்தைத் தீர்மானிக்கலாம் என்று எழுதினேன். உன்னுடைய பெண்ணை என் மருமானுக்குக் கல்யாணம் செய்து வைப்பது இனிமேல் என்னுடைய பொறுப்பு. நான் ரங்கூனுக்குத் திரும்பிப் போவதற்குள் கல்யாணத்தை நடத்தி வைத்து விட்டுப் போகிறேன். நானிங்கே மதுரைக்கு இது விஷயமாகத் தந்தியடித்து அவர்களை வரவழைக்கிறேன். நீ நிச்சயதார்த்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்!" என்றார் ரகுநாதன்.

இதைக் கேட்டதும் கைலாசம், "ரகுநாதா, நீதானப்பா, எனக்குப் பிரத்யட்ச தெய்வம்" என்றார் நன்றி ததும்பும் குரலில்.

ரகுநாதனின் பேச்சைக் கதவின் பின்புறத்தில் நின்றவண்ணம் கேட்டுக்கொண்டிருந்த மங்களத்தின் மனம் பூரிப்படைந்தது. கௌசல்யாவின் ஆனந்தமோ கரைபுரண்டு ஓடியது என்று சொல்லத் தேவையில்லை.

ரகுநாதன் சிற்றுண்டி சாப்பிட்டு விட்டுப் போகுமுன் கௌசல்யா அவரை நமஸ்கரித்தாள். அவளிடம் ஒரு தட்டில் வெற்றிலைப் பாக்கு கொண்டுவரச் சொல்லி அதில் ஒரு பத்து ரூபாய் நோட்டை வைத்துக் கொடுத்தார் ரகுநாதன்.

"இதெல்லாம் எதற்கு!" என்று கைலாசம் கேட்கவே, ரகுநாதன் அவருடைய காதோடு, "அட சரிதானப்பா, என்னுடைய பேரப் பையனுக்கு டிக்கட்டு வாங்கிக் கொடுப்பதற்காக நீ செலவழித்த பணத்தை உன்னிடம் திருப்பிக் கொடுப்பதற்கு வேறு என்ன வழி!" என்றார்.

ரகுநாதன் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டுச் சென்றபின் மங்களம் கைலாசத்தைப் பார்த்து, "பலனை எதிர்பார்க்காமல் செய்யும் எந்த உதவியும் வீண் போகாது என்று பெரியவர்கள் சொல்லுவது உண்மைதான்" என்றாள்.

"போகட்டும். இப்பொழுதாவது உனக்கு ஞானோதயம் வந்ததே!" என்றார் கைலாசம் கண்களைச் சிமிட்டிச் சிரித்துக் கொண்டே.




கேசவர்த்தினி அணு 14. ஷாம்பு அணு 14. தபால் செலவு வேறு : எங்கும் கிடைக்கும்

**தென் இந்திய ரஸாயனசாலை, கோயமுத்தூர்**

---

# பாதத்திலுள்ள புண்கள் நான்கு நாட்களிலேயே தகருகின்றன

## குத்து வலியும் நமைச்சலும்

## 7 நிமிஷங்களில் நிறுத்தப்படுகிறது

உங்கள் பாதங்கள் அதிகமாக வெறுப்படையுமாறு நமைச்சல் எடுக்கிறதா? வெடித்துக் காயமடைகின்றனவா? பாதங்களின் மேலும் விரல்களுக்கிடையிலும் கொப்பளித்து வெந்திருக்கிறதா? மேலும் கொப்புளங்களை உண்டாக்குகின்றனவா? ரத்தம் கசியும்படி பாதங்கள் புண்ணாகின்றனவா? இது ஏதோ கிருமி அல்லது தோலில் ஏற்படும் அழுகல் என்பதையும் இவற்றை ஒழித்தாலன்றி, உபாதைகளிலிருந்து விடுதலை பெற முடியாதென்பதையும் நீங்கள் உணர வேண்டும்.

### மூலகாரணத்தையே அழிக்கிறது

களிம்புகளோ தைலங்களோ அதிக குணத்தை அளிப்பதில்லை. உபாதைக்கு மூல காரணத்தை அவை கொல்லுவதோ வெல்லுவதோ கிடையாது. அதிருஷ்டவசமாக, டாக்டர்கள் சிபார்சு செய்யும் நிக்ஸோடேர்ம் (Nixoderm) இருக்கிறது. ஒரு பிரபல ஆங்கில சரும நிபுணர் தயாரித்தது; பிரபல மருந்து வியாபாரிகளால் இறக்குமதி செய்யப்படுவது. நிக்ஸோடேர்ம் (Nixoderm) உங்கள் பாத உபாதையைப் போக்கி விடும் என்பதற்கு உத்தரவாதம். அதன் மூன்று முக்கிய குணங்களாவன : (1) பாதங்களில் ஏற்படும் உபாதைக்கும், படைக்கு மூலகாரணமான கிருமிகளையும், அவற்றை வளர்க்கும் இதர புழுக்களையும் கொன்று விடுகிறது. (2) நமைச்சலை நிறுத்தி சருமத்தை ஏழே நிமிஷங்களில் குளிர்வுறச் செய்து ஸ்திதமளிக்கிறது. (3) சருமத்தைச் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் செய்கிறது.



### பரிசீலனைக்கு உத்தரவாதம்

இன்றே நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். இன்றிரவே போட்டுப் பார்த்தால் மறுநாள் காலை அற்புதமான தேர்ச்சி ஏற்படும். நாலு நாட்களில் பாதங்களில் ஏற்படும் உபாதைகளும் தீர்ந்து விடும். சருமம் சுத்தமாகவும், வழவழப்பாகவும் மிருதுவாகவும் ஆகும். தொடர்ந்து மூன்று நாட்கள் போட்டு பாதங்களில் ஏற்படும் நமைச்சல், கொப்புளங்கள் குணமடையா விட்டால் நிக்ஸோடேர்ம் (Nixoderm) மதிப்பை இழந்தாகிறது. இந்த உபத்திரவத்தின் போில் நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான். ஏழு நாட்களுக்கு நிக்ஸோடேர்ம் (Nixoderm) போட்டு பரீக்ஷை செய்து பாருங்கள். திருப்தி ஏற்படாவிட்டால், காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்தால் பணத்தைத் திரும்பப் பெறுவீர்கள். உங்கள் மருந்து வியாபாரியிடம் இன்றே நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்கு அளிக்கப்பட்டிருக்கும் உத்தரவாதமே உங்களைப் பாதுகாக்கும்.




"நெடுநாட்களாகமிருந்த முதுகு வலியினால் அவஸ்தைப்பட்டேன். சில நிமிஷங்களே உட்கார்ந்திருந்தபோதிலும், மறுபடி எழுந்து நிற்பதே மிகவும் சிரமமாயிருந்தது. "க்ருஷன்" உபயோகித்துக் குணம் அடையும் வரை, உபயோகித்த வேறு மருந்துகள் ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. எனது ஆரோக்யத்துக்கு ஏற்ற சாதனம் பெற்று இப்பொழுது நான் முற்றிலும் ஒரு புதிய ஸ்திரீயாகிவிட்டது பற்றி சந்தோஷமும் நன்றியறிதலுமுள்ளவளாயிருக்கிறேன்." —E. J. B.

இடைவிடாத முதுகு வலிக்கு ஒரு பொதுக் காரணம்—மூத்திரக் காய்கள் உடலிலுள்ள அசுத்தத்தை வெளியேற்றாமைதான். இவ்வாறு தொல்லையுறும்பொழுது "க்ருஷன்" உட்கொள்ளுங்கள். களைத்துப்போன மூத்திரக் காய்கள் அவைகளுக்கு வேண்டிய உதவியை அதனால் பெறுகின்றன. அவை கழிவு பதார்த்தங்களை ஒழுங்காகவும் இயற்கையாகவும் வெளியேற்றும்பொழுது வலியும் கூடவே வெளியேறி விடுகிறது. தினந்தோறும் உட்கொள்ளும் ஒரு சிறு அளவு க்ருஷன் உங்களது வலிகள் திரும்பவும் வராதென்பதை உறுதிப் படுத்துகின்றது.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்யத்துடனும் சந்தோஷத்துடனும் இருக்க உதவுகிறது

KSM: 3




## 1. அதிசய அழைப்பு

மனித வாழ்க்கையில் சிற்சில சமயம் பூகம்பம் போன்ற ஏதாவது சம்பவங்கள் நிகழ்ந்து விடுவது உண்டு. இன்று நான் எழுதத் தொடங்கி யிருக்கும் இந்தக் கதையும் நிஜமென்று என் வாழ்க்கையில் எதிர்பாராத விதமாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளில் ஒன்றுதான். இந்தக் கதைக்கும் எனக்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை. இந்தக் கதை சம்பந்தப்பட்ட மட்டில் நான் ஒரு பார்வையாளன் மட்டுமே. இருப்பினும் இன்று நிகழ்ந்தது போலவே என் மனத்திரையில் அந்தச் சம்பவம் சிறிதும் பசுமை மாறாமல் பதிந்திருக்கிறது.

நான் எவனோ ஒருவனைப் பற்றிக் கதை எழுதத் தொடங்கி யிருக்கிறேனே, அந்த மனிதனுக்குத் தூக்குத் தண்டனை கிடைத்து இன்றைக்கு ஏழு நாள் ஆகப்போகிறது. நான் வழக்கைப் பற்றி எவ்விதமான அத்தாட்சியும் கொடுக்க முடியாது; சாட்சியும் கொடுக்க முடியாது. ஆனால் செய்தித்தாள்களில் வெளியான சாட்சியங்களையும் வாக்குமூலங்களையும் இங்கே குறிப்பிட முடியும்; குறிப்பிடுவதாகவே உத்தேசித்திருக்கிறேன். இந்தச் சாட்சியங்களையும் வாக்குமூலங்களையும் கொண்டு நேயர்கள் நம்பித்தான் ஆகவேண்டும் என்று நான் வலுக் கட்டாயப்படுத்த விரும்பவில்லை. இந்தக் கதையை வெறுங் கட்டுக்கதை யென்று நினைப்பவர்களிடம் எனக்கு லவலேசங்கூட மனக் கிலேசம் கிடையாது. அதற்காக அவர்களை நான் ஒரு வார்த்தை தவறிக்கூடக் குறைகூற விரும்பவில்லை. ஆனால் இறப்பதற்கு ஒருநாள் முன்பு அந்த மனிதன் இந்தப் பொய்க் கதையைத் திரித்துக் கூறியிருப்பான் என்று எண்ணவும் என் மனம் இடங் கொடுக்கவில்லை. ஆகவே, நிஜமோ பொய்யோ, எதுவாயிருந்தாலும் இந்தக் கதையை எழுதியே தீருவது என்று தீர்மானித்து எழுதியும் முடித்து விட்டேன்.

'காலகேது' என்னும் பத்திரிகையில் வெளியான செய்தி பின்வருமாறு:—

"நேற்று ஒன்பதரை மணி சுமாருக்குப் பட்டப் பகலில் கல்கத்தாவில் உள்ள துர்க்கா சரண் பானர்ஜி சந்தில் ஒரு கசாப்புக் கடையிலே மிகப் பயங்கரமான செயல் நிகழ்ந்துள்ளது. கடைக்காரன் குலாம் காதிர் தினம்போல் மாமிசம் விற்றுக் கொண்டிருந்தான். எத்தனையோ வெள்ளையர்களும் முகம்மதியர்களும் இறைச்சி வாங்கிப் போவதற்காக அங்கே குழுமியிருந்தனர். அதே சமயம் முன்பின் அறிமுகமில்லாத ஒரு பரங்கியன் இறைச்சி வாங்குவதற்காக அங்கே வந்தான். அவனைப் பார்த்ததும் குலாம் காதிர் திடுக்கிட்டுக் கதறினான். அடுத்த நிமிஷம் ஆடு வெட்டும் அரிவாளை எடுத்துக் கொண்டு அவன்மீது பாய்ந்து விட்டான். பிறகு மூர்த்தண்யமாக முதுகு வயிறு என்று பாராமல் வெட்டிப் படுகாயப் படுத்தினான். ஒவ்வொரு வெட்டுக்கும் ஆக்ரோஷத்துடன், 'வாஸ்கோ டி காமா! ஏ, வாஸ்கோ டி காமா! இது என் மனைவிக்காக! இது என் குழந்தைக்காக! இது என் வயது முதிர்ந்த தந்தைக்காக!' என்று சொல்லிச் சொல்லி வெட்டினான்......

"போலீஸ் வந்து அவனைக் கைது செய்து கொண்டுபோயிற்று. அப்பொழுதும் அவன் அந்த மரித்த உடலின்மீது கத்தி பாய்ச்சுவதை நிறுத்தவில்லை. குலாம் காதிரின் மூளை புரண்டு போயிருக்



" எவ்வளவு கெட்டிச் சாயத் துணியாக இருந்தாலும் எங்கள் வீட்டுச் சலவைக்காரரிடம் போட்டால் வெளுத்துக் கொண்டு வந்து விடுவார்."

" அது ரொம்பத் தேவலையே! எங்கள் வீட்டுச் சலவைக்காரரிடம் துணியைப் போட வேண்டியதே இல்லை. அவரிடம் காட்டினாலே பயந்து வெளுத்துப் போய்விடும்."

---

குமோ என்று சந்தேகிக்கப்படுகிறது. ஏனெனில் இறந்த மனிதனுக்கும் அவனுக்கும் முன்பின் எவ்விதமான அறிமுகமும் கிடையாதாம். அதைத் தவிர, குலாம் காதிருக்கு மனைவியோ, குழந்தையோ, கிழத் தந்தையோ யாருமே இல்லையாம். கிட்டத்தட்டப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னால் அவன் மனைவியை இழந்து விட்டான் என்று நம்பகமான இடத்திலிருந்து செய்தி கிடைத்திருக்கிறது. தன் மனைவி இறந்த பின் அவன் மறுமணமே செய்து கொள்ள வில்லையாம்.

"இறந்தவன் கோவாவில் வசிப்பவன் என்றும், அவன் அடிக்கடி வியாபார நிமித்தமாகக் கல்கத்தாவுக்கு வந்து ஒரு ஹோட்டலில் தங்குவது உண்டு என்றும் அவன் பெயர் கிராவியல் டி ரோஜா என்றும் போலீஸ் ரிப்போர்ட்டின் மூலம் தெரிய வருகிறது. குலாம் காதிர் ரிமாண்டில் சிறை வைக்கப்பட்டிருக்கிறான். டி ரோஜாவின் உடல் சவப் பரிசோதனைக்காக அனுப்பப்பட்டிருக்கிறது என்றும் அந்த ரிப்போர்ட்டுக் கூறுகிறது."

குலாம் காதிரின் கடைக்கு அருகில்தான் என் வீடு இருக்கிறது. ஆகவேதான் நான் அந்த நிகழ்ச்சி விஷயத்தில் அதிக சிரத்தை எடுத்துக் கொள்ள முற்பட்டேன். இதுவும் அன்றி என் ஆவலைத் தூண்டிவிட்டதன் பெருமை ஒரு பெயரைச் சார்ந்ததாகும். அந்தப் பெயர் எதுவாயிருக்கக் கூடும் என்பதை யாருமே எளிதில் ஊகித்து விட முடியும். ஆம், வாஸ்கோ டி காமா என்னும் பெயர்தான் அது. குழந்தைப் பருவத்திலிருந்தே நான் சரித்திரப் பித்தனாக இருந்தேன். சரித்திரப் பிரசித்திபெற்ற வாஸ்கோ டி காமாவின் பெயரை ஒரு கசாப்புக் கடைக்காரன் சொல்லவே, எனக்கு அது ஏக வியப்பை அளித்தது. வாஸ்கோ டி காமாவின் பெயர் சரித்திரப் பிரசித்தி பெற்றதே ஒழியப் பொதுவாக அதிக வழக்கத்தில் உள்ளது இல்லையல்லவா! ஆகவே, இந்தச் சம்பவத்தின்பாலுள்ள ஈடுபாடு எனக்கு இன்னும் அதிகமாகி விட்டது. கடைசியில் 'இந்த டி ரோஜா என்பவன் யார்! கொலையாளி இவனை வாஸ்கோ டி காமா என்று அழைத்ததற்கு என்ன காரணமாயிருக்கலாம்!' என்பதையெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் என்னை உந்தித் தள்ளியது.

நியாய ஸ்தலத்தில் வழக்குச் சென்றதும் என் ஆவலை என்னால் அடக்க முடியவில்லை. மறுநாளே இந்த ரகசியத்தை அறிந்து கொள்ளும் பொருட்டு நியாயஸ்தலத்துக்குச் சென்றேன். நாற்புறமும் போலீஸ் கடுங்காவல் புரிந்து கொண்டிருந்தது. குற்றவாளியின் கையில் விலங்கைப் பூட்டிக் கூண்டில் கொண்டு வந்து நிறுத்தி யிருந்தார்கள். நான் உன்னிப்பாக அவனைக் கவனித்தேன். அவன் முகபாவத்திலே பைத்தியத்துக்கான அறிகுறி ஏதும் தென்படவில்லை. அச்சமோ ஆவலோ எதுவுமே அவனுள்ளத்தில் குடிகொண்டிருப்பதாகவும் தோன்றவில்லை. அப்பொழுது அவன் இருந்த நிலையைப் பார்க்கும்பொழுது, 'இரண்டு நாட்களுக்கு முன் இவனா இவ்வளவு குரூரமான கொலையைச் செய்திருப்பான்!' என்றுதான் எண்ணத் தோன்றியது. என்னைப் பார்த்ததும் அவன் கை தூக்கி எனக்கு வணக்கம் தெரிவித்தான். அதற்குப் பிறகு முதன் முதலாக டாக்டரின் வாக்கு மூலம் தொடங்கியது.

"சவத்தின் மீது ஐம்பத்தேழு காயங்கள் செய்யப்பட்டிருந்தன. எந்தக் காயத்தினால் அந்த மனிதன் இறந்தான் என்று சொல்வது கடினம். ஏனெனில் எல்லாக் காயங்களுமே உயிருக்கு ஆபத்து விளைவிக்கக் கூடியவையாகத்தான் இருந்தன!" என்றார் டாக்டர்.

டாக்டருக்கு அடுத்தபடியாக ஜார்ஜ் மாத்யூஸ் என்னும் ஆங்கிலோ இந்தியர் ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும் பொழுது, "நான் பத்து வருஷ காலமாக அநேகமாகத் தினந்தோறும் குலாம் காதிரின் கடையில்தான் மாமிசம் வாங்கி வருகிறேன். ஆனால் இம்மாதிரித் தன் நிலை மறந்து இவன் சிற்றமுற்றுச் செயலில் இறங்கியதை நான் இதுவரை பார்த்ததில்லை. இவன் எப்பொழுதுமே அடக்க மானவனாகவும், சாந்தமானவனாகவும் தான் இருந்து வந்தான்" என்று சொன்னார்.

கேள்வி :—இறந்த மனிதனைத் தாக்கும் பொழுது இவன் தன் சுபாவமான நிலைமையில் இருந்தானா!

பதில் :—இறந்தவன் கடைக்குள் நுழைவதற்கு முன்பு இவன் தன் சுபாவமான நிலைமையில் தான் இருந்தான். எங்களுடன் மிகவும் ஒழுங்காகவே தான் பேசினான். திடீரென்று டி ரோஜாவைப் பார்த்ததும்தான் இவன் வெறி பிடித்த மிருகமாக மாறி விட்டான்.

கேள்வி :—குற்றம் சாட்டப்பட்டுள்ள இவன் காலஞ் சென்றவனுக்கு அறிமுகம் ஆனவனா இல்லையா என்னும் விவரம் தங்களுக்குத் தெரியுமா!

பதில் —அறிமுகம் ஆனவன்தான். ஆனால் டி ரோஜா என்று சொல்வதற்குப் பதிலாக வாஸ்கோ டி காமா என்று சொன்னான்.

கேள்வி :—டி ரோஜா குத்தப்பட்ட பொழுதோ அதற்கு முன்போ ஏதாவது சொன்னானா!

பதில் :—இல்லை.

கேள்வி :—குற்றவாளி சாராயமோ அல்லது அதைப் போன்ற போதை தரும் பொருளோ

அருந்துவதுண்டா ! இது சம்பந்தமாக உங்களுக்கு ஏதாவது விசேஷமான விவரம் தெரியுமா !

பதில்:—நான் இவன் போதை தரும் பானம் அருந்திப் பார்த்ததில்லை. ஏன் ! இவனைப் போதை மயக்கத்திலும் கூடக் கண்டதில்லை.

கேள்வி :—குற்றவாளியின் முகத் தோற்றத்திலிருந்து, அவன் பழிக்குப் பழி தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன் டி ரோஜாவைக் கொலை செய்தான் என்று கூறும்படியான அறிகுறிகள் ஏதாவது தோன்றினவா !

பதில் :—ஆம். அப்படித் தான் தோன்றியது. அவன் பேச்சிலிருந்தும் முகபாவத்திலிருந்தும் முன்பு எப்பொழுதோ டி ரோஜா அவனுடைய மனைவி, குழந்தை குட்டிகள், தகப்பனார் ஆகியவர்களுக்குத் தீங்கு இழைத்திருக்க வேண்டும் என்று தான் எண்ணத் தோன்றியது.

ஜார்ஜ் மாத்யூஸின் சாட்சியத்துக்குப் பிறகு, இன்னும் அநேக சாட்சிகள் இதே போன்று வாக்கு மூலம் அளித்தனர். அதற்குப் பின்னர் போலீஸ் டிபுடி கமிஷனர் தமது சாட்சியத்தில், "கோவாவிலிருந்து டி ரோஜா ஒரு சாதாரணத் தொழிலாளி என்று செய்தி வந்திருக்கிறது. அவர் போர்த்துகீசியர், வயது நாற்பத்திரண்டு என்றும் தெரிகிறது. இந்தச் சம்பவத்துக்கு முன்னால் அவர் கோவாவை விட்டு வெளியே வந்ததே இல்லையாம். தம் வாழ்க்கையில் முதல் தடவையாக இப்பொழுதுதான் அவர் கல்கத்தா நகரத்துக்கே வந்திருக்கிறாராம்" என்றார்.

பிறகு, குற்றவாளியைப் பற்றிக் கூறும் பொழுது, "குற்றம் சாட்டப் பட்டவரின் வீட்டில் அவருக்குச் சொந்தமானவர்கள் என்று யாரும் கிடையாது. மனைவியோ குழந்தை குட்டிகளோ கூட இல்லை. அவருக்கு வயது நாற்பத்தேழு ஆகிறது. சென்ற முப்பது ஆண்டுகளாக அவர் கல்கத்தாவை விட்டு வெளியே எங்கும் சென்றதில்லை என்றும் நம்பகமான தகவல் கிடைத்திருக்கிறது. ஆகவே, அவருக்கும் டி ரோஜாவுக்கும் முன்பு எவ்விதமான தொடர்பும் இருந்திருக்க நியாயம் இல்லை. இருந்திருக்கவும் முடியாது என்று தோன்றுகிறது !" என்றார்.

இதுவரை குற்றவாளி பேசாமல் இருந்தான். இப்பொழுது அவன் திடீரென்று, "நான் வாஸ்கோ டி காமாவை எத்தனையோ தடவை பார்த்திருக்கிறேன் !" என்றான்.

"உனக்கு முன்பே டி ரோஜாவைத் தெரியுமா!" என்று கேட்டார் கமிஷனர்.

"டி ரோஜாவை நான் பார்த்ததில்லை. வாஸ்கோ டி காமாவைத்தான் எனக்குத் தெரியும். அதே வாஸ்கோ டி காமாதான் மாறு வேஷத்தில் என் கடையில் இறைச்சி வாங்குவதற்காக வந்திருந்தான்" என்றான் குற்றவாளி.

"வாஸ்கோ டி காமாவை நீ எங்கே பார்த்திருக்கிறாய் !" என்று கேட்டார் கமிஷனர்.



"முதல் தடவை கன்னிக்கோட்டைத் துறைமுகத்தில் பார்த்திருக்கிறேன். இரண்டாவது தடவை சமுத்திரத்தில்..." என்று சொல்ல ஆரம்பித்தவன் நிறுத்தி விட்டான். அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. தொண்டையை அடைத்துக்கொண்டு விட்டது போலத் தோன்றியது.

"உணர்ச்சி வெறியில் வீழ்ந்து குலாம் காதிர் டி ரோஜாவைக் கொன்று விட்டான்!" என்று கோர்ட்டார் அவர்கள் முடிவு கூறினார்கள்.

நியாய ஸ்தலத்திலிருந்து வெளியே வரும்பொழுது என் மூளையைப் பற்பல சிந்தனைகள் சூழ்ந்து முற்றுகை யிட்டு ஒரேயடியாகக் குழப்பத் தொடங்கி விட்டன.

'கன்னிக்கோட்டைத் துறைமுகம். சமுத்திரத்தில்......' என்றெல்லாம் குற்றவாளி சொன்னானே, இது என்னவாயிருக்கும்! அவன் ஏன் அப்படிச் சொல்ல வேண்டும்? அவன் உள்ளத்தின் ஆழத்திலே ஏதாவது ரகசியம் நிறைந்த கதை அமுங்கி மறைந்து கிடைக்கிறதோ! அவனைப் பார்த்தால் பித்தம் தலைக்கேறி மூளை பிறழ்ந்தவனாகவும் தோன்றவில்லையே!' என்று எண்ணியவாறே என் வீட்டை நோக்கி நடந்தேன்.

வழக்கு ஹைகோர்ட்டுக்குப் போயிற்று. "குலாம் காதிர் நல்ல திட ஆரோக்கியமுள்ளவன்தான். ஆனால் சுபாவத்தில் பொறுமையற்றவன். பைத்தியம் என்று சொல்வதற்கான அறிகுறி அவனிடம் எதுவுமே தென்படவில்லை" என்று டாக்டர்கள் அபிப்பிராயம் கொடுத்தனர்.

குலாம் காதிர் தன் வக்கீலைப் பொருட்படுத்தாமல், "நான் கொலை செய்தது உண்மைதான். இதில் ஒளிவு மறைவு இல்லை. இதற்காக எனக்கு எவ்விதமான வருத்தமோ துயரமோ கிடையாது. மறுபடியும் அவனை உயிருடன் பார்க்க நேர்ந்தால் கூட இதேமாதிரித்தான் கொலை செய்வேன்" என்று அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

ஆகவே, வேறு வழியின்றி ஹைகோர்ட்டு அவனுக்குக் கீழ்க்கோர்ட்டு அளித்த அதே தூக்குத் தண்டனையை ஊர்ஜிதம் செய்தது.

நான் ஆரம்பத்திலிருந்து கடைசி வரை அந்த வழக்கு சம்பந்தமான நியாயஸ்தலத்தின் நடவடிக்கைகளை உன்னிப்பாகக் கவனித்து வந்தேன். ஏன்? அந்த வழக்கு நடக்கும் தினங்களெல்லாம் நான் நியாயஸ்தலத்தில் ஆஜராகக்கூடத் தவறவில்லை. அன்று குலாம் காதிரின் வாழ்க்கை நாடகத்தின் சோக முடிவைக் கண்ட நான் ஒரு நீண்ட பெருமூச்சுடன் நியாயஸ்தலத்திலிருந்து வெளியே வந்தேன். ஆனால் ஏனோ தெரியவில்லை, என் மனம் கெட்டு விட்டது; இல்லாத வேதனையெல்லாம் பட்டது.

இந்த வழக்கில் நேர்மையான நியாயம் வழங்கப்படவில்லை என்று எனக்குப் பட்டது. அது மட்டுமல்ல; எங்கேயோ மிக மிக முக்கியமான சாட்சியமும் அத்தாட்சியும் விடுபட்டுப் போயிருக்க வேண்டும் என்றும் தோன்றியது.

அப்பொழுதுதான் போலீஸ்காரர்கள் புடைசூழக் குலாம் காதிர் வெளியே வந்தான். என்னைப் பார்த்ததும் அவன் ஜாடை காட்டி என்னை அருகில் அழைத்தான். "ஐயா! தாங்கள் என் வழக்கில் ஆரம்பம் தொட்டு அக்கறை செலுத்தி வருவதை நான் அறிவேன். ஆகவே, சிறையில் வந்து என்னை ஒரு தடவை சந்திக்குமாறு தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். எனவே, என் வேண்டுகோளை நிராகரிக்காமல் ஏற்றுக் கொள்வீர்களா?" என்று கேட்டான்.

"நல்லது. வருகிறேன்" என்று சொல்லி அந்த அதிசய அழைப்பை ஏற்றுக் கொண்டேன்.

விலங்கு மாட்டப்பட்டிருந்த தன் இருகைகளையும் குவித்து அவன் எனக்கு வணக்கம் தெரிவித்தான். பிறகு சிறைச்சாலையின் வண்டியில் ஏறிச் சிறைச்சாலையை நோக்கிச் சென்று விட்டான்.

அதற்குப் பிறகு பெருமுயற்சி எடுத்துக்கொண்டதன் பயனாக, சிறைச்சாலையில் அவனைப் பார்க்க எனக்கு அனுமதி அளிக்கப்பட்டது. சிறையில் சந்தித்தபின் அவன் என்னிடம் தன் கதையைச் சொன்னான். அது வருமாறு:—

"ஐயா! என் இந்தக் கதையை நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும்சரி, நான் பித்தன் அல்ல என்பதை மட்டும் தாங்கள் ஒப்புக்கொண்டாக வேண்டும். நான் என் வாழ்க்கையில் இறைச்சி விற்று ஜீவனோபாயம் நடத்தி வந்தவன். ஆகவே, கதை இட்டுக் கட்டும் கலை எனக்குத் தெரியாது. நான் சொல்லுவது அவ்வளவும் நூற்றுக்கு நூறு உண்மை. பதினாறு வருஷங்களுக்கு முன்பு என் மனைவி ஒரு பெண்ணைப் பிரசவித்து விட்டு இறந்தாள். அந்தப் பெண்ணும் இறந்துவிட்டது. இருவரும் எப்படி இறந்தார்கள் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அப்பொழுதே கண்களுக்குப் புலனாகாத, முன் பின் அறிமுக மில்லாத ஒரு எதிரி என் மனைவியையும் குழந்தையையும் கல் நெஞ்சத்துடன் கொன்றிருக்க வேண்டும் என்று மட்டும் ஏனோ எண்ணத் தோன்றியது. துயரம், கோபம், பழி வாங்க வேண்டும் என்ற மனப்பான்மை ஆகியவை ஒன்று சேர்ந்து என் உள்ளத்திலே கொதிப்பை ஏற்றி விட்டன. அது என் பிரமையாகவே இருக்கலாம். ஆயினும், முன்பின் தெரியாத அந்த எதிரியைப் பழிக்குப் பழி வாங்கியே தீரவேண்டும் என்று என் இருதயம் துடித்தது.

அந்த மனிதன் மட்டும் என் கடைக்கு வந்திராவிட்டால் நான் என் வாழ்நாட்களை வெறும் மனப் புழுக்கத்துடன் ஓட்டியிருந்தாலும் ஓட்டியிருப்பேன். மனிதன் ஆற்றில் மூழ்கும் பொழுது கடந்த கால வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் அவன் கண்களெதிரே ஒன்றன் பின் ஒன்றாக வரும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இந்த மனிதனைப் பார்த்ததும் என் உள்ளத்தில் அதே போன்ற உணர்ச்சியும் நிலையும் தான் ஏற்பட்டன. அந்த மனிதன்தான் என் மனைவி, என் குழந்தை, என் பெண் ஆகியவர்களைக் கொன்றவன் என்று எனக்குத் தோன்றியது. நீதிபதி அந்தக் கொலை வழக்குச் சம்பந்தமாக என் வாக்குமூலத்தை விரும்பினார். 'இந்தக் கொலையைப் பற்றி நீ சொல்ல விரும்புவதைச் சொல்!' என்றார். ஆனால் நான் என்னத்தைச் சொல்வது! எந்த வாக்குமூலத்தைக் கொடுப்பது! இப்பொழுது தங்களிடம் சொல்லப்போகும் விவரத்தை நான் வாக்குமூலமாகக் கொடுத்தே இருந்தாலும் அவர் புரிந்து கொண்டிருக்கிருப்பாரா!

எனினும் நான் என் கசாப்புக் கடைக்கார வாழ்க்கை வரலாற்றை ஒருவிதமாக முடித்துக் கொண்டு மிர்ஜா தாவூத்தின் கதையைச் சொல்லுகிறேன். நான்தான் மிர்ஜா தாவூத் என்பதை நீங்கள் மறந்து விடுங்கள். நான் வேறு யாரையோ பற்றிக் கதை சொல்வதாக நினைத்துக் கொண்டு கேளுங்கள். அப்பொழுதுதான் உங்களுக்கு விஷயம் விவரமாக விளங்கும்" என்றான். (தொடரும்)



# இனிக்கும் கரும்பு

தில்லைவாசி

அவன் அப்படியே சுவரில் சாய்ந்தவாறு திண்ணையில் நிமிர்ந்து உட்கார்ந்திருந்தான்.

அப்பொழுது அவள் வந்தாள். அவளுக்கு இருபது வயதிருக்கும். காலம் செய்திருந்த எழில் அவள் முக வசீகரத்தை எடுத்துக் காட்டியது. பருவகால அங்க அமைப்பும், அள்ளிச் செருகியிருந்த கருங் கூந்தலழகும், அவள் வனப்பை நன்கு எடுத்துக் காட்டின.

அவள் யார்? ஏன் அவனை நோக்கி வருகிறாள்?

அவன் திகைத்து, உட்கார்ந்திருந்தான்.

"மணி என்ன?"—அவள் கேட்டாள்.

அவன் உள்ளே எழுந்து போய், மணி பார்த்து வந்தான். "மணி பத்து" என்றான்.

அவள் சிரித்துக் கொண்டே போய் எதிர் வீட்டில் நுழைந்தாள். அவன் பார்த்துக் கொண்டிருந்தான்.

அன்று அவனுக்கு விடுமுறைநாள். அன்று மாலையிலும் அவன் தெருத் திண்ணையில் உட்கார்ந்திருந்தான்.

அப்பொழுதும் அவள் வந்தாள்.

"மணி என்ன?"

அவன் போகக் கிளம்பினான்.

"இரு."

அவன் நின்றான்.

"நீ யார் என்று சொல்லவில்லையே! உன் பெயர் என்ன?" என்று கேட்டான்.

"நேற்று, அந்த வீட்டுக்குக் குடி வந்திருக்கிறார்களே, அந்த வீட்டோடேயே இருக்கிறேன். என் பெயர் கண்ணம்மாள்."

எதிர் வீட்டை அவள் சுட்டிக் காட்டினாள். அவளைப்பற்றி அவன் அறிந்து கொண்டான்.

அவள் பத்து வயதில் தாயை இழந்திருந்தாள். அப்பொழுதிருந்தே அவள் அந்த வீட்டில் தங்கி அவர்களுக்கு உதவியாக இருந்து வருகிறாள். அவர்கள் போகுமிட மெல்லாம் கூடவே வருகிறாள். இப்பொழுது அவள் தகப்பனிருக்குமிடம் அவளுக்குத் தெரியாது. அவன் உயிருடனிருக்கிறான் என்பது மட்டும் நிச்சயம். உறவினர்கள் யாரும் அவளிடம் அக்கறை காட்டவில்லை.

கண்ணம்மாள் போய் விட்டாள்.

பழனியப்பன் சிந்தனை கண்ணம்மாளைப் பற்றியே திரும்பித் திரும்பி வட்டமிட்டது.

"ஆதரவற்ற பெண்" என்று அவன் வாய் முணு முணுத்தது.

இன்னதென்று சொல்ல இயலாத ஒரு அன்பு - பாசமென்று வேண்டு மானாலும் வைத்துக் கொள்ளலாம் - அவளிடம் அவனுக்கு உண்டாகியது. மாசு மறுவற்ற அவன் வெள்ளை உள்ளத்தில் திடீரென்று துளிர்த்தெழுந்த அதற்கு வேறு அர்த்தமில்லை - இருக்க முடியாது.

காலமென்னும் பனிமலையில், வருடமென்னும் பனிக் கட்டி கணக்குப் பிசகாமல் சிதறி

விழுந்து கரைந்தது. அப்படி நாற்பது பனிக்கட்டிகளை அவன் தன் வாழ்க்கையில் கரைத்திருந்தான். நாற்பது வருடங்கள் எப்படியோ ஓடி மறைந்து விட்டிருந்தன. இருந்தாலும் தோற்றத்தினால், அவன் இளமை மாறி விட்டதாக எண்ண முடியாது. ஜாதகக் கட்டை மறைத்து வைத்துவிட்டுக் கணக்கு வயதுதான் எடைபோட முடியும்.

அவன் மனைவியை இழந்து பத்து ஆண்டுகள் கூட இருக்கும். தாம்பத்திய வாழ்வு சொற்ப நாட்கள். இரண்டே இரண்டு ஆண்டுகள்தான். அதற்குள்ளாக அவனும் அவளும், இனிக்கும் இல்லற இன்பப் பாதையிலே, மனிதர் மதிக்கும் மன்மத புரத்தை நோக்கி உல்லாசப் பிரயாணம் செய்திருந்தனர். கடைசியில் எல்லாம் கனவாய்க் கலைந்தொழிந்தது. அவளும் ஒருநாள் மண்ணில் மறைந்து போனாள். அவள் ஞாபகமாக எந்தச் சிசுவையும் விட்டுப் போகவில்லை. அப்பொழுதுதான், தாய் தந்தையற்றுத் தனிவாழ்வு நடத்திய அவன், உறவினர்களையும் வெறுத்து ஒதுக்கி, பிறந்த மண்ணையும் மறந்து, தொலைதூரம் இங்கு வந்துவிட்டான். வாழ்க்கையில் ஒரு வெறுப்பு இன்பக் கனவு சிதைந்தபோது ஏற்பட்ட விரக்தி - அவன் மறுமணத்தை விரும்பவில்லை. அதைப்பற்றி அவன் சிந்தித்துப் பார்த்தது மில்லை.

அவன் ஒரு பள்ளி ஆசிரியன். பொழுது போக்கிற்கு நல்ல புத்தகங்கள், அவனைச் சமனமான வாழ்க்கைப் பாதையில் வாழச் செய்திருந்தன. இல்லற இன்பப் பாதையைப் பிரிந்து வந்து விட்டான். இனியும் அப்படியே இருந்துவிட வேண்டுமென்பதுதான் அவன் நினைப்பு.

பள்ளிச் சம்பளம் நூறு ரூபாய் அவனுக்குப் போதிய திருப்தியளித்தது. தனி வீடு. ஹோட்டல் சாப்பாடு. தனிமை வாழ்க்கையில் அவன் வாழ்ந்து கொண்டிருந்தான். கையிலும் கொஞ்சம் பணம் சேமித்து வைத்திருந்தான். யாரைப் பற்றியும் அவன் அதிகம் நினைத்துப் பார்த்ததில்லை. இன்றோ அவன் சிந்தனையைத் தட்டிவிடக் கண்ணம்மாள் எதிர்வீட்டில் வந்திருந்தாள். அவன் உள்ளத்தின் அடித்தளத்திலே அமுங்கி, அசை போட்டுக் கொண்டிருந்த பாச மென்னும் அன்பை, எழும்பி நடமாட விட்டு விட்டாள். அவன் மனம் அவள் ஆதரவற்ற நிலைகண்டு இரங்கியது.

கண்ணம்மாள் தினமும் அவனிடம் வந்தாள். ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக் கொண்டு. ஒன்றுமே இல்லாவிட்டாலும், "மணி என்ன?" என்ற காரணமிருந்தது. அவனிடம் அவள் நெருங்கிப் பழகினாள். அவனைக் காணும்போதெல்லாம் புன்முறுவல் பூத்தாள். பதிலுக்கு அவனுக்குச் சிரிக்கத் தோன்றவில்லை. அவன் உள் மனமோ அவள் எதிர்காலத்தை எண்ணி வருந்தும்.

இன்னும் நாளாக ஆக கண்ணம்மாள் அவனிடம் தன்னுடைய குறைகளைச் சொல்லிக் கொள்ள ஆரம்பித்து விட்டாள்.

"அவர்கள் என்னை வாயில் வராததைச் சொல்லித் திட்டுகிறார்கள். இல்லாத கொடுமையெல்லாம் பண்ணுகிறார்கள். வேலையோ அதிகம். சாப்பாடோ கொஞ்சம். எனக்கு இங்கிருக்கவே பிடிக்கவில்லை" என்பாள்.

அவன் அவளிடம் காட்டிய அன்பு, அவள் உள்ளத்தில் ஏதோ ஒரு நம்பிக்கையை வளரும்படி செய்திருந்தது. தன்னிடம் பிரியம் காட்டக் கூடியவர்கள் அவனைவிட உலகத்தில் வேறு யாருமிருக்க முடியாது என்ற எண்ணம் அவளுக்கு.

"இதோ பார், கண்ணம்மா! பழைய இடத்தை விட்டுப் போகக் கூடாது. அவர்களுக்குக் கோபம் வராதபடி நடந்து கொள்" என்று அவளைச் சமாதானப்படுத்தி அனுப்புவான். சிலசில சமயங்களில், நாலணா, எட்டணா காசு கொடுத்து, "பட்டினி கிடக்காதே. ஏதாவது வாங்கி வயிறு நிறையச் சாப்பிடு" என்று சொல்லுவான்.

* * *

பொங்கல் புதுநாள் நெருங்கிக் கொண்டிருந்தது. அவனுக்கோ அதைப்பற்றிக் கவலையில்லை. அவனுக்குரியவள் போனபின், எத்தனையோ பொங்கல் பண்டிகைகள் வந்து போயின. அவனைப் பொறுத்த வரையில் எந்தச் சிறப்புமின்றிதான்.

அன்று பொங்கல் நாளுக்கு முதல் நாள். அவனுக்கும் விடுமுறை நாள் எப்போதும் போல் அன்றும் அவன் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்தான்.

தெருவில் கண்ணம்மாள் வந்து கொண்டிருந்தாள். அவள் இடையில் பொங்கலுக்கு வேண்டிய புத்தம் புதிய பொருள்களடங்கிய கூடையை ஒரு கையினால் தாங்கி யிருந்தாள். மற்றொரு கையில் மூன்று செங்கரும்புகளைச்



விற்பவன்:—இந்தச் சீப்பு ரொம்பவும் உறுதியானது. நன்றாய் வளையும். கத்தியால் உடைத்தாலும் உடையாது. கல்லை வைத்து நொறுக்கினாலும் நொறுங்காது. பல்லால் கடித்தாலும்...
ஒருவர்:—அதெல்லாம் சரிதான் ஐயா! இந்தச் சீப்பு தலை வாரிக் கொள்ள உபயோகப் படுமா?

சோலை தழையத் தழையத் தாங்கி நடந்து வந்து கொண்டிருந்தாள். 'அவன் எதிரே வந்தபோது, ஒரு முறை திரும்பிப் பார்த்து, தன் மோகனப் பல் வரிசையைக் காட்டி, உள்ளே மறைந்து போனாள் அவள். முகத்திலோ, உணர்ச்சியிலோ எவ்வித மாறுதலும் இன்றி அவன் அமர்ந்திருந்தான்.

தாம்பத்திய வாழ்வில் அவன் அனுபவித்து, மகிழ்ந்து கொண்டாடிய இரு பொங்கற் பண்டிகைகள் சற்றே அவன் மனத்திரையில் விழுந்து மறைந்தன.

கண்ணம்மாளைப் போலவே அவளும், செங்கரும்பைக் கையில் தாங்கி வந்தது, நேற்று நடந்தது போலத்தான் தோன்றியது. அந்தப் பொங்கல் எவ்வளவு மகிழ்ச்சி நிரம்பி யிருந்தது! இன்று? அது சிதைந்த கனவு.

பொங்கல் திருநாள் போயிற்று, அவனிடம் எவ்வித மாறுதலையும் காட்டாமல்.

பிறர் தயவில், அண்டிப் பிழைத்து, வயிறு கழுவும், கண்ணம்மாவுக்கு மட்டும் இதனால் என்ன இன்பம் இருந்திருக்கப் போகிறது? அவளிடத்தில் அவனுக்கு மறுபடியும் இரக்கம் உண்டாயிற்று.

ஏனோ தெரியவில்லை. அவளைப் பார்த்த நாள் முதல், அவன் அவளை நேசித்தான். துன்பத்திலும் மலர்ச்சியுடன் சிரிக்கும் அந்த முகத்தைக் காண விழைந்தான். அவள் ஒரு நாள் வராவிட்டாலும், அவன் மனம் அவளுக்காக ஏங்கும். அவன் அவளிடம் கொண்ட நேசத்தில் மாசில்லை. காட்டிய அன்பில் குற்றமில்லை. எந்தத் தப்பபிப்பிராயத்துக்கும் அதில் இடமில்லை. தன் வாழ்க்கையில் ஏற்பட்ட ஏதோ ஒரு குறையை அவள் பூர்த்தி செய்து விட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது. அது இன்னதென்றே அவனுக்குத் தெரியாது!

கண்ணம்மாள் அவனிடம் வைத்த அன்போ வேறுவிதமாக யிருந்தது. 'அவள் பட்டிக் காட்டுப் பெண். காதல் என்றால் என்ன என்பது அவளுக்குத் தெரியாததுதான். இருந்தாலும் அதன் விளைவை நாளுக்கு நாள் அவள் உணர்ந்திருந்தாள். அது அவள் உள்ளத்தில் செய்த கிளர்ச்சியை அவள் அறியாமலில்லை. பருவகால வளர்ச்சி அவளிடம் ஏங்க, ஏங்க அவளுக்கு ஒரு துணை—இல்லை—ஆதரவு வேண்டும்போல் அவள் உணர்ந்தாள். இந்த உலகில் நல்ல பண்போடு உலவ, அந்தத் துணை அவசியம் வேண்டியது தான் என்ற முடிவுக்கே அவள் வந்திருந்தாள். பழனியப்பனிடம் அது நிச்சயம் கிடைக்கும் என்ற திடமான நம்பிக்கைகூட அவளுக்கு.

திக்கற்ற அவளை, அந்த நிலையில், வாழ் நாள் பூராவும், மாறாத அன்போடு வைத்து ஆதரிக்கக் கூடியவர்கள் பழனியப்பனைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது.

அவள் மனத்தில் உருவாகிய எண்ணங்கள் பலப்பல. அவளும் அவனையே நேசித்தாள். இதுவரையில் அவளும் யார் யாரையோ பார்த்திருக்கிறாள். எத்தனையோ பேர்களிடம் பழகி யிருந்திருக்கிறாள், அப்பொழுதெல்லாம் தோன்றாத உணர்ச்சி-கிளர்ச்சி - இப்பொழுது அவளுள்ளே உருவாகி விட்டது!

பழனியப்பன் தனிமையை அவள் அறிந்திருந்தாள். சென்று போன அவன் வாழ்க்கைக் கதையும் அவளுக்குத் தெரிந்திருந்தது. அவனுக்கும் ஒரு துணை அவசியம்தான் என்பதை அவளே தீர்மானித்துக் கொண்டாள். ஒருவர் மற்றொருவருக்குத் துணையாகும் போது,—அந்த இன்பத்தை நினைக்கும்போது அவள் அப்படியே பூரித்துப் போய் விடுவாள்.

இன்பப் பாதை அவனுக்கு வழுக்கி விட்டது. அவன் விலகிக் கொண்டான். அவளோ அதை இன்னும் மிதித் தறியாள். நல்ல பாதுகாப்போடு அதை அடைய அவள் ஆவல் கொண்டதிலும் தப்பில்லை. அவள் ஆசை நிறைவேறுமா?

ஒரு பொங்கல் பண்டிகை போய், அடுத்த பொங்கல் பண்டிகை வர ஒன்றிரண்டு மாதங்கள் தானிருந்தன.

ஒருநாள் அவள் வழக்கம் போல் வந்தாள். "நான் இங்கிருக்கப் போவதில்லை. எங்காகிலும் போய்விடப் போகிறேன். அவர்கள் திட்டுவது சகிக்க முடியவில்லை. பிறரை அண்டிப் பிழைத்தது போதும்" என்று தீர்மானமாகச் சொன்னாள் பழனியப்பனிடம்.

அவள் அப்படிப் போய்விடுவதில் அவனுக்குப் பிரியமில்லை. எப்படி அவள் அவன் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டாள் என்பது அவனுக்கே புரியாமலிருந்தது.

"நீ இங்கேயே இருந்துவிட முடியாதா?"

"வழி இருக்கிறது. உங்கள் வீட்டு வேலைக் காரியாக இருந்து விடுகிறேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுங்கள். உங்கள் மனைவியாக இருந்து விடுவேன்."

ஏதோ ஒரு அசட்டுத் தைரியத்தில் அவள் சொல்லி விட்டாள். கூடவே சிரித்தும் விட்டாள். அவள் நிலைமை அவளை அந்த நிலைக்குக் கொண்டு வந்திருந்தது.

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இந்தப் பதிலை அவளிடம் அவன் எதிர்பார்க்கவில்லை. அவன் திகைத்தான். அவன் அவளிடம் இதுவரை காட்டிய அன்பு இப்படி ஒரு வழி கோலத்தானா? இதை அவன் கனவில் கூட நினைத்திருக்க மாட்டான்.

மனைவியை இழந்தபின், அவன் தனிமையிலேயே வாழ்ந்து பழகிப் போயிருந்தான். வேறு மனைவியைப் பற்றி அவன் நினைத்துப் பார்த்ததில்லை. சில சமயம் அவன் அந்தத் தனிமையை உணர்ந்ததுண்டு. ஆனாலும் அவன் மனைவிக்காக ஏங்கியதில்லை. இப்பொழுது அவனை ஒரு பருவகால மங்கை நேசிக்கிறாள் என்றால் அவனுக்கே வியப்பா யிருந்தது. அவன் வயதுதான் இதற்கு ஒரு தடை. அவன் மட்டும் ஒரு பத்து வயது குறைந்தவனாக இருந்தால்? அவள் ஏழைமையைப் பற்றியோ, குலம் கோத்திரத்தைப் பற்றியோ எண்ணி யிருக்க மாட்டான். தயங்கி யிருக்க மாட்டான். இப்பொழுது மட்டும் என்ன வந்து விட்டது?

கண்ணம்மாவின் யோசனையை ஏற்றுக் கொள்ள அவனுக்குச் சம்மத மில்லைதான். அவன் அவளை நேசித்த விதம் ஒருபுறம் இருக்கட்டும். உலகத்தின் வசை மொழியைப் பற்றியும் அவனுக்குக் கவலையில்லை. இது தகுதியான மணம் தானா? நாற்பதாவது வயதைச் சற்றே தாண்டியிருந்த அவன், இன்னும் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்துவிடப் போகிறான். இதை அவனால் நிச்சயிக்க முடியாது. ஒரு கால், வேறு விதமாக அவன் முடிவு ஆகிவிட்டால், அப்பொழுது அவளுக்கு ஆதரவு யார்?

அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

"முடியாது" என்று ஒரே வார்த்தையினால், அவள் ஆசைக் கயிற்றை அறுத்தெறியவும் அவன் விரும்பவில்லை.

"நீ போ, கண்ணம்மா. யோசித்து முடிவு தெரிவிக்கிறேன். அதுவரைக்கும் நீ எங்கும் போக வேண்டாம்."

இது அவளுக்கு ஆறுதலாக இருந்தது. கூட ஒரு தெம்பும் ஏற்பட்டது.

மறுநாள் இரவு. ஒன்பது அல்லது பத்து மணியிருக்கும். இரவின் நீண்ட அமைதியிலே அவன் உட்கார்ந்திருந்தான். அவனுள்ளே பலப்பல எண்ணங்கள் தோன்றித் தோன்றி மாய்ந்தன. கண்ணம்மாளைப் பற்றிய சிந்தனைகள்தாம் அவனை அழுத்தி அமுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தன. அப்பொழுது அவனும் அவளைக் கைவிட்டால், அவள் எதிர்காலம் எப்படியிருக்கும்? அது அமைதியாய், அவளுக்கு ஆறுதலாகப் போய் விடுவதாயிருந்தால் சரிதான். அன்றி அது பயங்கரமாக இருந்து விட்டால்?

இதற்கு மேல் அவனால் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

அப்பொழுது கண்ணம்மாள் வந்தாள். அவள் கூட வேறு ஒரு மனிதனும் வந்தான். வந்தவனே முதலில் பேசினான்.

"ஐயா உங்களைப் பற்றி கண்ணம்மாள் நிறைய சொன்னாள். நான் அவள் தகப்பன். நான் பாவி. என் மகளை வேண்டியே தவறான வழியில் சென்று விட்டேன். திருடன்தான் நான் ஜெயிலுக்குப் போய்ப் பல வருஷங்கள் ஆகி விட்டன. இப்போது திடீரென்று என் தண்டனை முடிவதற்குள்ளேயே என்னை அனுப்பி விட்டார்கள். அது நான் சிறையில் நடந்து கொண்ட விதத்தால்தான். என் மகள் முகத்தைப் பார்த்து வருஷக்கணக்காகி விட்டது. கண்ணம்மாளின் முகத்தைக் காண ஓடிவந்தேன். என்னைப் பற்றிக் கவலையில்லை. என் மகளைப் பற்றித்தான் கவலைப்படுகிறேன். என் மகளுக்கு ஒரு வழி தேடி விட்டால், என் கவலை விட்டது. நீங்கள்தான் கண்ணம்மாளைக் காப்பாற்றவேணும். கொஞ்சம் கண் திறந்து பாருங்கள். இனியும் குழந்தையைத் தனியாக விட்டுவைக்கக் கூடாது."

கைதி அழுதான். அழுது கொண்டே நின்றான். கண்ணம்மாளும் கூட அழுதாள்.

அங்கே பரிதாபம் நிறைந்த காட்சி.

பழனியப்பன் உள்ளம் இளகியது. கண்ணம்மாள், அவள் தந்தை, இவர்களின் கோலத்தைக் கண்டு அவன் மனம் இளகியது.

அவன் கைதியை உட்காரச் சொன்னான். கைதி உட்கார்ந்து கொண்டான். அவன் கண்ணீர் மட்டும் நிற்கவில்லை.

"நீங்கள் சொல்லுவது எல்லாம் சரிதான். உங்கள் பெண்ணுக்கு நான் சரியான கணவன்தானா? என்னைப் பாருங்கள். என் வயதைப் பாருங்கள். எல்லாவற்றையும் கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். என்னால் உங்கள் மகளின் வாழ்க்கை பாழாகிவிடக் கூடாது. ஆனென்றால் அப்படியில்லையே! இதையும் கொஞ்சம் கவனியுங்கள்."

பழனியப்பன் தத்துவம் பேசினான்.

"நீங்கள் சொல்வது எல்லாம் எனக்குப் புரிகிறது, ஐயா! என் மகளுக்கும் இருபது வயது ஆகிவிட்டது. உங்களைப் பார்த்தால் முப்பது வயதுதான் மதிக்கலாம். கண்ணம்மாளுக்கு ஒரு ஆதரவு கிடைத்தால் எனக்குப் போதுமானது. வேறு யாரும் இந்தத் திருடன் மகளைக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதிக்க மாட்டான். நீங்கள் ஒன்றுக்கும் யோசிக்க வேண்டாம். இதை ஒரு உதவியாக எண்ணுங்கள்"

கைதிக்கு ஒரு நம்பிக்கை ஏற்பட்டது.

பழனியப்பன் கண்ணம்மாள் நின்று கொண்டிருந்த பக்கம் நோக்கினான்.

"என் தந்தை சொல்வது எல்லாம் சரிதான். நீங்கள் கைவிட்டால், குளம் குட்டையில்தான் நான் ஆதரவு பெற வேண்டும்."

அவள் கண்கள் நீரைப் பெருக்கின.

அவன் தத்துவத்தை மறந்தான். பிறர்க்கு உதவும் பெரு நோக்கமே அவனுள் தலை தூக்கியது. மனிதனுக்கு மனிதன் உதவும் மனிதத் தன்மைதான் அவனிடம் அப்பொழுது நிறைந்து காணப்பட்டது.

"சரி, ஐயா, உங்களுக்குக் கவலை வேண்டாம். கண்ணம்மாவை நான் மணந்து கொள்கிறேன். பின்னால் இப்படியும் ஒரு உதவி ஆகவேண்டியிருந்திருக்கிறது."

பழனியப்பன் வாய் நிறையச் சிரித்தான். அவன் கண்களிலே ஒரு புத்தொளி பரந்து விரிந்து பிரகாசித்துக் கொண்டிருந்தது.

கைதியின் உள்ளம் குளிர்ந்தது. கண்ணம்மாளின் முகம் மலர்ந்தது.

அப்பொழுதுதான் கண்ணம்மாவின் பருவ வளர்ச்சியும், அழகும் முன்னைவிடச் சிறந்து விளங்குவது போல் அவனுக்குத் தோன்றியது. பழனியப்பன் புது மனிதன். அவன் அழகைக் கண்களால் பருகினான். அவனுள்ளே மூடிக்கிடந்த இன்பப் பாதையின் வாயிலைக் கண்ணம்மா திறந்துவிட்டாள்.

கைதி தன் மகளின் கையைப் பிடித்து, பழனியப்பன் கையில் கொடுத்தான்.

இனிக்கும் கரும்பாய், எழில் அமுதாய், இன்பத் தேனாய், கண்ணம்மா பழனியப்பனுக்குக் கிடைத்து விட்டாள். அவளுக்கும் அவன் இனிக்கும் கரும்புதானே!




"ஏம்மா, விளக்கு வச்ச எம்மா நேரம் ஆவுது வயசு வந்த பொண்ணு இப்படி வெளியில் தனியா சுத்தலாமா! இம்மா நேரம் எங்கேதான் போனே!" என்று மாடன் பரிவும் கண்டிப்பும் தொனிக்கும் குரலில் நேரங் கழித்து வந்த தன் மகள் செவந்தியைக் கேட்டான்.

அவள் பதிலுக்கு ஒரு புன்சிரிப்பைத் தன் இதழ்க் கடையில் ஓட விட்டு "எங்கேயும் இல்லே அப்பா! மாரண்ணன் கோயிலிலே ஏதோ நீ மிதியாம்! பார்க்கப் போயிருந்தேன்! நேர மாயிட்டுது! அதுக்குள்ளே நீங்க......!"

"கோவுக்கலிலே, அம்மா! என்ன இருந்தாலும் நீ நாளைக்கு ஒருத்தன் வீட்டுக்குப் போவனும் பாரு! கொஞ்சம் அடக்கம் ஒடுக்கமாத்தான் நடந்துக்கனும் என்றுதான் சொன்னேன்."

"என்னை வைச்சு சோறு போட முடியலேன்னு விட்டிடுங்க, அப்பா! நான் ஏன் இன்னொருத்தன் வீட்டுக்குப் போகனும்! நானே பிழைச்சுக் கிறேன்!" என்றாள்.

இதைச் சொன்னதும் அவள் உள்ளக்கிடக்கைச் சிரிப்பு உருவில் வெளி வந்தது. மாடனும் கூட உரக்கச் சிரித்தான்.

"இன்னொருத்தன் வீட்டுக்கு நீ போகவாணும்! அவனையும் இங்கேயே இட்டாந்துடேன்! ரெண்டு பேருமா இங்கேயே இருக்கலாம்!" என்றான் மாடன், பொக்க வாயை அகலத் திறந்து சிரித்துக்கொண்டே.

"போங்க, அப்பா! எப்பவுமே உங்களுக்குக் கேலிதான்!" என்று அந்த 'இன்னொருத்தன்' கற்பனை உருவத்தில் அவள் உள்ளம் புளகாங்கித மடைய ஆரம்பித்தது. களிப்பின் மிகுதியால் துள்ளிக் குதித்து ஓடும் கன்றைப்போல் அவளும் புது மலர்ச்சியுடன் துள்ளிக் குதித்து ஓடினாள்

வயது வந்தும் இன்னும் பச்சிளங் குழந்தை மாதிரி இருக்கும் செவந்தியை எண்ணிப் பெரு மூச்சு விட்டான் மாடன். 'காலா காலத்தில் அதற்குச் செய்ய வேண்டியதைச் செய்து விட்டால் எல்லாம் சரியாகிவிடும். தகுந்த பிள்ளை தான் கிடைக்கனும்' என்ற யோசனையில் ஆழ்ந்து விட்டான் கிழவன்.

மாடனுக்கு எழுபது வயதிருக்கும். உழைத்து, உழைத்து உருப்பெற்ற திட சரீரம். உண்மைக்கு உறைவிடமானவன். தலைபோனாலும் கூடச் சொன்ன சொல் தவற மாட்டான். ஒரு சமயம் சொந்த தங்கையின் கணவன் ஏதோ தாறுமாறாகப் பேசி விட்டான் என்பதற்காக மாடன், "இனிமே என் வீட்டுப் பக்கம் தலை காட்டாதே! உன் பெண்சாதியையும் கூட்டிக்கிட்டு நட! யாரானால் என்ன; மரியாதை கொடுத்தால்தான் மரியாதை!" என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டான். தங்கை கூட அப்புறம் அண்ணனிடம் கெஞ்சிப் பார்த்தாள். 'சொன்னது சொன்னதுதான்!' என்ற கண்டிப்பான பதிலே மாடன் வாயிலிருந்து வந்தது. தங்கையின் கண்ணீர் கூட அவன் உள்ளத்தை மாற்றவில்லை. அந்தச் சண்டையில் தன் பெண்சாதியையும் அழைத்துக் கொண்டு மலாயா போனவன்தான் மாடனுடைய தங்கை புருஷன். அப்புறம் மாடன் கடிதம் கூட எழுத வில்லை. வருஷங்கள் எத்தனையோ ஓடி விட்டன. மாடன் சொன்ன சொல்லைத் தவறவுமில்லை. இதனாலேயே மாடனுக்கு ஊரில் அலாதி மதிப்பும் செல்வாக்கும் இருந்தது. நாட்டாண்மைக்காரன் வீரன்கூட மாடன் சொல்கிறான் என்றால் அதற்குத் தனி மதிப்பு கொடுப்பான்.

மாடனின் ஒரே புதல்விதான் செவந்தியா. எவ்வளவோ பிள்ளைகளும் பெண்களும் பிறந்து இறந்து விட்டபடியால் செவந்தியாளைக் கண் இமைக்குள் வைத்து மூடி வளர்த்தான். அத்துடன் கூட அவள் பத்து வயதா யிருக்கும் பொழுதே அவள் தாயாரும் இறந்து விட்டாள். தாயற்ற பெண் என்பதற்காக வெகு செல்லமாக அவளை வளர்த்து வந்தான் மாடன்.

மஞ்சத்திலே வளரும் அரச குமாரிகள் மதமத வென்று எழில்மிகு வன சுந்தரிகளாக வளர்வது போல் செல்வத்தில் வளர்ந்த செவந்தியாவும் பருவப் பூங்காவில் கட்டு திட்டங்கள் இல்லாமல் இயற்கையுடன் இயற்கையாய் வளரும் காட்டு ரோஜாவைப்போல் எழில் மிகுந்து வளரலானாள். பதினைந்து வயது வரை எலும்பும் தோலுமாக இருக்கும் பெண்களைத்தான் பருவம் எப்படிக் கண்கவர் உருவமாக மாற்றி விடுகிறது! செவந்தியா பருவச் செழிப்பில் மிதக்கலானாள்.

மாடனுக்கு எப்படியாவது செவந்தியை நாட்டாண்மைக்காரன் மகன் கவுந்தனுக்குக் கொடுத்து விட வேண்டும் என்பது ஆசை. கொஞ்சம் பசையுள்ள கை; நாட்டாண்மைக்காரன் கை. ஊரில் நல்ல செல்வாக்கும் பெற்றிருந்தான். கவுந்தனும் நல்ல வாலிப முறுக்கில் பார்க்க அழகா யிருந்தான். களை பொருந்திய முகம்.

மாடன் இரவு முழுதும் இதே யோசனையில் கழித்தான். காலை பொழுது விடிந்ததும் ஏதோ தீர்மானத்துடன் நேராக நாட்டாண்மைக்காரன் வீட்டுக்குப் போனான்.

"என்ன மாமா, இம்மா காலையிலே புறப்பட்டீங்க. வாங்க, வாங்க! இப்படி உட்காருங்க"

என்று ஆசார உபசாரம் செய்து மாடனை வர வேற்றான் கவுந்தன்.

"ஒண்ணுமில்லே தம்பி, அப்பாரு இருக்காரு! ஒரு காரியமா உங்கப்பாரைப் பாத்துப் போக ணும்!" என்று உட்கார்ந்தபடியே பதிலளித்தான் கிழவன் மாடன்.

நாட்டாண்மைக்காரன் வீரனும் கவுந்தன் போய் அழைத்துவர வந்தான். மாடனைப் பார்த் ததும், "என்னங்க, நீங்க! இந்தத் தள்ளாத வயசுலே ஏன் இம்மா காலையிலே வந்தீங்க. ஒரு வார்த்தை யாருகிட்டேயாவது சொல்லி அனுப் பிச்சிருந்தா வரமாட்டேன்" என்று தன் வீடு தேடி வந்த மாடனுக்கு மரியாதைக் கொடுத்துப் பேசினான் வீரன்.

மாடன், ஊரைச் சுற்றி மறைமுகமாக ஒரு விஷயத்தை விளக்கும் இயல்புடையவன் அல்ல. ஆகையால் தான் வந்திருக்கும் நோக்கத்தை உட னேயே வெளிப்படையாகச் சொன்னான். இதைக் கேட்ட வீரன், "உண்மையாகவா சொல்றீங்க மாமா! உங்க சம்பந்தம் ஏற்படறதுன்னு சும் மாவா! கவுந்தனைக் கூடக் கேட்க வேண்டாம். தாராளமா கண்ணாலத்துக்கு ஏற்பாடு செய்யுங்க" என்று தன் இணக்கத்தைச் சந்தோஷத்துடன் தெரிவித்து விட்டான்.

இவ்வளவு இலகுவில் வீரன் தன் மகன் செவந்தி யாவைக் கவுந்தனுக்குக் கல்யாணம் செய்து கொள்ள ஒத்துக் கொள்வான் என்று மாடன் நினைக்கவே இல்லை. சேர்ந்தாற்போல் நான்கு வருஷங்களாக நாட்டாண்மைக்காரப் பதவி வகித்த மாடனையே இந்த வருஷமும் வகிக்கும்படி ஊரார் வேண்டிக் கொள்ள; மாடன்தான், தனக்கு வயதாய் விட்டது: இளைஞர்களுக்கும் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும் என்று தன்னை நாடி வந்த நாட்டாண்மைக்காரப் பதவியை வீரனுக்கு அளித்தான். அந்த நன்றியை வீரன் மறக்க முடியுமா! அதுமட்டு மல்ல; மாடன் மேல் வீரனுக்கு எப் பொழுதுமே நல்ல மதிப்பு உண்டு.

கல்யாணத்துக்கு வேண்டிய ஏற் பாடுகள் செய்வதில் முனைந்தான் மாடன். கல்யாணத் தேதி மட்டும் குறிப்பிட வில்லை. மாடனுக்கு உதவியாக கவுந்தனே வெளி வேலைகளை எல்லாம் கவனித்துக் கொண்டான். செவந்தியா பட்டுப் பூச்சி போல் உல்லாசமாகச் சுற்றித் திரிய ஆரம்பித்தாள்.

காலை மணி பத்திருக்கும். மாடன் தான் வெகு காலமாய்ச் சேமித்து வைத் திருந்த பணத்தை ஓலைப் பெட்டியி லிருந்து எடுத்து எண்ணிக் கொண்டிருந் தான். செவந்தியா வெளியில் கிளம்பப் போகும் தகப்பனுக்கு அவசரமாகக் கஞ்சி காய்ச்சிக் கொண்டிருந்தாள்.

"மாமா, மாமா!"

தட தட வென்று கதவு தட்டும் சத் தத்துடன் இந்தக் குரலும் பளிரென்று மாடன் காதில் விழுந்தது. கை வேலை யைப் போட்டு விட்டு போகாமல் மாடன், "ஏ, குட்டி! கதவை யாரோ தட்டுறாங்க. திற, பார்க்கலாம்!" என்று தன் மகள் செவந்தியாளைக் கூப்பிட்டான். கவுந் தன் தான் வந்து கதவைத் தட்டுவான் என்பது அவன் எண்ணம்.

இருபத்தைந்து வயது மதிக்கத் தகுந்த ஓர் இளைஞன் மாடன் எதிரில் வந்து நின் றான். கையில் பெட்டி, படுக்கை இவை கள் இருந்தன. ஆள் வாட்ட சாட்டமாய்ப் பார்க்க அழகாயிருந்தான். புதிதாக யாரோ வந்திருக் கிறார்கள் என்று செவந்தியா சட்டென்று உள்ளே போய் விட்டாள்.

"யார் தம்பி, நீ!" என்றான் மாடன் மேலே கிடந்த பணத்தை எல்லாம் மறைத்துக் கொண்டே.

"என்ன மாமா, என்னைத் தெரியலையா! நான் உங்க மருமவன் மருதன்" என்றான் தன் சாமான் களைக் கீழே வைத்துக் கொண்டே.

"என் மருமவனா! தங்கத்தின் பிள்ளையா நீ! உன் ஆயி, அப்பன் எல்லாம் எங்கே இருக்காங்க!" என்று கேட்டு ஒன்று புரியாமல் விழித்தான்.

"அது பெரிய கதை மாமா!" என்றவுடன் அந்த இளைஞனின் கண்களில் நீர் அரும்பிற்று. மேலும், "அப்பா பத்து வருஷத்துக்கு முன்னா லேயே செத்துப் போயிட்டாரு, உடனேயே அம்மா இங்கே வரத்தான் முயற்சி செய்தாங்க. ஆனால் அங்கே ஏற்பட்ட சண்டையால் வர முடியவில்லை. அதோட வெளியில் அப்பா கொடுத் திருந்த பணமும் கைக்குக் கிடைக்கவில்லை. அங்கே வந்த காலரா நோயில் அம்மாவும் இறந்துட் டாங்க. ஆனா அவுங்க இறக்கும்போது, 'தம்பி உன்னை அநாதையா விட்டுட்டுப் போறேன். என் தம்பி இந்தியாவிலே இருக்கான். ரொம்ப நல்ல வன். அந்த மண்ணிலே நான் சாகிறேன். நீயாவது அங்கே போய்ச் சேர்' என்று சொல்லி விட்டுச் செத்தாங்க. கிடைச்சதை எடுத்துக் கிட்டு வந்துட்டேன். மாமா, நான் அனாதை; என்னைக் கைவிட்டு விடாதீங்க. எங்க அப்பா செஞ்ச தப்புக்கு என்னைக் கைவிட்டுடாதீங்க" என்று தன் பூர்வ கதைகளையும் வெகு உருக்க மாகச் சொன்னான் மருதன்; மாடனின் மருமகன்.



"அட பாவமே, தங்கம்மாவும் இறந்து போய் விட்டாளா! அதே மூகசாடைதான் உனக்கும். ஹூம் சரி, நீ பயப்படாதே! நான் பார்த்துக்கிறேன்" என்று தன் மருமகன் மருதனை மாடன் தைரியப்படுத்தினான்.

"மாமா, நான் இனிமே உங்க பிள்ளை மாதிரி. இந்தாருங்க; இந்தப் பெட்டியிலே சரியா நாலாயிரம் ரூபா இருக்குது, எடுத்து வையுங்க" என்று பெட்டியிலிருந்து ஒரு சிறு பெட்டியை எடுத்து மாடனிடம் கொடுத்தான்.

"அதுக்கென்ன, அப்பா அவசரம். நீ போய்க் கால் முகம் கழுவிக்கிட்டுப் போய்ச் சாப்பிடு" என்று மருதனிடம் கூறிவிட்டு, "செவந்தி, இதோ உன் அத்தான் வந்திருக்கான், பாரு. அழைச்சுக்கிட்டுப் போய்ப் பலகாரம் கொடு" என்று தன் மகளுக்கும் உத்தரவிட்டான்.

இந்தச் சம்பாஷணையில் ஒன்றுகூட விடாமல் கேட்டு நின்று கொண்டிருந்த செவந்தியா மிகவும் அடக்கமாக வெளியே வந்தாள். தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்த அத்தானைப் பார்த்தாள். மருதனும் தன் மாமன் மகளைப் பார்த்தான். 'இவ்வளவு அழகான பெண் கூடவா தன் மாமனுக்கு இருக்கிறாள்' என்ற எண்ணம்தான் அவன் உள்ளத்தில் எழுந்தது. "வாங்க, அத்தான். கை, கால் கழுவிக் கிட்டுச் சாப்பிடலாம்" என்று மிக இனிய குரலில் அழைத்தாள்.

அவள் குரல் கொஞ்சம் வெட்கமும் லஜ்ஜையும் சேர்ந்து தொனித்தது. மருதனும் எழுந்து பின்னாலேயே சென்றான்.

"தம்பி, நீ சாப்பிட்டுவிட்டுக் கொஞ்சம் தூங்கு. இதோ கொஞ்சம் வெளியிலே போயிட்டு வந்துடறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றான் மாடன்.



பத்து நாட்கள் கடந்தன. மருதன் வெகு அக்கறையாக அந்த வீட்டின் வெளி வேலைகளை எல்லாம் கவனிக்க ஆரம்பித்தான்.

மருதனின் சரளமான சுபாவமும், வெள்ளை மனதும் பொறுப்பான தன்மையும் மாடனுக்கு அவன்பால் அன்பும் மரியாதையும் வளர உதவின.

இதைவிட செவந்தியாதான் மருதனிடம் உள்ள அத்தனை நற்பண்புகளையும் உணர்ந்து கொண்டவள்போல் வெகு சரளமாகப் பழக ஆரம்பித்தான். அத்தானிடம் பேசுவதிலேயே ஆனந்தம் கண்டது அவள் பேதை மனசு. அவனும் வெகு நாசுக்காக மலாயாவைப் பற்றியும், தான் கண்டவைகளையும் பற்றியும் கதை கதையாகச் சொல்வான். செவந்தியா திறந்த வாய் மூடாமல் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருப்பாள்.

மாடனின் மனசில் அடிக்கடி ஒரு எண்ணம் தலைதூக்கி எட்டி எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. அது தன்னுடைய மதிப்புக்கே கேடு தரும் என்று அவன் விலக்கினாலும் அந்தப் பாழும் மனசு அதையே திரும்பத் திரும்பக் கொண்டு வந்து நிறுத்தியது. 'தன் மருமவன் வந்திருக்கும் பொழுது தன் பெண்ணை அயலானுக்குக் கொடுத்துக் கல்யாணம் செய்யவேண்டியிருக்கிறதே' என்று வருந்தினான். 'மாடன் சொன்ன சொல் தவற மாட்டான்' என்ற மதிப்பைக் கெடுத்துக் கொள்ளவும் அவன் மனசு ஒப்பவில்லை. தாமரை இலைத் தண்ணீர்போல் திண்டாடினான் மாடன்.

மேலும் ஒரு வாரம் கடந்தது. நம் கவுந்தன் மாடன் வீட்டுக்கு வரத் தவறுகிறதில்லை. மருதனும் கவுந்தனிடம் சகஜமாகப் பேசிப் பழகி வந்தான். முதலில் சாதாரணமாக எண்ணிய கவுந்தன் 'ஒரு சமயம் போட்டியாய் விடுவானோ முறைப்பெண் என்று'தான் மருதனிடம் பேசுவதைக் கொஞ்சம் மட்டுப் படுத்திக் கொண்டான். செவந்தியாவின் கல்யாணத்தைப் பற்றியும் தெரிந்துகொண்ட மருதன் 'முறைப்பெண்ணை விட்டு விடுகிறோமே!' என்றுதான் முதலில் நினைத்தான். ஆனால் மாமாவின் மனசு கஷ்டப்படும் விதத்தில் அதில் புகுந்து தகராறு விளைவிக்க அவன் துணியவில்லை.

மருதன் சும்மா யிருந்தாலும் செவந்தியாவின் உள்ளத்தில் எப்படியோ அவன் உருவம் புகுந்து அவளைக் கவலையுறச் செய்தது. கவுந்தனையும் தன் அத்தானையும் செவந்தியா தன் மனத் தராசில் அடிக்கடி எடை போட்டுப் பார்த்தாள். 'ஐயோ, கண்ணைப் போன்ற அத்தான் இருக்கிறபோது அயலானைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி விதி சதி செய்துவிட்டதே' என்று ஏங்கினாள்.

'மருதன் தனக்குப் போட்டியாகி விடுவானோ' என்ற பயத்தால் கவுந்தன் தன் தகப்பனிடம் சொல்லிக் கல்யாண நாளை நிச்சயிக்கத் துடித்தான். வீரனும் இது விஷயமாக மாடனிடம் பேசினான். "ஆகட்டும்; நாள் வைத்து விடலாம்" என்று தன் மனசிலுள்ள போராட்டம் வெளித் தெரியாதபடி சால்ஜாப்பு சொல்லி வந்தான் மாடன். ஊரில் சில விஷமிகள், "கொஞ்சம் ரொக்கத்தோட மருமவப் பிள்ளை வந்ததும் கிழவன் மனசு மாறிடுச்சு!" என்று பேச ஆரம்பித்து விட்டார்கள்.

* * *

மலாயாவில் எவ்வளவோ பெண்களைப் பார்த்துப் பழகி யிருக்கிறான் மருதன். ஆனாலும் செவந்தியிடம் அவர்களிடம் எல்லாம் இல்லாத, பார்க்காத ஒரு தனிக் கவர்ச்சி இருப்பதாக எண்ணினான். முறைப்பெண் என்ற உரிமை அவன் ஆண்மை

யைக் கிளறியது. ஆனால் மாமாவின் முகம் அவளை அடங்க வைத்தது.

வீரன் தன் தகப்பனைக் கல்யாண விஷயமாக அடிக்கடி வந்து நெருக்குவதைக் கண்ட செவந்தியாவின் உள்ளம் விம்மிக் கண்ணீர் வடித்தது. "என்னைப் போலத்தான் அப்பாவுக்கும் எண்ணம் இருக்குமோ! அதனால்தான் ஒரு முடிவுக்கு வராமல் சால்ஜாப்பு சொல்கிறாரோ! சே, ஒருநாளும் இந்த மாதிரி எண்ணம் அப்பாவுக்கு இருக்காது; இருக்க முடியாது. அவர் உயிரே போனாலும் சொன்ன சொல்லைத் தட்டமாட்டாரே! அப்படியானால் என் கதி! கவுந்தனைக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது; அத்தானைத்தான் செய்து கொள்வேன் என்று சொன்னால்தான் என்ன!" இப்படிப் பல எண்ண அலைகள் அவள் உள்ளக் கடலில் குமிழியிட்டுக் கொந்தளித்தன; இதற்கு ஒரு வழி கண்டு பிடிக்க அவள் பேதை உள்ளம் திறமை யில்லாமல் அவளைத் திணற அடித்தது. 'இதை நேராக அத்தானிடமே சொன்னால்தான் என்ன!' என்ற நினைவுக் கீற்று அவள் உள்ளத்தில் 'சடா'ரென்று பளிச்சிட்டது. 'சரியான வழி' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

* * *

செவந்தியின் உள்ளத்தையும் மருதனின் உள்ளத்தையும் அநுபவசாலியான மாடனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. கொஞ்சம் பசையுள்ள மருமவப்பிள்ளை வந்ததும் அவன் மனசே மாறுவதில் என்ன வியப்பு என்று எண்ணிக் கொண்டான். அவன் மனசில் பெரும் போராட்டமே நடந்து கொண்டிருந்தது. அதன் ஆதிக்கத்தில் கிழவன் துடிதுடித்தான்.

"என்ன செவந்தி, இம்மா பொழுதாகி வரே!"

இந்தக் குரலைத் திடீரென்று கேட்டுத் திரும்பினாள் குடத்துடன் ஆற்றை நோக்கி வந்த செவந்தியா. அங்கு மருதன் துணி தோய்க்கும் கல்லில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்துவிட்டு டக்கென்று முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டாள் செவந்தியா.



'இதை நேராக அத்தானிடமே சொன்னால்தான் என்ன!' என்ற நினைவுக் கீற்று அவள் உள்ளத்தில் 'சடா'ரென்று பளிச்சிட்டது. 'சரியான வழி' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

* * *

செவந்தியின் உள்ளத்தையும் மருதனின் உள்ளத்தையும் அநுபவசாலியான மாடனால் உணர்ந்து கொள்ள முடிந்தது. கொஞ்சம் பசையுள்ள மருமவப்பிள்ளை வந்ததும் அவன் மனசே மாறுவதில் என்ன வியப்பு என்று எண்ணிக் கொண்டான். அவன் மனசில் பெரும் போராட்டமே நடந்து கொண்டிருந்தது. அதன் ஆதிக்கத்தில் கிழவன் துடிதுடித்தான்.

"என்ன செவந்தி, இம்மா பொழுதாகி வரே!"

இந்தக் குரலைத் திடீரென்று கேட்டுத் திரும்பினாள் குடத்துடன் ஆற்றை நோக்கி வந்த செவந்தியா. அங்கு மருதன் துணி தோய்க்கும் கல்லில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனைப் பார்த்துவிட்டு டக்கென்று முகத்தை மறுபுறம் திருப்பிக் கொண்டாள் செவந்தியா.

"சாந்துமில்லே, பொட்டுமில்லே. அந்திப் பொழுதிலே ஆத்தங்கரையிலே குந்திக்கிட்டிருக்க ஆம்புளையைப் பாரு, ஆம்புளை!"

கொஞ்சங்கூட நிற்காமல் விடுவிடென்று மணலில் ஆற்றின் நடுவுக்குப் போய்க் கொண்டிருந்தாள் செவந்தியா. வளவளவென்று பேசிக் கொண்டிருக்கும் செவந்தியா இப்படிச் சொன்னது மருதனுக்கு என்னவோ போல் இருந்தது.

"மனசோ சரியாயில்லே. ஆத்தங்கரைப் பக்கம் வரும்வோம்னு வந்தேன். பின்னே என்னதான் செய்யணுங்கறே அதைத்தான் சொல்லேன். என் மேலே என்ன கோவம்!" என்று எழுந்து அவள் பின்னால் போய்க் கொண்டே கேட்டான் மருதன்.

"எனக்கு ஏன் அயலார்மேலே கோவம்!" என்று சொல்லி மருதனைத் திரும்பிப் பார்த்தாள்.

"ஏன் எம்பின்னால் வந்திங்க! யாராவது பார்த்தா என்ன சொல்லுவாங்க! ஆத்தங்கரை கல்லுலியே குந்திக்கிட்டு காத்து வாங்குங்க போயி" என்றாள்.

அவன் முகத்தை ஏறிட்டுக்கூடப் பார்க்க விரும்பாதவளைப்போல ஊற்றுப்பட்டை போட்டு ஜலம் எடுப்பதில் முனைந்தாள்.

மருதன் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். அவனுடன் பேசிக் கொண்டிருப்பதிலேயே இன்பம் கண்ட செவந்தியா இப்படிப் பேசுவதைக் கண்டு கலங்கினான்.

"செவந்து, என்னை அடிச்சாலும் பொறுத்துக்கறேன். ஆனால் இப்படி மட்டும் பேசாதே. எம் மனம் நோவுது. நான் என்னத் தப்புத்தான் பண்ணிட்டேன்னு சொல்லேன். நான் ஒரு தப்பும் செய்ததா எம் புத்திக்குத் தோணலையே" என்று கெஞ்சும் குரலில் சொன்னான் மருதன்.

செவந்தி இந்த வார்த்தையைக் கேட்டதும் சட்டென்று எழுந்து கொண்டே, "எப்படித் தோணப் போவுது! உங்களுக்குக் கொஞ்சமாச்சியும் ரோசம் இருந்தால்தானே! முறைப் பெண்ணைப் பிறத்தியான் கட்டிக்கொள்றதைப் பார்த்துக்கிட்டிருக்கீங்களே, நீங்களும் ஒரு ஆம்புள்ளையா!" என்று தன் மனத்திலுள்ளதை ஆவேச உணர்ச்சியில் பொரிந்து தள்ளி விட்டாள்.

மருதனின் கண்களில் நீர் புரண்டு வந்தது. "செவந்து, எனக்கும் உணர்ச்சி இல்லேன்னு நினைச்சியா! முறைப் பெண் போறதேன்னு எம் மனசு என்ன பாடு படுகிறது, தெரியுமா! மாமா அரிச்சந்திரரு. அவருக்காகத்தான் பார்க்கிறேன் இல்லாட்டா உன்னை விடுவேனா செவந்து! எம் பொல்லாத அதிர்ஷ்ட[illegible]

போயி" என்றாள்.

அவன் முகத்தை ஏறிட்டுக்கூடப் பார்க்க விரும்பாதவளைப்போல ஊற்றுப்பட்டை போட்டு ஜலம் எடுப்பதில் முனைந்தாள்.

மருதன் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான். அவனுடன் பேசிக் கொண்டிருப்பதிலேயே இன்பம் கண்ட செவந்தியா இப்படிப் பேசுவதைக் கண்டு கலங்கினான்.

"செவந்து, என்னை அடிச்சாலும் பொறுத்துக்கறேன். ஆனால் இப்படி மட்டும் பேசாதே. எம் மனம் நோவுது. நான் என்னத் தப்புத்தான் பண்ணிட்டேன்னு சொல்லேன். நான் ஒரு தப்பும் செய்ததா எம் புத்திக்குத் தோணலையே" என்று கெஞ்சும் குரலில் சொன்னான் மருதன்.

செவந்தி இந்த வார்த்தையைக் கேட்டதும் சட்டென்று எழுந்து கொண்டே, "எப்படித் தோணப் போவுது! உங்களுக்குக் கொஞ்சமாச்சியும் ரோசம் இருந்தால்தானே! முறைப் பெண்ணைப் பிறத்தியான் கட்டிக்கொள்றதைப் பார்த்துக்கிட்டிருக்கீங்களே, நீங்களும் ஒரு ஆம்புள்ளையா!" என்று தன் மனத்திலுள்ளதை ஆவேச உணர்ச்சியில் பொரிந்து தள்ளி விட்டாள்.



"இவ்வளவு பெரிய பட்டணத்தில் சில்லறைக்குப் பஞ்சமாயிருக்கிறதே!"
"உங்களுக்கு எவ்வளவு ரூபாய்க்குச் சில்லறை தேவை?"
"ரூபாய் இருந்தால் சில்லறை எதற்கு?"

எல்லாம் உற்சாகமா செஞ்சீங்க! இப்போ நாள் குறிப்பிடலாம்னு கேட்டா, ஏன் தப்பு சால்சாப்பு சொல்றீங்க! விஷயம் ஒண்ணும் விளங்கலையே! உங்க மனசுலேதான் என்ன வைச்சுருக்கீங்க!" என்று வீரன் மாடனைக் கேட்டான். அவன் இன்னும் இரண்டு பெரியவர்களைப் பரிசம் போடக் கூடவே தயாராக அழைத்தும் வந்திருந்தான்.

"எம் மனசுலே என்ன தம்பி வச்சுருக்கேன்! இது ஆயிரம் காலத்துப் பயிர் இல்லே; சட்டுப் புட்டுனு செய்ய முடியுமா! எல்லாம் யோசிக்க வேண்டாமா!......" என்று விட்டு விட்டுப் பேச முடியாமல் திணறினான் மாடன்.

"இனிமே யோசிக்க என்ன இருக்கு! எல்லாம் யோசிச்சாச்சு. நாள் குறிப்பிட்டுக்கிட்டுப் போறதுன்னுதான் நான் வந்திருக்கேன். அடுத்த மாசம் பத்தாம் தேதி பொருத்தமா யிருக்குது" என்ற தீர்மானத்தையும் வெளியிட்டான் வீரன்.

பதில் சொல்ல முடியாமல் கலங்கினான் மாடன். அவனுக்கு வியர்த்துக் கொட்டியது.

"சரி, அடுத்த மாசம் பத்தாம் தேதியே கல்யாணத்தை நடத்தி விடலாம். மேலே என்ன செய்யணுமோ அதைச் செய்யுங்க. மாமா சொன்னா என்ன, நான் சொன்னா என்ன!"

சப்தம் வந்த திக்கை எல்லாரும் ஏக காலத்தில் திரும்பிப் பார்த்தார்கள். மருதன்தான் நின்று கொண்டிருந்தான். மாமாவின் பரிதாபமான நிலையைக் கண்டதும் அவன் ஆற்றங்கரைத் தீர்மானம் குலைந்து விட்டது.

"யார் சொன்னா என்ன தம்பி! நீ சொன்னாலும் சரிதான். அப்போ, மாமா, நாளைக்குக் கவுந்தனை விட்டுப் பத்திரிகை எல்லாம் அடிக்கச் சொல்லி விடுகிறேன், சரிதானே, மாமா!" என்று கேட்டபடி எழுந்தான் வீரன்.

"எல்லாம் மாரண்ணன் சோதனை" என்றான் மாடன் பொங்கி வரும் அழுகையையும் அதிருப்தியையும் அடக்கிக் கொண்டு.

* * *

சாவி கொடுக்கப்பட்ட கடிகாரம் ஒரே ரீதியில் சுற்றுவதைப் போல மாடன், மருதன், செவந்தியா மூவரும் அந்த வீட்டில் வளைய வந்தார்கள். மூவர் முகத்திலும் மகிழ்ச்சியின் சுவடே இல்லை. மூன்று உள்ளங்களிலும் மூன்றுவித உணர்ச்சிப் போராட்டங்கள் விசிறி அடித்தன. செவந்தியா மாடனோடோ மருதனோடோ வாய் திறந்து பேசவே இல்லை.

மாலை மணி மூன்றிருக்கும். வேர்க்க விறு விறுக்க ஓடிவந்தான் வீரன் கையில் ஒரு பொட்டலத்துடன்.

"மாமா, எல்லாம் நம்ப நினைக்கிறபடி என்ன நடக்குது இந்த உலகத்திலே! இதோ பாருங்க, கடிதாசை" என்று ஒரு கடிதத்தை நீட்டினான் மாடனிடம்.

மருதன் அதை வாங்கி உரக்கப் படித்தான்.

"அப்பாருக்குத் தண்டம் சமர்ப்பித்து கவுந்தன் எழுதியது. இந்தப் பொட்டலத்தில் இருக்கிற பத்திரிகையைப் படித்ததும் ஆச்சரியப்படுவீங்க. எம்மேலே கோபமும் அடைவீங்க. ஆனால் ஒரு பெண்ணைக் கொலைசெய்த பாவம் நம்மளை வந்தடையாம இருக்கத்தான் இதுமாதிரி செஞ்சேன். நல்ல வேளையாகப் போச்சு அன்றைக்குச் சாயந்திரம் ஆத்தங்கரைக்குப் போனது. அங்கே மருதனும் செவந்தியாவும் பேசிக்கிட்டிருந்ததை என் காதாலேயே கேட்டேன். செவந்தி என்னைக் கட்டிக்கிட்டா கழனியிலே விழுந்து செத்துடுவேன் என்று மருதனிடம் சொன்னாள். மாமாவின் மானத்தைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காக முறைப் பெண்ணையும் விட்டு விடத் தயாரான மருதனின் தியாக மனசுதான் என் தப்பை உணர்த்தியது. அப்பா, செவந்தியாவும் தன் அத்தானை மணக்கத்தான் துடிக்கிறாள். மாடன் மாமாவும் தன் மருமவப் பிள்ளைக்குக் கொடுக்கத்தான் ஆசைப்படுகிறார். இதற்கிடையில் நான் ஏன் அவர்கள் வாழ்க்கையில் தடையாக இருக்க வேண்டும். மருதன் செய்யத் துணிந்த தியாகத்தைவிட நான் செய்த இந்தத் தியாகம் ஒன்றும் மேலானதல்ல. அப்பா, கண்டிப்பாய்ச் சொல்கிறேன். நீங்களே முன்னின்று செவந்தியாவுக்கும் மருதனுக்கும் கல்யாணத்தை முடித்து வைத்து விடுங்கள், அப்புறம்தான் உங்கள் பிள்ளை, கவுந்தன், உங்கள் கண்ணில் விழிப்பான். அத்தானைக் கல்யாணம் செய்து கொள்ளாவிட்டால் செவந்தியாவுக்குக் கழனி புகலிடம் அளித்ததுபோல் நீங்கள் இது செய்ய மறுத்தால் எனக்கும் ஒரு கழனி புகலிடம் அளிக்கும். இப்படிக்கு தங்களுள்ள, கவுந்தன்."

இதைப் படித்து முடித்ததும் மருதன் கண்களில் நீர் பெருகியது. கிழவன் மாடன் தன் செவிகளையே நம்பவில்லை.

"அப்படி எழுதியிருக்கான் நம்ம பிள்ளையாண்டான். சரி, எது எது எப்படி நடக்க வேண்டுமோ அப்படித்தானே நடக்கணும், மாமா. பத்தாம் தேதி முகூர்த்தத்திலேயே மருதனுக்கும் செவந்தியாவுக்கும் கல்யாணம் செஞ்சுப்புடலாம். இதோ பத்திரிகை கட்டு இருக்கு. நானே ஊரிலே எல்லாருக்கும் கொடுத்துடறேன்" என்று கூறியபடி வீரன் கையில் கொஞ்சம் முகூர்த்தப் பத்திரிகை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

ஆனந்த மிகுதியில் ஒருவராலும் பேசவே முடியவில்லை. செவந்தி உற்சாக மிகுதியில் துள்ளிக் குதித்து ஓடிவந்தான். மாடன் 'சின்னஞ் சிறுசுகள் ஏதாவது பேசிக்கிடும்' என்று சந்தோஷத்துடன் வெளியில் வந்தான். செவந்தி வைத்த விழி வாங்காமல் மருதனைப் பார்த்தான். மருதனும் அவளை விழுங்கி விடுபவன் போல் பார்த்தான். அந்தப் பார்வைகள் தங்கள் வாழ்வுக்குப் புத்துயிர் அளித்த தியாகிக்கு அஞ்சலி புரிந்தன.

# பீரோ வந்தது!

குண்டுமணி

அன்று சனிக்கிழமை. மத்தியானம் இரண்டு மணிக்கே வீடு வந்து சேர்ந்தேன். வீட்டு வாசலில் அடி வைத்ததும் வராந்தாவில் இருந்த பிரும்மாண்டமான பீரோவைக் கண்டு ஒரு கணம் திகைத்துப் போனேன்.

அந்தப் பீரோ ஏழடி உயரமும் நான்கடி அகலமும் இருக்கும். உயர்ந்த தேக்கு மரத்தால் செய்யப்பட்டிருந்தது. கதவுகள் நல்ல கனமுள்ளதாக இருந்தன. யாரோ பெரிய மனிதர் வீட்டுப் பீரோ போல் இருந்தது. அந்தப் பீரோவைப் பார்க்கும் போது அது எத்தனையோ பேர்களுடைய வாழ்க்கையைப் பார்த்து அனுபவித்தது போல் தோற்றமளித்தது.

“என்ன ஐயம்! ஏது நம் வீட்டில் பெரிய பீரோ வைத்திருக்கிறது! யார் கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள்!” என்று வியப்புடன் கேட்டேன்.

“யாரோ தெரியாதவர்கள் கொண்டு வந்து போட்டு விடுவார்களா! நம் வீட்டுக்குத்தான் பீரோ வந்திருக்கிறது!” என்றாள் ஐயம் முகத்தில் மலர்ச்சி பொங்க.

“அப்படியா! இவ்வளவு பெரிய பீரோ நமக்கு எதற்கு! இதை வீட்டுக்குள்ளேயே கொண்டு போக முடியாதே!”

“நம் வீட்டில் சாமான்களெல்லாம் தாறுமாறுக் கிடப்பதைப் பார்த்து விட்டு, என் அண்ணா இந்தப் பீரோவை ஏலத்தில் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்திருக்கிறான்” என்றாள் ஐயம்.

“அது சரி! வாசலில் பீரோவைப் போட்டு வைக்கப் போகிறாயா! எல்லாரும் பார்த்துச் சிரிக்கப் போகிறார்கள்” என்றேன் நான்.



“வாசலில் யாராவது பீரோவை வைப்பார்களா! பீரோவை வீட்டுக்குள்ளே எடுத்து வைப்பதற்காக ஆட்களை அழைத்து வருவதற்குத்தான் அண்ணா போயிருக்கிறான்.”

இச் சமயத்தில் என் மச்சினன் நாலைந்து முரட்டு ஆட்களுடன் வந்து சேர்ந்தான். அவர்களில் ஒருவன் பீரோவைப் பார்த்து விட்டு, “என்ன ஐயா! இவ்வளவு பெரிய பீரோவை எப்படி உள்ளே தூக்கிக்கிட்டுப் போக முடியும்! பீரோவைப் பூட்டுப் பூட்டாகக் கழற்றினால்தான் உள்ளே கொண்டு போகலாம்” என்றான்.

“அட! நீ சும்மா இரு, ஐயா! நான் பீரோவை உள்ளே தூக்கிக் கொண்டு போய்க் காட்டுகிறேன்!” என்று கூறி முண்டாசைப் பலமாகக் கட்டத் தொடங்கினான் அவர்களோடு வந்திருந்த மீசைக்காரன்.

எல்லோரும் சேர்ந்து பீரோவைத் தூக்க முடியாமல் தூக்கி வீட்டினுள் எடுத்துச் செல்ல முயன்றனர். பீரோ உள்ளே செல்ல வில்லை. ஆனால் சுவரில் பலமாக இடித்ததால் வீட்டில் பல இடங்களில் காரை பெயர்ந்து விட்டது. ஆனால் அவர்கள் முயற்சி பலனளிக்க வில்லை.

“இந்தாங்கோ! பீரோவை இப்படியே வீட்டுக்குள்ளே கொண்டு போக முடியாது. பீரோவை மொட்டை மாடி வழியாகக் கயிற்றைக் கட்டித் தூக்கிப் பின், மாடியிலிருந்து புழக்கடைக்கு இறக்கி வீட்டுக்குள்ளே சுலபமாகக் கொண்டு வந்து விடலாம்” என்று ஐயம் யோசனை கூறினாள். அவள் யோசனையை அங்கிருந்த அனைவரும் அங்கீகரித்தனர். உடனே அவர்கள் அதைக் காரியத்தில் நிறைவேற்றத் தொடங்கினர்.

“சாமி! பெரிய தாம்புக் கயிறு வேணும். அப்பொழுதுதான் வேலை நடக்கும்!” என்றான் மீசைக்காரன். உடனே இரண்டு ரூபாய்க்குப் பெரிய தாம்புக் கயிறு வாங்கிக் கொண்டு வருவதற்கு ஆள் பறந்தது.

பீரோவைச் சுற்றிக் கயிற்றைக் கட்டி மேலே மொட்டை மாடியில் நின்று கொண்டு கயிற்றை மெதுவாக இழுத்துத் தூக்கத் தொடங்கினார்கள். ஆனால் கனத்த பீரோவாதலால் பாதி தூரம் சென்றதும் கயிறு பிரிந்து அறுந்து விட்டது. அவ்வளவுதான்; பீரோ தொபுகடீரென்று கீழே விழுந்து ஒன்றும் பாதியுமாக நொறுங்கிவிட்டது. பீரோவின் பரிதாப நிலை ஐயத்தின் கண்ணில் கண்ணீரை வரவழைத்து விட்டது.

“நல்லகாலம்! பீரோ மட்டும் கீழே விழுந்ததே! அந்தப் பீரோவோடு ஆட்களும் விழுந்திருந்தால் அவர்களை ஆஸ்பத்திரிக்கு அல்லவா தூக்கிச் சென்றிருக்க வேண்டும்!” என்றேன் பெருமூச்சு விட்டுக் கொண்டே.

“போதுமே! நல்ல பீரோ உடைந்து போனது உங்களுக்கு வருத்தமாயில்லை. நீங்கள் வாங்கியிருந்தால் இப்பொழுது துடியாய்த் துடித்திருப்பீர்கள். என் அண்ணா வாங்கிக் கொடுத்தது தானே ......” என்று அங்கலாய்த்தாள் ஐயம்.

“கவலைப்படாதீங்க, அம்மா! இப்போ கையோடு இதைப் பிளந்து போட்டு விடுகிறேன். ஒரு மாசத்துக்கு உங்களுக்கு விறகுக்கு ஆகும்!” என்று யோசனை கூறினான் மீசைக்காரன். அதைக் கேட்கச் சகிக்காமல் ஐயம் வீட்டிற்குள் தொங்கிய முகத்தோடு சென்று விட்டாள்.

மீசைக்காரன் பீரோவைப் பிளந்து போட்டு விட்டுத் தூக்குக் கூலியும், விறகுக் கூலியுமாகப் பத்து ரூபாய் என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு சென்று விட்டான். வீட்டுக்குச் சொந்தக்காரர் தமது வீட்டில் இடிந்துபோனதைச் சரிப்படுத்தி விட்டு என்னிடமிருந்து வாடகையோடு அதிகமாகப் பத்து ரூபாய் சேர்த்து வாங்கிக்கொண்டார்.

இப்பொழுதெல்லாம் ஐயம், “இந்தாங்கோ! இலவசமாக வந்த பீரோதானே! உடைந்து போனதால் நமக்கு ஒரு மாச விறகாகிவிட்டதல்லவா! லாபம்தானே!” என்று எனக்குச் சமாதானம் கூறி வருகிறாள். ஆனால் பீரோவுக்காக நான் செலவழித்த பணம் அவளுக்கு எங்கே தெரியப் போகிறது! அந்தப் பணத்துக்கு மூன்று மாதங்களுக்கல்லவா விறகு வாங்கிப் போடலாம்! அவளிடம் அதைக் கூறி வீண் மனக் கசப்பை வளர்த்துக் கொள்வானேன்!

நீண்ட காலத்திற்கு உழைக்கும் 'விஸ்டம்' டூத் ப்ரஷ் சிறிய சைஸில் குழந்தைகளுக்கும் இருக்கிறது!

There's a LONG-LASTING 'WISDOM' TOOTHBRUSH in a smaller size for children!

బిడ్డలకు ఇంకను చిన్నసైజులో చాలకాలం పనిచేసే "విస్డమ్" టూత్ బ్రష్ దొరకును.

எம்மொழியிலும் **விஸ்டம்** கேட்பது விவேகமாகும் — அது நீடித்து உழைக்கும், சரியான வடிவமுள்ள நைலன் டூத் ப்ரஷ்

***In any language, it's wise to ask for WISDOM — the long-lasting, correct-shape nylon toothbrush.***

ఏ భాషలోనైనా 'విజ్‌డమ్' అని అడగటం వివేకమైనది. చిరకా



# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 50. சந்தேக விளக்கம்

**கேள்வி :**—வயதானவர்களுக்கும், வயிறு பருத்தவர்களுக்கும் தூக்கத்தில் குறட்டை வருகிறது. இளம் வாலிபர்களில் சிலருக்கும் இம்மாதிரி உண்டாகின்றது. இரவில் இவர்களால் மற்றவர்களுக்கு ஏற்படும் சங்கடம் கொஞ்ச நஞ்சமல்ல. மற்றவர்களின் தூக்கம்கூட கெட்டு விடுகிறது. சில சமயம் கோபம் கோபமாக வரும். உலகை மறந்து ஆனந்தமாய்க் குறட்டை விட்டுக்கொண்டு தூங்குகிறவர்களைத் தூக்கத்தில் நாம் என்ன செய்ய முடியும்! இது எதனால் உண்டாகின்றது? இதைப் போக்குவதெப்படி!

**பதில் :**—இது ஒரு பெரிய பிரச்னையே. ஆனால் அவர்களாகப் பார்த்து நாம் குறட்டை விடுவதை நிறுத்திக் கொள்ள வேண்டும் என்று மனது வைத்துத் தங்களைச் சீர்திருத்திக் கொண்டால் தான் முடியும். மற்றவர்கள் என்னதான் முயன்றாலும் முடியாது. அவர்களுக்கு எடுத்துச் சொல்லலாம். அவ்வளவே தவிர, குறட்டையானது வேண்டுமென்றே விடுவதுமல்ல. அது தூக்கத்தில் தன்னையறியாமலேயே தன் உடலின் சீர்கேட்டைப் பறை சாற்றுகின்றது. குறட்டை பல காரணங்களால் உண்டாகும். வயதானவர்களுக்கு உடல் தளர்ச்சியால் உண்டாகும். குரல் வளையிலுள்ள சவ்வு அழன்று போவதாலும் உண்டாகும். பொதுவாய் வாயினால் சுவாசம் விடுவதால் குறட்டை உண்டாகிறது என்றாலும் வாயை மூடிக்கொண்டும் பலமாகக் குறட்டை விடும் பேர் வழிகளும் உண்டு. அவர்களுக்குக் குரலிலுள்ள சவ்வுகள் அழன்று இருப்பதே காரணமாகும். மற்றும் அமித ஆகாரத்தாலும் உண்டாகும்.

முதலில் வாயினால் சுவாசம் விடும் பழக்கத்தைக் கண்டிப்பாய் நிறுத்திவிட வேண்டும். சிலர் ஒரு சிறு காரியம் செய்தாலும் வாயினால் சுவாசிக்க ஆரம்பித்து விடுவார்கள். சிலர் வழக்கமாகவே வாயைத் திறந்து வைத்துக்கொண்டேயிருப்பார்கள். அவர்கள் வாயினால் சுவாசிப்பது அவர்களுக்கே தெரியாது. சிலருக்குப் பற்களின் அமைப்பினால் வாயை அவர்களாகப் பார்த்து மூடினாலன்றி வாய் திறந்தே இருக்கும். இவர்களெல்லாம் அடிக்கடி கவனம் வைத்து வாயை இறுக மூடியே இருக்க வேண்டும். நாடிசுத்தியைப் போன்ற மூச்சுப் பயிற்சிகள் இவர்களுக்குத் துணை செய்யும். ஒரு நாளைக்குப் பல தடவைகள் செய்து வந்தால் மூக்கிலேயே சுவாசம் போகும் வழக்கம் ஏற்பட்டுவிடும்.

இரண்டாவது, உணவில் ஒழுக்கம் வேண்டும். மனிதக் குடல்களுக்குத் தகுந்த ஆகாரங்கள் உண்ண வேண்டும். அதிலும் இரவில் வயிறு புடைக்க உண்ணக் கூடாது. படுக்குமுன் இரண்டு மூன்று மணி நேரத்திற்கு முன்னமே ஆகாரத்தை முடித்துக் கொண்டு விட வேண்டும்.

மூன்றாவதாக படுக்கும்போது தலையணை விஷயத்தில் கவனம் செலுத்த வேண்டும். தலையணை தலைக்கு மாத்திரம்தான் அணையாக இருக்க வேண்டுமேயல்லாது கழுத்திற்கோ, புஜத்திற்கோ அணையாக உபயோகிக்கக் கூடாது. சிலர் அப்படி தலையணையைக் கழுத்தணையாகவும், தோள் அணையாகவும் உபயோகப் படுத்துவதனால்தான், குறட்டை, டான்சில், அடினாயிட்ஸ், மூக்கில் சதை வளர்தல் முதலியவைகள் உண்டாகின்றன. தலையணைக்கு மேல், கழுத்தும் புஜமும் ஏறும்போது தூக்கத்தில் வாய் நம்மை அறியாமல் திறந்துவிடுகின்றது. அதனாலும், குறட்டை உண்டாகும். ஆகையால் தலைக்கு மட்டும் தலையணையை உபயோகித்து நன்கு வாயை மூடித் தூங்க வேண்டும். வாய்க்குப் பிளாஸ்திரித் துணி ஒட்டிக் கொண்டு படுத்துத் தூங்கலாம்.

**கேள்வி :**—மூலக் கொதிப்பு அடங்கி, தாதுபுஷ்டி உண்டாக என்னென்ன ஆசனம் செய்யவேண்டும்?

**பதில் :**—இதற்குப் புஜங்காசனம் மூன்று தடவை பஸ்சிமோத்தாசனம் மூன்று தடவை சர்வாங்காசனம் இருபது நிமிஷங்கள், மத்ஸ்யாசனம் ஐந்து நிமிஷங்கள், சிரசாசனம் பதினைந்து அல்லது இருபது நிமிஷங்கள், யோகமுத்திரா மூன்று தடவை, உட்டியாண, நௌளி, சாந்தியாசனம், நாடி சுத்தி, தியானம் முதலியவைகளைச் செய்ய வேண்டும். ஒரு தடவை என்பது ஆசன நிலைக்கு வந்த பின் ஐந்து அல்லது ஏழு எண்ணும் வரைக்கும் மட்டும் இருப்பதே. சிலர் நிமிஷக் கணக்கில் அவ்வாறே இருக்கின்றனர். அது தவறு. சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம் இவைகள்தான் அதிக நேரம் செய்யலாம். இவைகளும் முதன்முதலில் ஒரு நிமிஷமாக ஆரம்பித்து வாரம் தோறும் ஒவ்வொரு நிமிஷமாக அதிகமாக்கி வந்து, பின் வேண்டிய நேரம் செய்யவேண்டும். சிரசாசனம் முதல் வாரத்திலேயே ஆரம்பித்து விடக் கூடாது. இரண்டாவது மூன்றாவது வாரத்தில்தான் ஆரம்பிக்கலாம்.

மூல உபத்திரவத்துக்கு உணவுப் பத்தியம் மிக முக்கியமானது. மூல உபத்திரவ முள்ளவர்கள் காரத்தைச் சிறிதும் சேர்க்கக் கூடாது. பொதுவாய் முழுத் தவிட்டுடன் அரிசி, கஞ்சி வடிக்காத சாதம், நிறைய காய்கறி, கீரை வகைகள் சாப்பிட வேண்டும். வெண்ணெய், பால், தயிர், மோர், இளநீர், எலுமிச்சை பானகம் முதலியவை நல்லது. காப்பி, டீ, கோக்கோ, புகையிலை சம்பந்தமான எந்த வஸ்துவும் கூடாது. புளிக்குப் பதில் எலுமிச்சைப் பழம் சமையலுக்கு உபயோகித்



அஸ்வினி முத்ரா

கலாம். தாது புஷ்டிக்கு இவைகளுடன் கூட நிறைய பாலும், பழமும் பாதம் பருப்பும், கொட்டைப் பருப்பு வகைகளும் உபயோகிப்பதுடன் சற்றுக் கட்டுப்பாட்டுடனும் வாழ வேண்டும்.

**கேள்வி** :—சமீப "கல்வழி" •எனும் ஆரோக்கிய போதனைப் பத்திரிகையில் "கேள்வியும் பதிலும்" என்ற பகுதியில் கீழ்வருமாறு வந்திருந்தது.

"கேள்வி :—ஆசனப் பயிற்சியில் தீங்கேதும் விளையுமா! வேறு நல்ல பயிற்சிகள் ஏதுவும் இருக்கிறதா! எருமைப் பால் சாப்பிடுவதால் இருதயத்துக்குப் பாதகம் விளையுமா! எனக்கு ஆஸ்துமா உண்டு. ஆறுமாத காலமாய் நெஞ்சு வலி வருகிறது. இதற்கு என்ன செய்யலாம்! பதில் :—ஆசனப் பயிற்சிகளை இன்னமும் சாஸ்திர ரீதியில் ஆராயவில்லை. ஆதலால் அவைகளை விட்டுச் சாதாரண உடற் பயிற்சிகளைச் செய்வதையே நாம் சிபார்சு செய்கிறோம். எருமைப் பாலால் எவ்வித கெடுதலும் உண்டாகாது. டாக்டரிடம் சுவாசப்பையைச் சோதித்துக் கொள்ளவும்."

இதைப் படித்ததும் எனக்கு மனம் மிக வருந்தியது. இதைப் போலப் பல அன்பர்களின் மனமும் வருத்த மடைந்திருக்கும். ஆசனங்களின் மேல் ஒரு நம்பிக்கை பிறந்து, அவைகளைப் பல்லாயிரக் கணக்கான மக்கள் செய்து பலவித நன்மைகளை அடைந்துவரும் இந்த நாட்களில் மேற்படி செய்தி எவ்வளவு பொறுப்பற்ற முறையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது என்று நினைக்கும்போது மனம் வருந்தத்தான் செய்கிறது. இச் செய்தி ஆரம்ப சாதகர்களுக்கும் ஆசனம் செய்ய வேண்டுமென்ற ஆர்வம் உள்ளவர்களுக்கும் ஒரு பெரிய சந்தேகத்தைக் கிளப்பி அவர்களின் ஆர்வத்தைக் குறைத்து விடுமோ என்று அஞ்சுகின்றேன். இதற்குத் தக்க பதில் அளித்து என் போன்ற ஆசனப் பிரியர்களை ஊக்குவிக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். தாங்கள் "கல்கி"யில் எழுதி வரும் ஆசனப் பயிற்சிகளைச் செய்து நன்மை அடைந்து வரும் ஆயிரக்கணக்கான அதிர்ஷ்டசாலிகளில் நானும் ஒருவன் என்பதையும் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

**பதில்** :—அன்பரின் ஆர்வத்தை வரவேற்கிறேன். தாங்கள் கூறிய பத்திரிகை பல ஆண்டுகளாக மிகச் சிறந்த முறையில் நடக்கும் ஆரோக்கிய மதப் பிரசாரப் பத்திரிகையாகும். அதில் சில அறிவாளிகளின் கட்டுரைக ளெல்லாம் வருகின்றன. அதில் "கேள்வியும் பதிலும்" எனும் பகுதியை எழுதுபவர் ஒரு அமெரிக்க டாக்டர் என்று தெரிகிறது. அவருக்கு நம் நாட்டுக் கலையைப் பற்றியோ, யோகாசனங்களைப் பற்றியோ அவ்வளவாகத் தெரிந்திருக்காது என்றுதான் நினைக்கிறேன். நமது நாட்டிலேயே, ஸ்வாமி ஸ்ரீ குவலயானந்தா அவர்கள் மேல்நாட்டு சாஸ்திர ரீதியாய் "ஒவ்வொரு ஆசனத்தைச் செய்யும் போது உடலில் என்ன மாறுதல் ஏற்படுகின்றது. ஆசனங்களால் எப்படி நோய்களைத் தீர்க்கலாம். தீர்க்க முடியும்" என்பதை ஆராய்ச்சி செய்து "யோகமீமாம்சா" என்ற அவருடைய சொந்தப் பத்திரிகையில் வெளியிட்டுள்ளார். இதை இவர் அறியார் என்று இவர் பதிலிலிருந்து தெரிகிறது. அவருக்குத் தெரியாத, விஷயத்தைப் பற்றி இவ்வளவு முடிவான பதிலைக் கொடுத்திருக்கக் கூடாது. ஆனால் அப்பத்திரிகை இதழ் பலவற்றில் மயூராசனம், மத்ஸ்யேந்திராசனம் முதலிய ஆசனப் படங்களும் வெளி வந்திருக்கின்றன. பெயரைச் சொல்லாமலேயே ஒரு இதழில் "தலையும், புஜமும் கீழே இருக்க, உடலையும் காலையும் உயர்த்தி வைத்தல் ஆரோக்கியத்திற்கு நல்லது" என்று சிபார்சு செய்கிறது. இது சர்வாங்காசனம் தான் என்பது தெரியாது போலும்! பெயர் சொல்லா விட்டாலும் இப்படி செய்வது மட்டும் சாஸ்திர சம்பந்தமாய் ஆராய்ந்து முடிவு செய்தது என்று ஒப்புக் கொள்வதாகின்றது. எனவே மற்றவைகளைப் பற்றி ஆசன அன்பர்களுக்குச் சந்தேகம் வேண்டாம். தைரியமாகச் செய்யலாம். சுகாதாரத்திற்குப் புறம்பான வழக்கங்கள் இல்லாதவர்கள் எதற்கும் பயப்பட வேண்டிய அவசியமில்லை. ஆஸ்துமாவையும் மற்றும் பல நோய்களையும் ஆசனங்களால் போக்கிக்கொள்ள முடியும்.

**கேள்வி** :—ஒரு ஆசன நிபுணரின் பத்திரிகையில் தங்கள் ஆசனங்களில் நிறைய தவறு இருப்பதாயும் அதைப் பின்பற்ற வேண்டாம் என்று எழுதியிருக்கிறதே! என் போன்றவர்கள் வீணே சஞ்சலமடைய வேண்டியிருக்கிறது. தயவு செய்து பதில் எழுத வேணும்.

**பதில்** :—என் கட்டுரைகளில் சில விஞ்ஞானப் பகுதிகளில் அச்சுப் பிழைகள் நேர்ந்திருக்கலாம். அதனால் என் கட்டுரைகளைப் படித்து அதைப் பின்பற்ற வேண்டாம் என்று சொல்லுவது எனக்கே விளங்கவில்லை. ஆசனங்கள் என் சொந்த சொத்தல்ல. அது நமது முனிவர்களால் காலமெல்லாம் பாடுபட்டுக் கண்டுபிடித்த நம் தேசத்தின் பொதுச் சொத்து. ஆகையால் தாங்கள் ஆசனங்களைச் சந்தேகமின்றிப் பழகி வரலாம். ஒரு சிலரின் பொறுமைப் பிரசாரத்தால் ஆசனத்தை விட்டு விடாதீர்கள். ஆத்திரத்தில் சிலர் நிதான மிழப்பதும் உண்டு. ஒருவரைப் பற்றிக் குறை சொல்லுவது சுலபம். அதே வழியை நானும் பின்பற்ற விரும்பவில்லை.

**கேள்வி** :—சிரசாசனத்தில் அஸ்வினீ முத்திரா செய்யும் விதத்தை விளக்கியுள்ளீர்கள். அதைச் செய்யக் கால்களை எப்படி வைத்துக் கொள்வது என்பதைப் படத்துடன் விளக்கினால் என்போன்ற பல்லாயிரக் கணக்கான ஆசன நேயர்களுக்கு உபயோகமாயிருக்கும்.

**பதில்** :—தங்கள் வேண்டுகோளின்படி சிரசாசனத்தில் அஸ்வினீமுத்திரா செய்யும்போது இருக்க வேண்டிய நிலையைக் காட்டும் படம் இந்தக் கட்டுரையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. பார்த்துத் தெரிந்து கொள்ளவும். இந் நிலையிலிருந்து மலத்துவாரத்தை விரித்தும், சுருக்கியும் பன்முறை அதாவது ஒரிரு நிமிஷம் செய்தால் நல்ல இந்திரியக் கட்டு உண்டாகும். தாது பலம் பெறும். மலச் சிக்கல், மூலம், பவுத்திரம் விலகும். பிரம்மச்சரியத்தைக் காப்பாற்றும். ஆரோக்கியம் நன்றாக வளரும்.

மனத்தைப் பலப்பல விஷயங்களில் செலுத்தி வீண் பிரமை கொள்ளாமல் ஏகாக்ரசித்தமாக ஆசனங்களைப் பழகி வாருங்கள். அது இப்படி இது அப்படி என்று நினைத்து மனத்தைக் கெடுத்துக்கொள்ள வேண்டாம். விடாமுயற்சியுடன் ஆகார நியமங்களை ஒழுங்காகக் கடைப்பிடித்துத் தினம் தவறாமல் ஆசனங்களைப் பழகி வந்தால் தீராத நோய்கள் எல்லாம் தீர்ந்து விடும். இது அனுபவ பூர்வமான உண்மை.

ரொம்பவும் பலஹீனமான உடல் உடையவர்கள் வயிற்றில் ஆப்பரேஷன் செய்துகொண்டவர்கள் தயவுசெய்து யோகாசன நிபுணர்களைக் கலந்து ஆலோசித்து அவர்கள் யோசனைப்படி ஆசனங்களைப் பழகி வருவதுதான் நல்லது. தோன்றியபடி ஆசனங்களைப் பழகிவிட்டுக் கடைசியில் ஆசனங்களின் மீது பழியைப் போடாதீர்கள். (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Slaters Garden, Poonamallee High Road, Kilpauk. Madras

Regd. No. M. 4392
*Registered as a newspaper in Ceylon*